கழக வெளியீடு—கஉக.

உ

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் 1919

அருளிச்செய்த

# தேவாரப் பதிகங்கள்



கயப்பாக்கம்

சதாசிவ செட்டியார் பி. ஏ., அவர்களால்

பார்வையிடப்பெற்றன.



## திருமுறை

:: எ ::



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை.

விபவ - பங்குனி

# பொருளடக்கம்



---

## அற்புதப் படங்கள்





# பதிப்புரை

தமிழ் நாட்டின்கண் புத்தம் சமணம் முதலிய புறப்புறச் சமயங்கள் தோன்றிச் சைவசமய வளர்ச்சி வலிகுன்றிய ஞான்று, அப் புறச்சமயங்களை வேரறுக்கப் பண்டை யரு மறைக் கருத்துக்களோடு எழுந்தனவாய், ஓதவும் உன் னவும் உலப்பிலா மகிழ்வைத் தருவனவாய், எண்ணிய வற்றை எண்ணியாங்கு எய்துவிப்பனவாய், நூல் சார்ந் திப் பார்ப்பார்க்கு உண்மை நுவல்வனவாய், அன்போடு போற்றுவார் அருவினை யறுப்பனவாய், செந்தமிழ் மொழி வளம் நிரம்பியனவாய், பண்டை இசைவளங் காண்பார்க்கு இன்பநலம் இசைப்பனவாய், இயற்கை நலம் விரும்புவார்க்கு இனிமை பயப்பனவாய், அருஞ்செயல்களை அடியார்க்கு நிகழ்த்துவனவாய், தத்துவக் கருத்துக்கள் இலைமறை காய் போலப் பொதிந்துள்ளனவாய்,பண்டைத் தமிழியல் நூல் வழக் கிற்கேற்ப அகப்பொருள் புறப்பொரு ளமைதிகளையுடையன வாய், மக்கட்குப் பிறவி யழித்து வீடு அளிப்பனவாய்ப் புற விருள் நீக்கும் பன்னிரு பகலவர்போல மக்கள் அகவிருள் நீக்கும் பன்னிரு அருமணிச் சுடர்களாய் விளங்குவன தெய் வத் திருவருணூற் றொகுதியாய பன்னிரு திருமுறைகள். அமிழ் துறழுந் தமிழ்மொழியின்கண் சைவ சமயத்தார்க்கு அமையப் பெற்றிருப்பதுபோல, வேறெம்மொழியிலும் வேறெச்சமயத் தார்க்கும் இத்தகைய அருணூற்றொகுதி அமையாமையே இவற் றின் பெருமையை விளக்கும்.

சிவம்பழுத்த இத் தமிழ்மாண் சைவப் பெருநூற்றொகுதி, இதுகாறுஞ் செப்பமான பதிப்பைப் பெறாதிருந்தது தமிழ் மக்கட்கு ஒரு பெருங்குறையே. அதனை நீக்குவான் கருதி இறைவன் இன்னருள் கொண்டு பன்னிரு திருமுறைகளை ஆறு

பகுதிகளாகப் பதிக்க ஒழுங்குபடுத்தி முதற்கண் திருஞான சம்பந்தநாயனா ரருளிச்செய்த முதன் மூன்று திருமுறைகளாய தேவாரப் பதிகங்களையும், அவற்றை அடுத்துத் திருநாவுக்கரசு நாயனா ரருளிச்செய்த ச, ரு, சா-ம் திருமுறைகளாய தேவாரப் பதிகங்களையும் அழகொழுகப் பதித்து வெளியிட்டுப் பின் சுந்தர மூர்த்திநாயனா ரருளிச்செய்த இவ்வேழாந் திருமுறைத் தேவாரப் பதிகங்களை அவ்வாறே செப்பமாகப் பதித்து இப்போது வெளியிடலானோம்.

இதன்கண் பண் விளக்கமும், பண் வரிசையும், பதிவரிசையும், பதி அகர வரிசையும், பதிக முதற்குறிப்பு வரிசையும், பதிகவரலாற் றட்டவணையும், அருஞ்சொற்பொரு ளகரவரிசையும், பாட்டு முதற்குறிப் பகரவரிசையும், ஆளுடைய நம்பிகள் திருவுருவப்படமும், அவர் நிகழ்த்திய அருஞ்செயல்களைக் காட்டும் படங்களும் சேர்த்திருக்கின்றோம். சிறிது தமிழ் கற்றாரும் எளிதிற் கற்றுணருமாறு பாட்டுகள் சீர்பிரிக்கப் பெற்றிருக்கின்றன. பதிமுறைப் பதிப்பு விரும்புவார்க்கும் இஃதே பயன்படுமாறு இதன்கண் பதிவரிசையுஞ் சேர்க்கப்பெற்றிருப்பது கருதற்பாலது. ஆகவே இவ்விழுமிய அருணூற்றொகுதி ஒவ்வொரு நூல் நிலையத்திலும் ஒவ்வொரு இல்லின் இறை வழிபாட்டறையிலும் இன்றியமையாது இருக்கற்பாலது.

இனி இங்கொன்று குறிக்க நேர்ந்தமை எங்கட்குப் பெரிதும் ஆற்றாமையை விளைக்கின்றது. இத்தேவாரத் திருமுறைகட்குப் பதிப்பாசிரியராயிருந்து செப்பஞ் செய்து உதவி புரிந்து வந்த திருவாளர் கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் B. A. அவர்கள், இவ்வரும்பெருந் திருப்பணியைத் தொடங்கியது தொட்டே தொடர்பாக நோய்வாய்ப் பட்டிருந்து சென்ற மார்கழித் திங்களில் விண்ணுற்றார். இப்பெரியார் பன்னிரு திருமுறைகளையுஞ் செப்பஞ் செய்து பதிப்பித்து முழுதுங் காண்டற் கில்லாது இடையே மறைந்துவிட்டமை தமிழ்ச்சைவ மக்களெல்லாரானும் பெரிது மிரங்குதற்குரியது. மூவர் தேவாரங்கட்கும்

# பதிப்புரை

இவர்தம் தேவார ஆராய்ச்சியை ஆராய்ச்சியுரையாக எழுதிப் பெற்று இவ்வேழாந் திருமுறைப் பகுதியிற் சேர்க்க எண்ணி யிருந்தோம். இனி வேறு ஆசிரியரைக் கொண்டு அது செய்வதாயின் இப்பகுதி வெளிவருவதற்குக் காலந் தாழுமாதலின், அதனைத் தனி நூலாகப் பின்னர் வெளியிடவெண்ணி இப்போது நிறுத்திக்கொண்டோம். இப்பெரியாரது ஆருயிர் ஆண்டவன் திருவருளொளியில் விரவுவதாக!

திருநெல்வேலி,
விபவ, பங்குனி.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்தார்.



# பதிக அட்டவணை

## (ஏழாந் திருமுறை)

# பதிக அட்டவணை

## பதிக அட்டவணை





# திருப்பதிக வகரவரிசை முதலியன

## (ஏழாந்திருமுறை)

# திருப்பதிக அகரவரிசை முதலியன

# திருப்பதிக ளகரவரிசை முதலியன





## சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியருளிய

## பண் மொத்தம்

### ஏழாந்திருமுறை

| | பண். | பதிகம். |
|---|---|---|
| க | இந்தளம் | கஉ |
| உ | தக்கராகம் | ச |
| ங | நட்டராகம் | கச |
| ச | கொல்லி | எ |
| ரு | கொல்லிக்கௌவாணம் | கூ |
| சா | பழம்பஞ்சுரம் | எ |
| எ | தக்கேசி | கஎ |
| அ | காந்தாரம் | ரு |
| கூ | பியந்தைக் காந்தாரம் | க |
| ய | காந்தாரபஞ்சமம் | க |
| கக | நட்டபாடை | ரு |
| கஉ | புறநீர்மை | ங |
| கங | சீகாமரம் | ச |
| கச | குறிஞ்சி | ச |
| கரு | கௌசிகம் | க |
| கசா | செந்துருத்தி | க |
| கஎ | பஞ்சமம் | ரு |

ஆகப் பண் கஎ-க்குப் பதிகம் ௱.

இவற்றுள் பதிப்பதிகம் கூரு.

பொதுப்பதிகம் ரு.

ஆக ௱.

# பதிகவரலாறுகளின் அட்டவணை.

| எண் | பொருள் | பக்கம் |
| --- | --- | --- |
| க | அப்பர் எழெழுநூறு திருப்பதிகம் பாடினமையைச் சிறப்பித்தது ... | கசுசு |
| உ | அப்பர் சம்பந்தர் பாடல்களைச் சிறப்பித்தது ... | கஎக |
| ங | ஆரூரில் இறைவரைக்கைக்கிளையாற் பாடியது ... | அஎ |
| ச | ஆரூரில் வலக்கண் பெற்றது ... | உஙங |
| ரு | ஆலம் பொழிலில் இறைவன் கனவிலெழுந்தருளல் | சுய |
| சு | ஆவடுதுறையில் கண் மறைத்தமை கருதிக் கவன்று பாடியது ... | கஅக |
| எ | ஆறுவிலகியது ... | ககசு |
| அ | இறைவன் கூடலையாற்றூர்க்கு வழி காட்டியது ... | உகஉ |
| கூ | இறைவன் தடுத்தாட்கொண்டது ... | ங |
| ய | இறைவன் பந்தரமைத்துப்பொதி சோறருளியது ... | சுகூ |
| கக | உடம்பின் பிணி தீர்த்தது ... | ககூய |
| கஉ | உறையூர்ச் சோழரின் மணிமாலை யணிந்தமையைச் சிறப்பித்தது ... | சகூஉ |
| கங | ஊன்றுகோ லருளியது ... | உஉய |
| கச | ஏயர்கோன் கலிக்காமர் பகையைத் தீர்த்து அவரை நட்புக் கொண்டது ... | கஙச |
| கரு | ஒற்றியூரில் ஆரூரை நினைத்துப் பாடியது ... | கஉங |
| கசு | ஓணகாந்தன் றளியிற் பொன் பெற்றது ... | கஎ |
| கஎ | கச்சி யேகம்பத்தில் ஆரூரை நினைத்துப் பாடியது ... | உஎஎ |
| கஅ | கச்சி யேகம்பத்தில் இடக்கண் பெற்றது ... | கருரு |
| ககூ | கழுமலத்திற் கயிலைக்காட்சி யளித்தது ... | கசரு |
| உய | குண்டையூரில் நெல்லெடுக்க ஆள் பெற்றது ... | ருஉ |
| உக | கொடுங்கோளூரில் ஆரூரை நினைத்துப் பாடிப் புறப்பட்டது ... | கசஅ |
| உஉ | கோட்புலியாரைச் சிறப்பித்துச் சிங்கடிவனப்பகையாரை மகண்மை கொண்டது ... | சக |
| உங | கோலக்காவிற் காட்சிகண்டு சம்பந்தர் தாளம் பெற்றமையைச் சிறப்பித்தது ... | கருஅ |
| உச | சித்தவட மடத்தில் திருவடியூறு பெற்றது ... | கூய |
| உரு | சுழியலிற் கனவிலெழுந்தருளியது ... | உஎய |
| உசு | சூளுறவாற் கண்கள் மறைவுற்றது ... | கஙய |
| உஎ | செங்கணான் பிறப்பைச் சிறப்பித்துப் பாடியது ... | கசுஅ |
| உஅ | செங்கல்லைப் பொன்னாக்கியது ... | அக |

## பதிகவரலாறுகளின் அட்டவணை

| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| உகூ | சேரமான்பெருமா ளுயனுரை எதிர்கொண்டு வரவேற்றது ... | கககூ |
| ௩0 | திருக்கச்சூரில் இறைவன் பிச்சையெடுத்துச் சோறளித்தது ... | கூகூ |
| ௩க | திருத்தொண்டத்தொகை பாடியது ... | கூ௩ |
| ௩உ | தொண்டரெதிர்கொளத் திருவாரூரணைந்தது ... | க௮எ |
| ௩௩ | பனையூரில் திருக்கூத்துக் காட்சி கொடுத்தருளியது ... | உகசு |
| ௩௪ | பாச்சிலாச்சிராமத்திற் பொன் பெற்றது ... | ௩௮ |
| ௩௫ | பாண்டிக்கொடுமுடியில் நமச்சிவாயப்பதிகம் பாடியருளியது ... | ககசு |
| ௩சு | புகழ்த்துணை நாயனுரைச் சிறப்பித்துப் பாடியது ... | உசு |
| ௩எ | பூவணத்தை எதிர் கண்டு பாடியது ... | ௩க |
| ௩௮ | பேரூரிற்கண்ட திருக்கூத்தைத் தில்லையில் நினைந்து பாடியது ... | உஉ௩ |
| ௩கூ | பைஞ்ஞீலியில் இறைவனை மயலாற் பாடியது ... | ௮௫ |
| ௪0 | முதலைவாய்ப் பிள்ளை யழைத்தது ... | உஉஎ |
| ௪க | முருகன்பூண்டியில் வேடர் பறித்த பொன்னைத் திரும்பப்பெற்றது ... | ககூ |
| ௪உ | மூவேந்தரோடு பரங்குன்று தொழுதமை ... | கூ |
| ௪௩ | வடதிருமுல்லைவாயிலில், கண்கள் மறைத்ததையுந் தொண்டைமானுக்கருளியதையும் பாடியது ... | கஎ௮ |
| ௪௪ | வழியில் நீடூரை நினைந்து பாடியது ... | க௩௮ |
| ௪௫ | வாழ்கொளிபுத்தூரை நினைந்தணைந்தது ... | க௪உ |
| ௪சு | வெள்ளையானையின்மேல் ஏறித் திருக்கயிலை சென்றது ... | க௫ |



உ

திருச்சிற்றம்பலம்



## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

# ஏழாந்திருமுறை

## திருவெண்ணெய் நல்லூர் — பதிகம் க

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடீபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாயினி யல்லேனென லாமே. உ

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாயினி யல்லேனென லாமே. ௩

முடியேனினிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்ற மூர்த்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொண்ணீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அடிகேளுனக் காளாயினி யல்லேனென லாமே. ௪

பாதம்பணி வார்கள்பெறும் பண்டமது பணியாய்
ஆதன்பொரு ளானேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆதீயுனக் காளாயினி யல்லேனென லாமே. ௫

தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனீ
எண்ணார்புர மூன்றுமெரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அண்ணாவுனக் காளாயினி யல்லேனென லாமே. ௬

ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி யல்லேனென லாமே. ௭

ஏற்றார்புர மூன்றுமெரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆற்றாயுனக் காளாயினி யல்லேனென லாமே. ௮

மழுவாள்வல னேந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தலுன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அழகாவுனக் காளாயினி யல்லேனென லாமே. ௯



தடுத்தாட்கொண்டது.

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே. ய

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது
இறைவன் - தடுத்தாட்கொண்ட நாதர்;
இறைவி - வேற்கண்மங்கை.

---

**பதிக வரலாறு:**

திருக்கைலாயத் திருமலையில் இறைவன் சூடும் மதுமலர்மாலையும் அள்ளுநீறும் எடுத்தணைவாராகிய ஆலாலசுந்தரர் ஒருநாள் திருப்பள்ளித் தாமங்கொய்யப் பூஞ்சோலைச் சூழலில் சென்றபோது இறைவிக்கும் அவ்வாறே கொய்ய வந்தவராய சேடியர் கமலினியார், அநிந்திதையார் என்பவரை மாதவஞ் செய்த தென்திசை வாழ்ந்திடவும் தீதிலாத் திருத்தொண்டத்தொகை தரவும் போதுவார் கண்டு காதலிக்க அவரும் காட்சியிற் கண்ணினர். பின்னர் இருவகையினரும் இது பெருங்குற்றமாமெனத் தமதுள்ளத்தைத் திருப்பிச்சென்று இறைவன் இறைவியரின் திருமுன்னடைந்தனர். முற்றறிவனுய இறைவன் சுந்தரரை நோக்கி 'நீ மாதர்மேன் மனம் வைத்தனை, தென்றமிழ் நாட்டிற் றேன்றி அம்மெல்லியலாருடன் காதல் இன்பங்கலந்தணைவா' யெனக் கூற அன்பரும் வெருண்டு உளங்கலங்கி இறைவனை 'மையன்மானுடமாய் மயங்கும் வழி, ஐயனே, தடுத்தாண்டருள்செய்'என வேண்டிக்கொண்டு மண்ணுலகத்தில் தென்திசையில் நடுநாடென்னுந் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் ஆதிசைவ குலத்தில் மேம்பட்ட சடையனருக்கும் ஏதமில் கற்பின்வாழ்க்கை மனை இசைஞானியார்க்கும் தீதகன்று உலகம் உய்யத் தோன்றி யருளினர். அவர் நம்பியாரூரர் என்று பெயரிடப்பெற்றுத் தெருவிற் றேருருட்டி விளையாடிக்கொண் டிருக்குநாளில் நாடுவா ழரசராகிய நரசிங்கமுனையரையர் கண்டு காதல்கொண்டு பயந்தார்பால் இசைவுபெற்று அவரைத் தமக்கு மகன்மைகொண்டார். அரசிளங்குமாரராக வளர்ந்தும் தமது மரபுக்குரிய ஒழுக்க வழக்கங்களை விடாதவராய் முந்நூலணிந்து அளவில் தொல்கலைகளாய்ந்து நாயனர் திருமணப் பருவமடைந்தார். இதனையறிந்த அவர் தந்தையார் புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியரின் மகளை மணம் பேசுவித்துத் திருமணந் தொடங்கி நாயனர்

திருமணக் கோலத்தோடு புத்தூரை யடைந்து வேள்விச் சாலையில் எழுந்தருளியிருந்தார். அப்போது முன்னரே இவருக்கு உறுதிமொழி யருளிய இறைவன் திருக்கைலையினின்றும் சைவக் கோலத்தோடு முது மறையவர் வடிவந்தாங்கி வேள்விச்சாலையை யடைந்து நம்பியாரூரர் எதிரேயும் மற்றும் மறையவர் முன்னேயும் இருந்து நம்பியாரூரரை நோக்கி 'என்னிடையும் நின்னிடையும் இசைவால் யான் முன்னுடைய ஓர் வழக்கினை முடித்து வேள்வியினைச் செய்யக் கடவை' யென்ன, ஆரூரர் 'அப்படி யொரு வழக்குண்டெனின் அதனை முடித்தல்லால் யான் வதுவை செய்வதில்லை, அதனை யின்னதெனச் சொல்லு'கென்ன லும் மறையவர் 'நாவலூரனாகிய நீ என்னடியான்' என்றனர். அதனைக் கேட்ட நம்பியாரூரரை யுள்ளிட்ட யாவரும் இஃது உலகில் இதுகாறும் எங்குமில்லாத ஒரு புது வழக்கு என்று வெகுண்டார்கள்: சிரித்தார்கள். அதுகண்ட இறைவன் நாயனாரை நெருங்கி அக்காலத்தில் 'உன் தந்தை யின் தந்தை யாளோலை யீது; இதை நீ சிரித்தது என்ன' என்னலும் ஆரூரர் 'அந்தணர் வேறோ ரந்தணர்க் கடிமையாதலை இன்று நீ பேசக் கேட்டோம். நீ பித்தனோ' என்றார். அதற்கு அவர் 'நான் பித்தனாயினும் ஆக, பேயனாயினும் ஆக; எத்தனைத் தீங்கு கூறினும் நான் நாணேன். என்னை யோர் சிறிதும் அறிந்தாயில்லை, வித்தகம் பேசவேண்டாம், பணி செயவேண்டும்' என்றார். இவ்வளவில் நம்பியாரூரர் உள்ளம் வேறுபட்டு, உண்மை காண விரும்பி மறையவரை ஓலை காட்டென்று கேட்க அவர் 'நீ வேலைசெய்யற் பாலையன்றி யோலை காணற் பாலையோ' வென்றார். நம்பியும் வெகுண்டு நெருங்கச் செல்லும்போது காவணத்து விரைந்து ஓடிய அவரைத் தொடர்ந்துபற்றி அந்தணர் ஆளாய் அடிமை செய்தல் என்ன முறையென்று ஓலையைக் கீறியிட்டார். முடிவிலான் முறையோ வென்று முறையிட்டானாக உழைநின்றார் விலக்கி 'முனிவரே நீர் எங் குளீர் சொல்லு'மென்று கேட்டனர். அவரும் 'என் இருப்பு வெண்ணெய் நல்லூர். இவன் நெறியின்றி ஓலை கீறி யடிமையாதலை நிரப்பினான்' எனக் கேட்ட நம்பியாரூரர் 'நீ யிருப்பது வெண்ணெய் நல்லூர் என்றால் நன்றாயிற்று. உன் பிழை நெறி வழக்கை யாண்டே பேச வருவா'யென் றழைக்க அவர் முன்னும் ஆரூரரும் பிறரும் அவர் பின்னராகவும் சென்று திருவெண்ணெய்நல்லூர் அவையை யடைந்து வழக்கைக் கூறினர்கள். அவையினர் மறையவரை நோக்கி உமது வழக்கினை ஆட்சி, ஆவணம், அயலார்சான்றாகிய மூன்றிலொன்று காட்டி மெய்ப்பிக்க வேண்டிய போது அவர் 'இவன் ஆட்சியில் முன் கிழித்த ஓலை படியோலை, மூல வோலை மாட்சியிற் காட்ட வைத்திருக்கின்றேன்; இவன் வலிசெய்து அத

ளையும் கிழிக்காது தடுக்க வல்லீர்களாகில் காட்டுவேன்' என்றார். அந்தணர் நாங்கள் அது செய்யவொட்டோம் என்று ஓலை வாங்கிக் கரணத்தாளைப் படிக்கச்செய்து அதில் 'அருமறை நாவலாதி சைவனாரூரன் செய்கை, பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானு மென்பால் வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கோலை, இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெழுத்து' என்றுள்ளதைக் கேட்டு எழுத்திட்டவர்களும் ஒப்புக்கொண்டதன் பின்னர் தந்தையின் தந்தை கைச்சாத்தையும் வேறு கைச்சாத்து சேமத்தினின்றும் கொணர்ந்து அதையும் ஒப்பு நோக்கி இரண்டு மொத்திருக்கக் கண்டு, நம்பியாரூரரை நோக்கி 'நீர் தோற்றீர் இனிச் செயலில்லை இவர்க்கு ஏவல் செய்தல் கடமை' என்றார்கள். ஆரூரரும் 'இசையேன் என்ன இசையுமோ' வென்று நின்றார். பின்னும் மறையவர்கள் முனிவரை 'நீர் இவ்வூரவராதலின் உமக்கு வாழ்க்கைக்குரிய காணி நிலம் முதலியவைகளைக் காட்டுக'வென்னலும் அவர் 'நீவிர் ஒருவரும் என்னை யறியீராகில் காட்டுகேன் வாரு'மென்று எல்லோரையும் அழைத்துச் சென்று அவ்வூர்ச் சிவபிரான் திருக்கோயிலாகிய திருவருட்டுறையிற் புக்கொளித்தனர். யாவரும் திகைத்து நின்றார்கள். நம்பியாரூரர் விருப்பத்தோடு தனித் தொடர்ந்து அழைக்க இறைவன் உம்பரில் விடைமேல் மாதோடு தோன்றி, 'முன்பு நீ நமக்குத் தொண்டன். வேட்கை கூர்நம் ஏவலாலே மண்மேற் பிறந்தனை. துன்புறும் உலக வாழ்க்கைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து மறையோர் முன்பு தடுத்தாண்டோம்' என்று கூறியருளினார். நாயனார் தம்மை மறந்து கைகூப்பி வணங்கி 'வலியவாட்கொண்டது தேவரீர் திருவருளன்றோ' வென்றார். இறைவன் 'நீ நம்மை வன்மை பேசி வன்றொண்டன் என்று நாமம் பெற்றனை. நமக்கு அன்பிற் பெருகும் வழிபாடு (அர்ச்சனை) பாட்டு. ஆதலால் நம்மைப் பாடுக' வென்ன நாயனார் 'ஐயனே, தேவரீர் அருட்பெருந் தன்மைகளை என்னவென்றறிந்து பாடுவேன்' என்ன, இறைவன் 'நீ பித்தன் என்று கூறினை யாதலின் பித்தனென்று பாடுக' வென்றார். நாயனார் உடனே கைகூப்பி வணங்கி எல்லாவுலகமும் உய்யுமாறு இறைவனைப் 'பித்தா பிறை சூடீ' என்னு மிப் பெரிய திருப்பதிகத்தை எடுத்துத் திருப்பாட்டிறுதிதோறும் 'உனக்காளா யினியல்லே னெனலாமே' என்று வைத்துப் பாடினார்.



# திருப்பரங்குன்றம்

## பதிகம் ௨

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கோத்திட் டையுங்கோ வலுங்கோ யில்கொண்டீ
ருமைக்கொண் டுழல்கின் றதோர்கொல் லைச்சில்லைச்
சேத்திட் டுக்குத்தித் தெருவே திரியுஞ்
சில்பூ தமுநீ ருந்திசை திசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும்
மரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந்
தார்த்திட் டதும்பாம் புகைக்கொண் டதும்பாம்
படிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. க

முண்டந் தரித்தீர் முதுகா டுறைவீர்
முழுநீ றுமெய்பூ சுதிர்மூக் கப்பாம்பைக்
கண்டத்தி லுந்தோ ளிலுங்கட்டி வைத்தீர்
கடலைக் கடைந்திட் டதோர்நஞ் சையுண்டீர்
பிண்டஞ் சுமந்தும் மொடுங்கூட மாட்டோம்
பெரியா ரொடுநட் பினிதென் றிருத்தும்
அண்டங் கடந்தப் புறத்து மிருந்தீ
ரடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௨

மூடா யமுய லகன்மூக்கப் பாம்பு
முடைநா றியவெண் டலைமொய்த் தபல்பேய்
பாடா வருபூ தங்கள்பாய் புலித்தோல்
பரிசொன் றறியா தனபா ரிடங்கள்
தோடார் மலர்க்கொன் றையுந்துன் னெருக்குந்
துணைமா மணிநா கமரைக் கசைத்தொன்
றாடா தனவே செய்தீரெம் பெருமா
னடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௩

மஞ்சுண் டமாலை மதிசூ டுசென்னி
மலையான் மடந்தை மணவா ளநம்பி
பஞ்சுண் டவல்குற் பணைமென் முலையா
ளொடுநீ ருமொன்று யிருத்த லொழியீர்
நஞ்சுண் டுதேவர்க் கமுதங் கொடுத்த
நலமொன் றறியோ முங்கைநா கமதற்
கஞ்சுண் டுபட மதுபோ கவிடீ
ரடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௬

பொல்லாப் புறங்காட் டகத்தாட் டொழியீர்
புலால்வா யனபே யொடுபூச் சொழியீர்
எல்லா மறிவீ ரிதுவே யறியீ
ரென்றிரங் குவேனெல் லியுநண் பகலும்
கல்லா னிழற்கீ ழொருநாட் கண்டதுங்
கடம்பூர்க் கரக்கோ யிலின்முன் கண்டதும்
அல்லால் விரகொன் றிலெம் பெருமா
னடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௭

தென்னத் தெனத்தெத் தெனவென் றுபாடிச்
சில்பூ தமுநீ ருந்திசை திசையன
பன்னன் மறைபா டுதிர்பா சூருளீர்
படம்பக் கங்கொட் டுந் திருவொற்றி யூரீர்
பண்ணார் மொழியா ளையொர்பங் குடையீர்
படுகாட் டகத்தென் றுமோர்பற் றொழியீர்
அண்ணா மலையே னென்றீரா ரூருளீ
ரடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௮

சிங்கத் துரிமூ டுதிர்தே வர்கணந்
தொழுநிற் றீர்பெற்ற முகந்தே றிடுதிர்
பங்கம் பலபே சிடப்பா டுந்தொண்டர்
தமைப்பற் றிக்கொண்டாண் டுவிட வுங்கில்லீர்
கங்கைச் சடையீ ருங்கருத் தறியோங்
கண்ணுமூன் றுடையீர் கண்ணேயா யிருந்தால்
அங்கத் துறுநோய் களைந்தா ளகில்லீ
ரடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. ௯

பிணிவண் ணத்தவல் வினைதீர்த் தருளீர்
பெருங்காட் டகத்திற் பெரும்பே யுநீரும்
துணிவண் ணத்தின்மே லுமோர்தோ லுடுத்துச்
சுற்றுநா கத்தராய்ச் சுண்ணநீ றுபூசி
மணிவண் ணத்தின்மே லுமோர்வண் ணத்தராய்
மற்றுமற் றும்பல் பலவண் ணத்தராய்
அணிவண் ணத்தராய் நிற்றீரெம் பெருமா
னடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. அ

கோளா ளியகுஞ் சரங்கோ ளிழைத்தீர்
மலையின் றலையல் லதுகோ யில்கொள்ளீர்
வேளா ளியகா மனைவெந் தழிய
விழித்தீ ரதுவன் றியும்வேய் புரையும்
தோளா ளுமைநங் கையோர் பங்குடையீ
ருடுகூ றையுஞ்சோ றுந்தந்தா ளகில்லீர்
ஆளா ளியவே கிற்றீரெம் பெருமா
னடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமே. கூ

பாரோடு விண்ணும் பகலு மாகிப்
பனிமால் வரையா கிப்பர வையாகி
நீரோ டுதீயு நெடுங்காற் றுமாகி
நெடுவெள் ளிடையா கிநிலனு மாகித்
தேரோ டவரை யெடுத்த வரக்கன்
சிரம்பத் திறுத்தீ ருமசெய்கை யெல்லாம்
ஆரோ டுங்கூடா வடிகே ளிதுவென்
னடியோ முமக்காட் செயவஞ் சுதுமே. க0

அடிகே ளுமக்காட் செயவஞ் சுதுமென்
றமரர் பெருமா னையாரூ ரனஞ்சி
முடியா லுலகாண் டமூவேந் தர்முன்னே
மொழிந்தா றுமோர்நான் குமோரொன் றினையும்

படியா யிலைகற் றுவல்ல வடியார்
பரந் தன் றமேய பரம னடிக்கே
குடியாய் வானோர்க் குமோர்கோ வுமாகிக்
குலவேந் தராய்விண் முழுதாள் பவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது

இறைவன் - பரங்கிரிநாதர்; இறைவி - ஆவுடைநாயகி.

---

**பதிக வரலாறு:**

நம்பியாரூரர் மதுரையிலே மருங்குள்ள சிவபெருமான் திருக்கோயில்களை வணங்கி யெழுந்தருளியிருக்கும்போது தமிழ்நாட்டு வேந்தராகிய சேர சோழ பாண்டியருடன் திருப்பரங்குன்றத்தை யடைந்து திருக்கோயிற் சென்று இறைவன் திருவடிக்குத் தொண்டுசெய்யும் அருமை நினைந்தஞ்சுதும் என்று பாடுவாராய்க் 'கோத்திட்டையுங் கோவலுங் கோயில் கொண்டீர்' என்றெடுத்துத் துதித்து இறுதித் திருப்பாட்டில் 'முடியாலுலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்தது' என்று வைத்து இத்திருப்பதிகம் பாடியருளினார். மூவேந்தரும் இறைவர் திருப்பணி யருமையைக் கேட்டிறைஞ்சி நாயனாரை வணங்கித் துதித்தார்கள்.



## திருநெல்வாயிலரத்துறை

பதிகம் ௩

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கல்வாய கிலுங் கதிர்மாமணியுங்
கலந்துந்திவருந் நிவவின்கரைமேல்
நெல்வாயிலரத் துறைநீடுறையும்
நிலவெண்மதிசூ டியநின்மலனே
நல்வாயில்செய்தார் நடந்தாருடுத்தார்
நரைத்தாரிறந்தா ரென்றுநானிலத்தில்
சொல்லாய்க்கழிகின் றதறிந்தடியேன்
றொடர்ந்தேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே. ௧

கறிமாமிளகும் மிகுவன்மரமும்
மிகவுந்திவருந் நிவவின்கரைமேல்
நெறிவார்குழலா ரவர்காணநடஞ்செய்
நெல்வாயிலரத் துறைநின்மலனே
வறிதேநிலையா தவிம்மண்ணுலகின்
னரனுகவகுத் தனைநானிலையேன்
பொறிவாயிலிவ்வைந் தினையும்மவியப்
பொருதுன்னடியே புகுஞ்சூழல்சொல்லே. உ

புற்றாடரவம் மரையார்த்துகந்தாய்
புனிதாபொருவெள் விடையூர்தியினாய்
எற்றேயொருகண் ணிலனின்னையல்லா
னெல்வாயிலரத் துறைநின்மலனே
மற்றேலொருபற் றிலனெம்பெருமான்
வண்டார்குழலாண் மங்கைபங்கினனே
அற்றார்பிறவிக் கடனீந்தியேறி
யடியேனுய்யப்போ வதோர்சூழல்சொல்லே. ௩

கோடுயர்கோங் கலர்வேங்கையலர்
மிகவுந்திவருந் நிவவின்கரைமேல்
நீடுயர்சோலை நெல்வாயிலரத்
துறைநின்மலனே நினைவார்மனத்தாய்
ஓடுபுனற்கரை யாமிளமையுறங்
கிவிழித்தாலொக் குமிப்பிறவி
வாடியிருந்து வருந்தல்செய்யா
தடியேனுய்யப்போ வதோர்சூழல்சொல்லே. ச

உலவும்முகிலிற் றலைகற்பொழிய
வுயர்வேயொடிழி நிவவின்கரைமேல்
நிலவும்மயிலா ரவர்தாம்பயிலு
நெல்வாயிலரத் துறைநின்மலனே
புலனைந்துமயங்கி யகங்குழையப்
பொருவேலொர்நமன் றமர்தாநலிய
அலமந்துமயங் கியயர்வதன்முன்
னடியேனுய்யப்போ வதோர்சூழல்சொல்லே. ரு

ஏலம்மிலவங் கமெழிற்கனகம்
    மிகவுந்திவருந் நிவவின்கரைமேல்
நீலம்மலர்ப்பொய் கையிலன்னமலி
    நெல்வாயிலரத் துறையாயொருநெல்
வாலூன்றவருந் துமுடம்பிதனை
    மகிழாதழகா வலந்தேனினியான்
ஆலந்நிழலி லமர்ந்தாயமரா
    வடியேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே. ௬

சிகரம்முகத்திற் றிரளாரகிலும்
    மிகவுந்திவருந் நிவவின்கரைமேல்
நிகரின்மயிலா ரவர்தாம்பயிலுந்
    நெல்வாயிலரத் துறைநின்மலனே
மகரக்குழையாய் மணக்கோலமதே
    பிணக்கோலமதாம் பிறவியிதுதான்
அகரம்முதலி னெழுத்தாகிநின்று
    யடியேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே. ௭

திண்டேர்நெடுவீ தியிலங்கையர்கோன்
    றிரடோளிருபஃ துநெரித்தருளி
ஞெண்டாடுநெடு வயல்சூழ்புறவின்
    னெல்வாயிலரத் துறைநின்மலனே
பண்டேமிகநான் செய்தபாக்கியத்தாற்
    பரஞ்சோதிநின்னா மம்பயிலப்பெற்றேன்
அண்டாவமரர்க் கமரர்பெருமா
    னடியேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே. ௮

மாணாவுருவா கியொர்மண்ணளந்தான்
    மலர்மேலவனே டியுங்காண்பரியாய்
நீணீண்முடிவா னவர்வந்திறைஞ்சுந்
    நெல்வாயிலரத் துறைநின்மலனே
வாணார்நுதலார் வலைப்பட்டடியேன்
    பலவின்கனியீந் ததுபோல்வதன்முன்
ஆணோடுபெண்ணா முருவாகிநின்று
    யடியேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே. ௯

நீரூருநெடு வயல்சூழ்புறவின்
னெல்வாயிலரத் துறைநின்மலனைத்
தேரூர்நெடுவீ திநன்மாடமலி
தென்னாவலர்கோ னடித்தொண்டனணி
ஆரூரனுரைத் தனநற்றமிழின்
மிகுமாலையொர்பத் திவைகற்றுவல்லார்
காரூர்களிவண் டறையானைமன்ன
ரவராகியொர்விண் முழுதாள்பவரே.

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - அரத்துறைநாதர்; இறைவி - ஆனந்தநாயகி.



## திருவஞ்சைக்களம்

பதிகம் ச

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தலைக்குத்தலைமா லையணிந்ததென்னே
சடைமேற்கங்கைவெள் ளந்தரித்ததென்னே
அலைக்கும்புலித்தோல்கொண் டசைத்ததென்னே
யதன்மேற்கதநாகக் கச்சார்த்ததென்னே
மலைக்குந்நிகரொப் பனவன்றிரைகள்
வலித்தெற்றிமுழங்கி வலம்புரிகொண்
டலைக்குங்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே.

பிடித்தாட்டியோர்நாகத் தைப்பூண்டதென்னே
பிறங்குஞ்சடைமேற் பிறைசூடிற்றென்னே
பொடித்தான்கொண்டுமெய் முற்றும்பூசிற்றென்னே
புகரேறுகந்தே றல்புரிந்ததென்னே
மடித்தோட்டந்துவன் றிரையெற்றியிட
வளர்சங்கமங்காந் துமுத்தஞ்சொரிய
அடித்தார்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. ௨

சிந்தித்தெழுவார்க்கு நெல்லிக்கனியே
சிறியார்பெரியார் மனத்தேறலுற்றால்
முந்தித்தொழுவா ரிறவார்பிறவார்
முனிகண்முனியே யமரர்க்கமரா
சந்தித்தடமால் வரைபோற்றிரைக
ளணியாதிடறுங் கடலங்கரைமேல்
அந்தித்தலைச்செக்கர் வானேயொத்தியா
லணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. ௩

இழைக்கும்மெழுத்துக் குயிரேயொத்தியா
லிலையேயொத்தியா லுளையேயொத்தியால்
குழைக்கும்பயிர்க்கோர் புயலேயொத்தியா
லடியார்தமக்கோர் குடியேயொத்தியால்
மழைக்குந்நிகரொப் பனவன்றிரைகள்
வலித்தெற்றிமுழங்கி வலம்புரிகொண்
டழைக்குங்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. ௪

வீடின்பயனென் பிறப்பின்பயனென்
விடையேறுவதென் மதயானைநிற்கக்
கூடும்மலைமங்கை யொருத்தியுடன்
சடைமேற்கங்கையாளைநீ சூடிற்றென்னே
பாடும்புலவர்க் கருளும்பொருளென்
நெதியம்பலசெய் தகலச்செலவில்
ஆடுங்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. ௫

இரவத்திடுகாட் டெரியாடிற்றென்னே
யிறந்தார் தலையிற் பலிகோடலென்னே
பரவித்தொழுவார் பெறுபண்டமென்னே
பரமாபரமேட் டிபணித்தருளாய்
உரவத்தொடுசங் கமொடிப்பிமுத்தங்
கொணர்ந்தெற்றிமுழங்கி வலம்புரிகொண்
டரவக்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. சு

ஆக்கும்மழிவும் மையநீயென்பனான்
சொல்லுவார்சொற்பொரு ளவைநீயென்பனான்
நாக்குஞ்செவியுங் கண்ணுநீயென்பனா
னலனேயினிநா னுனைநன்குணர்ந்தேன்
நோக்குந்நெதியம் பலவெத்தனையுங்
கலத்திற்புகப்பெய்து கொண்டேறநுந்தி
ஆர்க்குங்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. எ

வெறுத்தேன்மனைவாழ்க் கையைவிட்டொழிந்தேன்
விளங்குங்குழைக்கா துடைவேதியனே
இறுத்தாயிலங்கைக் கிறையாயவனைத்
தலைபத்தொடுதோள் பலவிற்றுவிழக்
கறுத்தாய்கடனஞ் சமுதுண்டுகண்டங்
கடுகப்பிரமன் றலையைந்திலுமொன்
றறுத்தாய்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. அ

பிடிக்குக்களிறே யொத்தியாலெம்பிரான்
பிரமற்கும்பிரான்மற்றை மாற்கும்பிரான்
நொடிக்கும்மளவிற் புரமூன்றெரியச்
சிலைதொட்டவனே யுனைநான்மறவேன்
வடிக்கின்றனபோற் சிலவன்றிரைகள்
வலித்தெற்றிமுழங்கி வலம்புரிகொண்
டடிக்குங்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனே. கூ

எந்தம்மடிக ளிமையோர்பெருமா
னெனக்கென் றுமளிக்கு மணிமிடற்றன்
அந்தண்கடலங் கரைமேன்மகோதை
யணியார்பொழிலஞ்சைக் களத்தப்பனை
மந்தம்முழவுங் குழலுமியம்பும்
வளர்நாவலர்கோ னம்பியூரன்சொன்ன
சந்தம்மிகுதண் டமிழ்மாலைகள்கொண்
டடிவீழவல்லார் தடுமாற்றிலரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது மலைநாட்டிலுள்ளது

இறைவன்-அஞ்சைக்களத்தப்பர்; இறைவி-உமையம்மை.

---

**பதிக வரலாறு :**

சுந்தரமூர்த்தி நாயனார் சேர நாட்டையடைந்து ஆண்டுள்ள சிவபிரான் கோயில்களை வணங்கிச் சேரர் பெருமானோடு அளவளாவியிருக்கும் நாட்களில் ஒருநாள் சேரர் பெருமான் திருமுழுக்காடுந் (திருமஞ்சனத்) தொழிலிலிருக்கும்போது தாம் தமது தலைவரைப் பிரிந்த பிரிவை வருந்திச் சேரும் நாட்குறுகிய தன்மையாற் றிருவஞ்சைக் களத்தையடைந்து வலம்வந்து இறைவரிணையடிகளைப் போற்றி உலகில் விழுந்தெழுந்தலைப்புறு மனைவாழ்க்கை சரியுமாறு 'தலைக்குத் தலைமாலை' யென்னுமிப்பதிகத்தை யெடுத்து அதில் இவ்வுலகினிற் பாச மடுத்த வாழ்க்கையை யறுத்திடவேண்டு மென்னும் கருத்தை எட்டாந் திருப்பாட்டினிலமைத்துப் பாடியருளினார். இதனைச் செவிமடுத்தருளிய சிவபெருமான் தமது திருமுன்னுள்ள நான்முகன் திருமால் முதலிய பெரிய தேவரை நம்மூரனை யும்பர் வெள்ளானையி னேற்றிக்கொண்டிங்கு வாருமென்றாணையிட்டருளலும் அவர்கள் அவ்வாறுவந்து திருவஞ்சைக் களத்துத் திருக்கோயிற்றிருவாயிலிற் காத்திருந்து வெளிவந்த நாயனாருக்கு இறைவனாணையைச் செப்பி வணங்கி யதினேற்றிக் கயிலைக் கழைத்துச் சென்றனர்.



## திருவோணகாந்தன்றளி — பதிகம் ௫

### பண்-இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தல்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லால்
ஐவர்கொண்டிங் காட்டவாடி யாழ்குழிப்பட் டழுந்துவேற்கு
உய்யுமாறொன் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே. க

திங்கடங்கு சடைக்கண்மேலோர் திரைகள்வந்து புரளவீசும்
கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
அங்கைவேலோன் குமரன்பிள்ளை தேவியார்கோற் றட்டியாளார்
உங்களுக்காட் செய்யமாட்டோ மோணகாந்தன் றளியுளீரே. உ

பெற்றபோழ்தும் பெறாதபோழ்தும் பேணியுங்கழ லேத்துவார்கள்
மற்றோர்பற்றில ரென்றிரங்கி மதியுடையவர் செய்கைசெய்வீர்
அற்றபோழ்து மலர்ந்தபோழ்து மாபற்காலத் தடிகேளும்மை
ஒற்றிவைத்திங் குண்ணலாமோ வோணகாந்தன் றளியுளீரே. ௩

வல்லதெல்லாஞ் சொல்லியும்மை வாழ்த்தினாலும் வாய்திறந்தொன்
றில்லையென்னீ ருண்டுமென்னீ ரெம்மையாள்வா னிருப்பதென்னீர்
பல்லையுக்க படுதலையிற் பகலெலாம்போய்ப் பலிதிரிந்திங்
கொல்லைவாழ்க்கை யொழியமாட்டீ ரோணகாந்தன் றளியுளீரே.

கூடிக்கூடித் தொண்டர்தங்கள் கொண்டபாணி குறைபடாமே
ஆடிப்பாடி யழுதுநெக்கங் கன்புடையவர்க் கின்பமோரீர்
தேடித்தேடித் திரிந்தெய்த்தாலுஞ் சித்தமென்பால் வைக்கமாட்டீர்
ஓடிப்போகீர் பற்றுந்தாரீ ரோணகாந்தன் றளியுளீரே. ௫

வாரிருங்குழல் வாணெடுங்கண் மலைமகண்மது விம்முகொன்றைத்
தாரிருந்தட மார்புநீங்காத் தையலாளுல குய்யவைத்த
காரிரும்பொழிற் கச்சிமூதூர்க் காமக்கோட்ட முண்டாகநீர்போய்
ஊரிடும்பிச்சை கொள்வதென்னே யோணகாந்தன் றளியுளீரே.

பொய்ம்மையாலே போதுபோக்கிப் புறத்துமில்லை யகத்துமில்லை
மெய்ம்மைசொல்லி யாளமாட்டீர் மேலைநாளொன் றிடவுங்கில்லீர்
எம்மைப்பெற்றா லேதும்வேண்டீ ரேதுந்தாரீ ரேதுமோதீர்
உம்மையன்றே யெம்பெருமா னோணகாந்தன் றளியுளீரே. ௭

வலையம்வைத்த கூற்றமீவான் வந்துநின்ற வார்த்தைகேட்டுச்
சிலையமைத்த சிந்தையாலே திருவடிதொழு துய்யினல்லால்
கலையமைத்த காமச்செற்றக் குரோதலோப மதவருடை
உலையமைத்திங் கொன்றமாட்டே னோணகாந்தன் றளியுளீரே. ௮

வாரமாகித் திருவடிக்குப் பணிசெய்தொண்டர் பெறுவதென்னே
ஆரம்பாம்பு வாழ்வதாரூ ரொற்றியூரே யும்மதன்று
தாரமாகக் கங்கையாளைச் சடையில்வைத்த வடிகேளுந்தம்
ஊருங்காடு வுடையுந்தோலே யோணகாந்தன் றளியுளீரே. ௯

ஓவணமே லெருதொன்றேறு மோணகாந்தன் றளியுளார்தாம்
ஆவணஞ்செய் தாளுங்கொண்டு வரைதுகிலொடு பட்டுவீக்கிக்
கோவணமேற் கொண்டவேடங் கோவையாக வாரூரன்சொன்ன
பாவணத்தமிழ் பத்தும்வல்லார் பறையுந்தாஞ்செய்த பாவந்தானே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது

இறைவன் - ஓணகாந்தீசுவரர்.

---

**பதிக வரலாறு:**

திருக்கச்சூ ராலக்கோயிலைச் சென்று வழிபட்ட வன்றொண்டப் பெருமான் காஞ்சீபுரத்தை யடைந்து திருவேகாம்பரம், திருக்காமக் கோட்டம், திருமேற்றளி முதலிய திருப்பதிகளை யடைந்து பாடி வழி பட்டுத் திருவோணகாந்தன்றளியைச் சேர்ந்து இறைவரை உரிமையுடன் பேணியமைந்த தோழமையாற் பெருகு மடிமைத்திறம் பேசிக் காண மோடு பொன் வேண்டி இப்பதிகத்தை எடுத்தேத்தி எண்ணில் நிதிபெற் றினி திருந்தருளினர்.



## திருவெண்காடு பதிகம் சுா

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

படங்கொளுகஞ் சென்னிசேர்த்திப் பாய்புலித்தோ லரையில்வீக்கி
அடங்கலாரூ ரெரியச்சீறி யன்றுமூவர்க் கருள்புரிந்தீர்
மடங்கலானைச் செற்றுகந்தீர் மனைகடோறுந் தலைகையேந்தி
விடங்கராகித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. க

இழித்துகந்தீர் முன்னைவேட மிமையவர்க்கு முரைகள்பேணு
தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட வுயர்தவத்தை யமரர்வேண்ட
அழிக்கவந்த காமவேளை யவனுடைய தாதைகாண
விழித்துகந்த வெற்றியென்னே வேலைசூழ்வெண் காடனீரே. உ

படைகளேந்திப் பாரிடமும் பாதம்போற்ற மாதுநீரும்
உடையோர்கோவ ணத்தராகி யுண்மைசொல்லீ ரும்மையன்றே
சடைகடாழக் கரணமிட்டுத் தன்மைபேசி யில்பலிக்கு
விடையதேறித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. ௩

பண்ணுளீராய்ப் பாட்டுமானீர் பத்தர்சித்தம் பரவிக்கொண்டீர்
கண்ணுளீராய்க் கருத்திலும்மைக் கருதுவார்கள் காணும்வண்ணம்
மண்ணுளீராய் மதியம்வைத்தீர் வானநாடர் மருவியேத்த
விண்ணுளீராய் நிற்பதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. ச

குடமெடுத்து நீரும்பூவுங் கொண்டுதொண்ட ரேவல்செய்ய
நடமெடுத்தொன் றூடிப்பாடி நல்குவீர்நீர் புல்கும்வண்ணம்
வடமெடுத்த கொங்கைமாதோர் பாகமாக வார்கடல்வாய்
விடமிடற்றில் வைத்ததென்னே வேலைசூழ்வெண் காடனீரே. ரு

மாறுபட்ட வனத்தகத்தின் மருவவந்த வன்களிற்றைப்
பீறியிட்ட மாகப்போர்த்தீர் பெய்பலிக்கென் றில்லந்தோறுங்
கூறுபட்ட கொடியுநீருங் குலாவியேற்றை யடரவேறி
வேறுபட்டுத் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. சா

காதலாலே கருதுந்தொண்டர் காரணத்த ராகிநின்றே
பூதம்பாடப் புரிந்துநட்டம் புவனியேத்த வாடவல்லீர்
நீதியாக வேழிலோசை நித்தராகிச் சித்தர்சூழ
வேதமோதித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.

குரவுகொன்றை மதியமத்தங் கொங்கைமாதர் கங்கைநாகம்
விரவுகின்ற சடையுடையீர் விருத்தரானீர் கருத்திலும்மைப்
பரவுமென்மேற் பழிகள்போக்கீர் பாகமாய மங்கையஞ்சி
வெருவவேழஞ் செற்றதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. அ

மாடங்காட்டுங் கச்சியுள்ளீர் நிச்சயத்தா னினைப்புளார்பாற்
பாடுங்காட்டி லாடலுள்ளீர் பரவும்வண்ண மெங்ஙனேதான்
நாடுங்காட்டி லயனுமாலு நணுகாவண்ண மனலுமாய
வேடங்காட்டித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. கூ

விரித்தவேத மோதவல்லார் வேலைசூழ்வெண் காடுமேய
விருத்தனைய வேதன்றன்னை விரிபொழிற்றிரு நாவலூரன்
அருத்தியாலா ரூரன்றொண்ட னடியன்கேட்ட மாலைபத்துந்
தெரித்தவண்ண மொழியவல்லார் செம்மையாளர் வானுளாரே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - சுவேதாரணியேசுரர்; இறைவி - பிரமவித்தியாநாயகி.



## திருவெதிர்கொள்பாடி    பதிகம் எ

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மத்தயானை யேறிமன்னர் சூழவருவீர்காள்
செத்தபோதி லாருமில்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்தவுள்ள மாற்றவேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடைவோமே. க

தோற்றமுண்டேல் மரணமுண்டு துயரமனை வாழ்க்கை
மாற்றமுண்டேல் வஞ்சமுண்டு நெஞ்சமனத் தீரே
நீற்றரேற்றர் நீலகண்டர் நிறைபுனனீள் சடைமேல்
ஏற்றர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே. 6

செடிகொளாக்கை சென்றுசென்று தேய்ந்தொல்லை வீழாமுன்
வடிகொள்கண்ணார் வஞ்சனையுட் பட்டுமயங் காதே
கொடிகொளேற்றர் வெள்ளைநீற்றர் கோவணவா டையுடை
அடிகள்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே 7

வாழ்வர்கண்டீர் நம்முளவர் வஞ்சமனத் தீரே
யாவராலு மிகழப்பட்டிங் கல்லலில்வீ ழாதே
மூவராயு மிருவராயு முதல்வனவ னேயாம்
தேவர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே.

அரித்துநம்மே லைவர்வந்திங் காறலைப்பான் பொருட்டால்
சிரித்தபல்வாய் வெண்டலைபோ யூர்ப்புறஞ்சே ராமுன்
வரிக்கொடுத்திவ் வாளரக்கர் வஞ்சமதின் மூன்றும்
எரித்தவில்லி யெதிர்கொள்பாடி யென்பதடை வோமே.

பொய்யர்கண்டீர் வாழ்க்கையாளர் பொத்தடைப்பான் பொருட்டா
மையல்கொண்டீ ரெம்மோடாடி நீருமனத் தீரே
நையவேண்டா விம்மையேத்த வம்மைநமக் கருளும்
ஐயர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே.

கூசனீக்கிக் குற்றநீக்கிச் செற்றமன நீக்கி
வாசமல்கு குழலினார்கள் வஞ்சமனை வாழ்க்கை
ஆசைநீக்கி யன்புசேர்த்தி யென்பணிந்தே றேறும்
ஈசர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே.

இன்பமுண்டேற் றுன்பமுண்டு வேழைமனை வாழ்க்கை
முன்புசொன்ன மோழைமையான் முட்டைமனத் தீரே
அன்பரல்லா லணிகொள்கொன்றை யடிகளடி சேரார்
என்பர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே.

தந்தையாருந் தவ்வையாரு மெட்டனைச்சார் வாகார்
வந்துநம்மோ டுள்ளளாவி வானநெறி காட்டும்
சிந்தைபீரே நெஞ்சினீரே திகழ்மதியஞ் சூடும்
எந்தைகோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே. கூ

குருதிசோர வானையின்றோல் கொண்டகுழற் சடையன்
மருதுகீறி யூடுபோன மாலயனும் மறியாச்
சுருதியார்க்குஞ் சொல்லவொண்ணாச் சோதியெம்மா தியான்
கருதுகோயி லெதிர்கொள்பாடி யென்பதடை வோமே. கം

முத்தூந்துப் பவளமேனிச் செஞ்சடையா னுறையும்
பத்தர்பந்தத் தெதிர்கொள்பாடிப் பரமனையே பணியச்
சித்தம்வைத்த தொண்டர்தொண்டன் சடையனவன் சிறுவன்
பத்தனூரன் பாடவல்லார் பாதம்பணி வாரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - ஐராவத நாதர் ; இறைவி - மலர்க்குழல்நாயகி.



திருவாரூர்                                                    பதிகம் அ

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

இறைகளோ டிசைந்த வின்ப மின்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியா னோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர் செம்பொனு மணியுந் தூவி
அறைகழ லிறைஞ்சு மாரூ ரப்பனே யஞ்சி னேனே. க

ஊன்மிசை யுதிரக் குப்பை யொருபொரு ளிலாத மாயம்
மான்மறித் தனைய நோக்கி மடந்தைமார் மதிக்கு மிந்த
மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல்வெள் ளேற்ற வாரூ ரப்பனே யஞ்சி னேனே. உ

அறுபதும் பத்து மெட்டு மாறினோ டஞ்சு நான்கும்
துறுபறித் தனைய நோக்கிச் சொல்லிற்றொன் றாகச் சொல்லார்
நறுமலர்ப் பூவு நீரு நாடொறும் வணங்கு வார்க்கு
அறிவினைக் கொடுக்கு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௩

சொல்லிடி லெல்லை யில்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு நலமிக வறிந்தே னல்லேன்
மல்லிகை மாட நீடு மருங்கொடு நெருங்கி யெங்கும்
அல்லிவண் டியங்கு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௪

நரம்பினோ டெலும்பு கட்டி நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியி ருந்து குலத்தினால் வாழ மாட்டேன்
விரும்பிய கமழும் புன்னை மாதவித் தொகுதி யென்றும்
அரும்புவாய் மலரு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௫

மணமென மகிழ்வர் முன்னே மக்கடாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டே னாயேன்
பணையிடைச் சோலை தோறும் பைம்பொழில் விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௬

தாழ்வெனுந் தன்மை விட்டுத் தனத்தையே மனத்தில் வைத்து
வாழ்வதே கருதித் தொண்டர் மறுமைக்கொன் றீய கில்லார்
ஆழ்குழிப் பட்ட போது வலக்கணி லொருவர்க் காவர்
யாழ்முயன் றிருக்கு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௭

உதிரநீ ரிறைச்சிக் குப்பை யெடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமா லயனுந் தேடிக் கழலிணை காண மாட்டா
அரியனாய் நின்ற வாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௮

பொய்த்தன்மைத் தாய மாயப் போர்வையை மெய்யென் றெண்ணும்
வித்தகத் தாய வாழ்வு வேண்டிநான் விரும்ப கில்லேன்
முத்தினைத் தொழுது நாளு முடிகளால் வணங்கு வார்க்கு
அத்தன்மைத் தாகு மாரூ ரப்பனை யஞ்சி னேனே. ௯

தஞ்சொலா ரருள் பயக்குந் தமியனேன் றடமுலைக்கண்
அஞ்சொலார் பயிலு மாரூ ரப்பனை யூர னஞ்சிச்
செஞ்சொலா னயந்த பாடல் சிந்தியா வேத்த வல்லார்
நஞ்சுலாங் கண்டத் தெங்க ணாதனை நணுகு வாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவர் - வன்மீகநாதர் : இறைவி - அல்லியங்கோதையம்மை.



## திருவரிசிற்கரைப்புத்தூர் — பதிகம் ௧௦

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மலைக்கும் மகளஞ் சமத கரியை
யுரித்தி ரெரித்திர் வருமுப் புரங்கள்
சிலைக்குங் கொலைச்சே வுகந்தேற் றொழியீர்
சில்பலிக் கில்கடொ றுஞ்செல வொழியீர்
கலைக்கொம் புங்கரி மருப்பும் மிடறிக்
கலவம் மயிற்பீ லியுங்கா ரகிலும்
அலைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழக னீரே. ௧

அருமல ரோன்சிர மொன்றறுத் தீர்செறுத்
தீரழற் சூலத்தி லந்தக னைத்
திருமகள் கோனெடு மால்பல நாள்சிறப்
பாகிய பூசனை செய்பொ ழுதில்
ஒருமல ராயிரத் திற்குறை வாநிறை
வாகவோர் கண்மலர் சூட்ட லுமே
பொருவிற லாழி புரிந்தளித் தீர்பொழி
லார்திருப் புத்தூர்ப் புனித னீரே. ௨

தரிக்குந் தரைநீர் தழல்காற் றந்தரஞ்
சந்திரன் சவிதா வியமான னானீர்
சரிக்கும் பலிக்குத் தலையங்கை யேந்தித்
தையலார் பெய்யக்கொள் வதுதக்க தன்றால்
முரிக்குந் தளிர்ச்சந் தனத்தொடு வேயு
முழங்குந் திரைக்கைக ளால்வாரி மோதி
அரிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழக னீரே. ரு

கொடியுடை மும்மதில் வெந்தழி யக்குன்றம்
வில்லா நாணியிற் கோலொன் றினால்
இடிபட வெய்தெரித் திமைக் குமள
விலுமக் காரெதி ரெம்பெ ருமான்
கடிபடு பூங்கணை யான்கருப் புச்சிலைக்
காமனை வேவக் கடைக்கண் ணினால்
பொடிபட நோக்கிய தென்னை கொல்லோ
பொழிலார் திருப்புத்தூர்ப் புனித னீரே. சு

வணங்கித் தொழுவா ரவர்மால் பிரமன்
மற்றும் வானவர் தானவர் மாமுனிவர்
உணங்கற் றலையிற் பலிகொண் டலென்னே
யுலகங்க ளெல்லா முடையீ ருரையீர்
இணங்கிக் கயல்சே லிளவா ளைபாய
வினக்கெண் டைதுள்ளக் கண்டிருந் தவன்னம்
அணங்கிக் குணங்கொள் ளரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழக னீரே. எ

அகத்த டிமைசெய்யு மந்தணன் றானரி
சிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்த ளர்வெய்திக் குடத்தையு நும்முடி
மேல்விழுத் திட்டு நடுங்கு தலும்
வகுத்த வனுக்குநித் தற்படியும்
வருமென் றொருகா சினைநின் றநன்றிப்
புகழ்த்துணை கைப் புகச்செய் துகந்தீர்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனித னீரே. அ

பழிக்கும் பெருந்தக் கனெச்சம் மழியப்
பகலோன் முதலாப் பலதே வரையும்
தெழித்திட் டவரங் கஞ்சிதைத் தருளுஞ்
செய்கையென் னைகொலோ மைகொள்செம் மிடற்றீர்
விழிக்குந் தழைப்பீ லியொடே லமுந்தி
விளங்கும் மணிமுத் தொடுபொன் வரன்றி
அழிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. ௭

பறைக்கண் ணெடும்பேய்க் கணம்பா டல்செய்யக்
குறட்பா ரிடங்கள் பறைதா முழக்கப்
பிறைக்கொள் சடைதா ழப்பெயர்ந் துநட்டம்
பெருங்கா டரங்கா கநின்றா டலென்னே
கறைக்கொண் மணிகண் டமுந்திண் டோள்களுங்
கரங்கள் சிரந்தன் னிலுங்கச் சுமாகப்
பொறிக்கொள் ளரவம் புனைந்தீர் பலவும்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனித னீரே. ௮

மழைக்கண் மடவா ளையொர்பா கம்வைத்தீர்
வளர்புன் சடைக்கங் கையைவைத் துகந்தீர்
முழைக்கொள் ளரவோ டென்பணி கலனா
முழுநீறு மெய்பூ சுதலென் னைகொலோ
கழைக்கொள் கரும்புங் கதலிக் கனியுங்
கமுகின் பழுக்கா யுங்கவர்ந் துகொண்டிட்
டழைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழக னீரே. ௯

கடிக்கும் மரவால் மலையா லமரர்
கடலைக் கடைய வெழுகா ளகூடம்
ஒடிக்கும் முலகங் களையென் றதனை
யுமக்கே யமுதா கவுண்டீ ருமிழீர்
இடிக்கும் மழைவீழ்த் திழுத்திட் டருவி
யிருபா லுமோடி யிரைக்குந் திரைக்கை
அடிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழக னீரே. ௰

காரூர் மழைபெய் தபொழி யருவிக்
கழையோ டகிலுந் திட்டிரு கரையும்
போரூர் புனல்சே ரரிசிற் றென்கரைப்
பொழிலார் திருப்புத் தூர்ப் புனிதர் தம்மை
ஆரூ ரனரூந் தமிழைந் திரேணைடந்
தழகா லுரைப்பார் களுங்கேட் பவரும்
சீரூர் தருதே வர்கணங் களொடு
மிணங்கிச் சிவலோ கமதெய் துவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - படிக்காசுவைத்தபரமர்; இறைவி - அழகம்மை.

---

**பதிக வரலாறு:**

திருநறையூர்ச் சித்தீச்சரத்தைப் பணிந்தேத்திய நம்பியாரூரர் விழுப்பம் பொருந்திய பல பெரிய தொண்டர்கள் தம்மை விருப்பினோடும் எதிர்கொள்ளத் திருப்புத்தூரையடைந்து வணங்கிப் பாட லெடுத்த வித்திருப்பதிகத்தில் ஆறுந்திருப்பாட்டில் அத்திருப்பதியில் ஆதிசைவக் குலத்தில் தோன்றி இறைவனைப் பேரன்போடு இடையறாது வழிபட்டு வற்கடமுற்ற காலத்தும் பலநாள் பட்டினி கிடந்து வருந்தி 'எங்கோமான்றனை விடுவேனல்லே னென் றிராப்பகலும், கொங்கார் பன்மலர் கொண்டு குளிர்புனல் கொண்டர்ச்சிப்பாராய்' ஒரு நாள் திருமுழுக்காட்டும் பொழுது பசிப்பிணியான் வருந்தி நிலை தளர்ந்து நீர்க்குடத்தைத் தாங்க மாட்டாமல் இறைவன் முடிமீது வீழ்த்தயர்த்த புகழ்த்துணை நாயனருக்கு இறைவன் தினமொரு படிக்காசருளிய திறத்தை வைத்துச் சிறப்பித்துப் பாடியருளினார்.

## திருக்கச்சியனேகதங்காவதம் பதிகம் ௰

### பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தேனெய்புரிந்துழல் செஞ்சடையெம்பெரு
மானதிடந்திக ழைங்கணையக்
கோனையெரித்தெரி யாடியிடங்குல
வானதிடங்குறை யாமறையாம்
மானையிடத்ததொர் கையனிடம்மத
மாறுபடப்பொழி யும்மலைபோல்
யானையுரித்தபி ரானதிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. க

கூறுநடைக்குழி கட்பகுவாயன
பேயுகந்தாடநின் றோரியிட
வேறுபடக்குட கத்திலையம்பல
வாணனின்றாடல் விரும்புமிடம்
ஏறுவிடைக்கொடி யெம்பெருமானிமை
யோர்பெருமானுமை யாள்கணவன்
ஆறுசடைக்குடை யப்பனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. உ

கொடிகளிடைக்குயில் கூவுமிடம்மயி
லாலுமிடம்மழு வாளுடைய
கடிகொள்புனற்சடை கொண்டநுதற்கறைக்
கண்டனிடம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள்வினைப்பகை தீருமிடந்திரு
வாகுமிடந்திரு மார்பகலத்
தடிகளிடம்மழல் வண்ணனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. ௩

கொங்குநுழைத்தன வண்டறைகொன்றையுங்
கங்கையுந்திங்களுஞ் சூடுசடை
மங்குனுழைமலை மங்கையைநங்கையைப்
பங்கினிற்றங்கவு வந்தருள்செய்
சங்குக்குழைச்செவி கொண்டருவித்திரள்
பாயவியர்த்தழல் போதுடைத்தம்
அங்கைமழுத்திகழ் கையனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே.

பைத்தபடத்தலை யாடரவம்பயில்
கின்றவிடம்பயி லப்புகுவார்
சித்தமொருநெறி வைத்தவிடந்திகழ்
கின்றவிடந்திரு வானடிக்கே
வைத்தமனத்தவர் பத்தர்மனங்கொள
வைத்தவிடம்மழு வாளுடைய
அத்தனிடம்மழல் வண்ணனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே.

தண்டமுடைத்தரு மன்றமரென்றம
ரைச்செயும்வன்றுயர் தீர்க்குமிடம்
பிண்டமுடைப்பிற வித்தலைநின்று
நினைப்பவராக்கையை நீக்குமிடம்
கண்டமுடைக்கரு நஞ்சைநுகர்ந்தபி
ரானிடங்கட லேழுகடந்
தண்டமுடைப்பெரு மானிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே.

கட்டுமயக்க மறுத்தவர்கைதொழு
தேத்துமிடங்கதி ரோனொளியால்
விட்டுமிடம்விடை யூர்தியிடங்குயிற்
பேடைதன்சேவலொ டாடுமிடம்
மட்டுமயங்கி யவிழ்ந்தமலரொரு
மாதவியோடு மணம்புணரும்
அட்டபுயங்கப் பிரானிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே.

புல்லியிடந்தொழு தாய்துமென்றுதவர்
தம்புரமூன்றும் பொடிபடுத்த
வில்லியிடம்விர வாதுயிருண்ணும்வெங்
காலனைக்கால்கொடு வீந்தவியக்
கொல்லியிடங்குளிர் மாதவிமவ்வல்
குராவகுளங்குருக் கத்திபுன்னை
அல்லியிடைப்பெடை வண்டுறங்குங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. ௮

சங்கையவர்புணர் தற்கரியான்றளை
வேனலைகபாட விராமிகுசீர்
மங்கையவண்மகிழச் சுடுகாட்டிடை
நட்டநின்றாடிய சங்கரனெம்
அங்கையனல்லனை லேந்துமவன்கனல்
சேரொளியன்னதோர் பேரகலத்
தங்கையவன்னுறை கின்றவிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. ௯

வீடுபெறப்பல வூழிகணின்று
நினைக்குமிடம்வினை தீருமிடம்
பீடுபெறப்பெரி யோரதிடங்* கொண்டு
மேவினர்தங்களைக் காக்குமிடம்
பாடுமிடத்தடி யான்புகழூர
னுரைத்தவிம்மாலைகள் பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவ லோகனிடங்கலிக்
கச்சியனேகதங் காவதமே. ௧0

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - காவதநாதர்.



(பா - ம்.) *கலிக்கச்சியனேகதங் காப்பனிடம்.

## திருப்பூவணம் பதிகம் ௧௧

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருவுடை யார்திரு மாலய னாலும்
உருவுடை யாருமை யாளையொர் பாகம்
பரிவுடை யாரடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யாருறை பூவண மீதோ. ௧

எண்ணி யிருந்து கிடந்து நடந்தும்
அண்ண லெனநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னுருறை பூவண மீதோ. ௨

தெள்ளிய பேய்பல பூதம வற்றொடு
நள்ளிரு ணட்டம தாடன வின்றோர்
புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்
புள்ளுவ னுருறை பூவண மீதோ. ௩

கிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு வேந்தியோர் கையில்
அனலுடை யாரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ. ௪

நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி யென்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பில்
பொடியணி வாருறை பூவண மீதோ. ௫

மின்னனை யாடிரு மேனி விளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்னினை யார்புர மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ. ௬

மிக்கிறை யேயவன் றன்மதி யாவிட
நக்கிறை யேவிர லாலிற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வானுறை பூவண மீதோ. எ

*    *    *    *    அ

*    *    *    *    கூ

சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்
ஆர விருப்பிட மாவுறை வான்றனை
ஊர னுரைத்தசொன் மாலைகள் பத்திவை
பாரி லுரைப்பவர் பாவ மறுப்பரே. ய

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது

இறைவன் - பூவணநாதர், இறைவி - மின்னம்மை.

---

**பதிக வரலாறு :**

திருவாலவாயிலே யிறைவரை வழிபட்டு மூவேந்தர்களோடும் எழுந்தருளியிருந்த சுந்தரமூர்த்தி நாயனுர் திருப்பூவணத்தை வணங்க விரும்பியவர்களோடும் புறப்பட்டுச்சென் றதனை நெருங்கியபோது அருகே சூழ்ந்துவருந் திருத்தொண்டர்கள் அதனைச் சுட்டிக்காட்டத் 'தேடு மறைக்கரியாரைத் திருவுடையாரென்றெடுத்துப் பாடிசையிற் பூவண மீதோவென்று பகர்ந்தணைந்து' வணங்கி வழிபட்டார்.



பொது                                                                 பதிகம் கஉ

## திருநாட்டுத்தொகை

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வீழக்காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழையேறுகந் தானிடங் கொண்டதுங் கோவலூர்
தாழையூர் தகட்டூர் தக்களூர் தருமபுரம்
வாழைகாய்க் கும்வளர் மருகனாட்டு மருகலே. க

அண்டத்தண் டத்தினப் புறத்தாடு மமுதனூர்
தண்டந்தோட்டந் தண்டங்குறை தண்டலை யாலங்காடு
கண்டன்முண் டல்கள்சூழ் கழிப்பாலை கடற்கரை
கொண்டனாட்டுக் கொண்டல் குறுக்கைநாட்டுக் குறுக்கையே. உ

மூலனூர்முத லாயமுக் கண்ணன் முதல்வனூர்
நாலனூர்நரை யேறுகந் தேறிய நம்பனூர்
கோலநீற்றன் குற்றாலங் குரங்கணின் முட்டமும்
வேலனூர்வெற் றியூர்வெண் ணிக்கூற்றத்து வெண்ணியே. ங

தேங்கூருந் திருச்சிற் றம்பலஞ் சிராப்பள்ளி
பாங்கூ ரெங்கள்பி ரானுறையுங் கடம்பந்துறை
பூங்கூ ரும்பரமன் பரஞ்சோதி பயிலுமூர்
நாங்கூர்நாட்டு நாங்கூர் நறையூர்நாட்டு நறையூரே. ச

குழலைவென் றமொழி மடவாளையோர் கூறனும்
மழலையேற் றுமணா ளனிடந்தட மால்வரைக்
கிழவன் கீழைவழி பழையாறு கிழையமும்
மிழலைநாட்டு மிழலை வெண்ணிநாட்டு மிழலையே. ரு

தென்னூர்கைம் மைத்திருச் சுழியற்றிருக் கானப்பேர்
பன்னூர் புக்குறையும் பரமர்க்கிடம் பாய்நலம்
என்னூ ரெங்கள்பி ரானுறையுந் திருத்தேவனூர்
பொன்னூர்நாட்டுப் பொன்னூர் புரிசைநாட்டுப் புரிசையே. சு

ஈழநாட்டு மாதோட்டந் தென்னாட் டிராமேச்சுரம்
சோழநாட் டுத்துருத்தி நெய்த்தானந் திருமலை
ஆழியூ ரனநாட் டுக்கெல்லா மணியாகிய
கீழையில்லர னூர்க்கிடங் கிள்ளி குடியதே. எ

நாளுநன்னிலந் தென்பனை யூர்வட கஞ்சனூர்
நீளநீள்சடை யானெல்லிக் காவு நெடுங்களம்
காளகண்ட னுறையுங் கடைமுடி கண்டியூர்
வேளாநாட்டு வேளூர் விளத்தூர்நாட்டு விளத்தூரே. அ

தழலுமேனியன் றையலோர் பாக மமர்ந்தவன்
தொழலுந்தொல் வினைதீர்க் கின்றசோதி சோற்றுத்துறை
கழலுங்கோவை யுடையவன் காதலிக் கும்மிடம்
பழனம்பாம் பணிபாம் புரந்தஞ்சை தஞ்சாக்கையே. ௬

மைகொள்கண் டனெண்டோளன் முக்கண்ணன் வலஞ்சுழி
பைகொள்வாளர வாட்டித் திரியும் பரமனார்
செய்யில்வா ளைகள்பாய்ந் துகளுந்திருப் புன்கூர்நன்
றையன்மேய பொழிலணி யாவடு துறையதே. ௰

பேணிநா டதனிற் றிரியும் பெருமான்றனை
ஆணையா வடியார்க டொழப்படு மாதியை
நாணியூரன் வனப்பகை யப்பன்வன் றொண்டன்சொல்
பாணியாலிவை யேத்துவார் சேர்பர லோகமே. கக

திருச்சிற்றம்பலம்



## திருத்துறையூர் பதிகம் கசு

### பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மலையா ரருவித் திரண்மா மணியுந்திக்
குலையாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கலையா ரல்குற் கன்னியரா டுந்துறையூர்த்
தலைவா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. க

மத்தம் மதயானை யின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப் பரவுந் துறையூர்
அத்தா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. உ

கந்தங் கமழ்கா ரகில்சந் தனமுந்திச்
செந்தண் புனல்வந் திழிபெண்ணை வடபால்
மந்தி பலமா நடமா டுந்துறையூர்
எந்தா யுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. ௩

அரும்பார்ந் தனமல் லிகைசண் பகஞ்சாடிச்
சுரும்பாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
கரும்பார் மொழிக்கன் னியராடுந் துறையூர்
விரும்பா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. ௪

பாடார்ந் தனமாவும் பலாக்களுஞ் சாடி
நாடார வந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
மாடார்ந் தனமா ளிகைசூழுந் துறையூர்
வேடா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. ரு

மட்டார் மலர்க்கொன் றையும்வன்னி யுஞ்சாடி
மொட்டாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
கொட்டாட் டொடுபாட் டொலியோவாத் துறையூர்ச்
சிட்டா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. சா

மாதார் மயிற்பீ லியும்வெண் ணுரையுந்தித்
தாதாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
போதார்ந் தனபொய் கைகள்சூழுந் துறையூர்
நாதா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. எ

கொய்யா மலர்க்கோங் கொடுவேங் கையுஞ்சாடிச்
செய்யாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
மையார் தடங்கண் ணியராடுந் துறையூர்
ஐயா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. அ

விண்ணார்ந் தனமே கங்கணின் றுபொழிய
மண்ணாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
பண்ணார் மொழிப்பா வையராடுந் துறையூர்
அண்ணா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. கூ

மாவாய்ப் பிளந்தானு மலர்மிசை யானும்
ஆவா வவர்தேடித் திரிந்தல மந்தார்
பூவார்ந் தனபொய் கைகள்சூழுந் துறையூர்த்
தேவா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே. ௰

செய்யார் கமலம் மலர்நாவ லூர்மன்னன்
கையாற் றொழுதேத்தப் படுந்துறை யூர்மேல்
பொய்யாத் தமிழூர னுரைத்தன வல்லார்
மெய்யே பெறுவார்க டவநெறி தானே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது
இறைவன் - துறையூர்நாதர், இறைவி - பூங்கோதைநாயகி.



## திருப்பாச்சிலாச்சிராமம் பதிகம் கரு

பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

வைத்தனன் றனக்கே தலையுமென் னாவு
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் றனக்கே திருவடிக் கடிமை
யுரைத்தக்கா லுவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத் தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகி
லிவரலா தில்லையோ பிரானார். ௧

அன்னையே யென்னே னத்தனே யென்னே
னடிகளே யமையுமென் றிருந்தேன்
என்னையு மொருவ னுளனென்று கருதி
யிறையிறை திருவருள் காட்டாய்
அன்னமாம் பொய்கை சூழ்தரு பாச்சி
லாச்சிரா மத்துறை யடிகள்
பின்னையே யடியார்க் கருள்செய்வ தாகி
லிவரலா தில்லையோ பிரானார். ௨

உற்றபோதல்லா லுறுதியையுணரே
னுள்ளமேயமையுமென் றிருந்தேன்
செற்றவர்புரமூன் றெரியெழச்செற்ற
செஞ்சடைநஞ்சடை கண்டர்
அற்றவர்க்கருள்செய் பாச்சிலாச்சிராமத்
தடிகடாமியாதுசொன் னாலும்
பெற்றபோதுகந்து பெறாவிடிலிகழி
லிவரலாதில்லையோ பிரானார். ௩

நாச்சிலபேசி நமர்பிறரென்று
நன்றுதீதென்கிலர் மற்றோர்
பூச்சிலைநெஞ்சே பொன்விளைகழனிப்
புள்ளினஞ்சிலம்புமாம் பொய்கைப்
பாச்சிலாச்சிராமத் தடிகளென்றிவர்தாம்
பலரையுமாட்கொள்வர் பரிந்தோர்
பேச்சிலரொன்றைத் தரவிலராகி
லிவரலாதில்லையோ பிரானார். ௪

வரிந்தவெஞ்சிலையா லந்தரத்தெயிலை
வாட்டியவகையின ரேனும்
புரிந்தவந்நாளே புகழ்தக்கவடிமை
போகுநாள்வீழுநா ளாகிப்
பரிந்தவர்க்கருள்செய் பாச்சிலாச்சிராமத்
தடிகடாமியாதுசொன் னாலும்
பிரிந்திறைப்போதிற் பேர்வதேயாகி
லிவரலாதில்லையோ பிரானார். ௫

செடித்தவஞ்செய்வார் சென்றுழிச்செல்லேன்
றீவினைசெற்றிடு மென்று
அடித்தவமல்லா லாரையுமறியே
னவதுமறிவரெம் மடிகள்
படைத்தலைச்சூலம் பற்றியகையர்
பாச்சிலாச்சிராமத் தெம்பரமர்
பிடித்தவெண்ணீறே பூசுவதானா
லிவரலாதில்லையோ பிரானார். ௬

கையதுகபாலங் காடுறைவாழ்க்கை
கட்டங்கமேந்திய கையர்
மெய்யதுபுரிநூன் மிளிரும்புன்சடைமேல்
வெண்டிங்கள்சூடிய விகிர்தர்
பையரவல்குற் பாவையராடும்
பாச்சிலாச்சிராமத்தெம் பரமர்
மெய்யரேயொத்தோர் பொய்செய்வதாகி
லிவரலாதில்லையோ பிரானூர். எ

நிணம்படுமுடலை நிலைமையென்றோரே
னெஞ்சமேதஞ்சமென் றிருந்தேன்
கணம்படிந்தேத்திக் கங்குலும்பகலுங்
கருத்தினுற்கைதொழு தெழுவேன்
பணம்படுமரவம் பற்றியகையர்
பாச்சிலாச்சிராமத்தெம் பரமர்
பிணம்படுகாட்டி லாடுவதாகி
லிவரலாதில்லையோ பிரானூர். அ

குழைத்துவந்தோடிக் கூடுதிநெஞ்சே
குற்றேவலுற்றொறுஞ் செய்வான்
இழைத்தநாள்கடவா ரன்பிலரேனு
மெம்பெருமானென்றெப் போதும்
அழைத்தவர்க்கருள்செய் பாச்சிலாச்சிராமத்
தடிகடாமியாதுசொன் னூலும்
பிழைத்ததுபொறுத்தொன் றீகிலராகி
லிவரலாதில்லையோ பிரானூர். கூ

துணிப்படுமுடையுஞ் சுண்ணவெண்ணீறுந்
தோற்றமுஞ்சிந்தித்துக் காணில்
மணிப்படுகண்டனை வாயினுற்கூறி
மனத்தினுற்றொண்டனே னினைவேன்
பணிப்படுமரவம் பற்றியகையர்
பாச்சிலாச்சிராமத்தெம் பரமர்
பிணிப்படவாண்டு பணிப்பிலராகி
லிவரலாதில்லையோ பிரானூர். ώ

ஒருமையேயல்லே னெழுமையுமடியே
னடியவர்க்கடியனு மானேன்
உரிமையாலுரியே னுள்ளமுமுருகு
மொண்மலர்ச்சேவடி காட்டாய்
அருமையாம்புகழார்க் கருள்செயும்பாச்சி
லாச்சிராமத்தெம் மடிகள்
பெருமைகள்பேசிச் சிறுமைகள்செய்யி
லிவரலாதில்லையோ பிரானார். கக

ஏசினவல்ல விகழ்ந்தனவல்ல
வெம்பெருமானென்றெப் போதும்
பாயினபுகழான் பாச்சிலாச்சிராமத்
தடிகளையடிதொழப் பன்னாள்
வாயினாற்கூறி மனத்தினானினைவான்
வளவயனாவலா ரூரன்
பேசினபேச்சைப் பொறுக்கிலராகி
லிவரலாதில்லையோ பிரானார். கஉ

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - மாற்றறிவரதர், இறைவி - பாலசுந்தரி.

---

**பதிக வரலாறு:**

திருவானைக்காவையும் அதனருகிலுள்ள தலங்களையும் வணங்கிய நம்பியாரூரர் திருப்பாச்சிலாச்சிராமஞ் சென்றடைந்து இறைவனை வழிபட்டுத் தமக்குப் பொன்றராதகுறையால் மனப்புழுக்கமடைந்து அடியார் திருமுன்னே நின்று முறையிடுவார் போன்று என்புருகித் தமது தோழமைத்தன்மையால் 'இவரலாதில்லையோபிரானார்' என்று ஈற்றடி தோறும் வைத்து 'வைத்தனன் றனக்கே' என்னு மிப்பதிகம் பாடியருளப் பெருமான் விழுநிதிக்குவை யளித்தருளினார்.



## திருநாட்டியத்தான்குடி பதிகம் கடு

### பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

பூணாணவதொ ரரவங்கண்டஞ்சேன்
புறங்காட்டாடல்கண் டிகழேன்
பேணீராகிலும் பெருமையையுணர்வேன்
பிறவேனாகிலு மறவேன்
காணீராகிலுங் காண்பனென்மனத்தாற்
கருதீராகிலுங் கருதி *
நாணேனும்மடி பாடுதலொழியே
னாட்டியத்தான்குடி நம்பீ.

கச்சேர்பாம்பொன்று கட்டிநின்றிடுகாட்
டெல்லியிலாடலைக் கவர்வன்
துச்சேனென்மனம் புகுந்திருக்கின்றமை
சொல்லாய்திப்பிய மூர்த்தீ
வைச்சேயிடர்களைக் களைந்திடவல்ல
மணியேமாணிக்க வண்ணா
நச்சேனொருவரை நானுமையல்லா
னாட்டியத்தான்குடி நம்பீ.

அஞ்சாதேயுமக் காட்செயவல்லே
னியாதினுக்காசைப் படுகேன்
பஞ்சேர்மெல்லடி மாமலைமங்கை
பங்காவெம்பர மேட்டீ
மஞ்சேர்வெண்மதி செஞ்சடைவைத்த
மணியேமாணிக்க வண்ணா
நஞ்சேர்கண்டா வெண்டலையேந்தீ
நாட்டியத்தான்குடி நம்பீ.

---

(பா - ம்.) * கருதிடிலிகழேன்.

கல்லேனல்லே னின்புகழடிமை
கல்லாதேபல கற்றேன்
நில்லேனல்லே னின்வழிநின்றார்
தம்முடைநீதியை நினைய
வல்லேனல்லேன் பொன்னடிபரவ
மாட்டேன்மறுமையை நினைய
நல்லேனல்லே னுனுமக்கல்லா
னாட்டியத்தான்குடி நம்பீ. ௪

மட்டார்பூங்குழன் மலைமகள்கணவனைக்
கருதாதார்தமைக் கருதேன்
ஒட்டீராகிலு மொட்டுவனடியே
னும்மடியடைந்தவர்க் கடிமைப்
பட்டேனாகிலும் பாடுதலொழியேன்
பாடியுநாடியு மறிய
நட்டேனாதலா னான்மறக்கில்லே
னாட்டியத்தான்குடி நம்பீ. ௫

படப்பாற்றன்மையி லுன்பட்டதெல்லாம்
படுத்தாயென்றல்லல் பறையேன்
குடப்பாச்சில்லுறை கோக்குளிர்வானே
கோனேகூற்றுதைத் தானே
மடப்பாற்றயிரொடு நெய்மகிழ்ந்தாடு
மறையோதிமங்கை பங்கா
நடப்பீராகிலு நடப்பனும்மடிக்கே
நாட்டியத்தான்குடி நம்பீ. ௬

ஐவாயரவினை மதியுடன்வைத்த
வழகாவமரர்க டலைவா
எய்வான்வைத்ததோ ரிலக்கினையணைதர
நினைந்தேனுள்ளமுள் ளளவும்
உய்வானெண்ணிவந் தும்மடியடைந்தே
னுகவீராகிலு முகப்பன்
நைவானன்றுமக் காட்பட்டதடியே
னாட்டியத்தான்குடி நம்பீ. எ

கலியேன்மாநுட வாழ்க்கையொன்றாகக்
கருதிடிற்கண்கணீர் பில்கும்
பலிதேர்ந்துண்பதோர் பண்புகண்டிகழேன்
பசுவேயேறினும் பழியேன்
வலியேயாகிலும் வணங்குதலொழியேன்
மாட்டேன்மறுமையை நினையேன்
நலியேனொருவரை நானுமையல்லா
னாட்டியத்தான்குடி நம்பீ. ௮

குண்டாடிச்சமண் சாக்கியப்பேய்கள்
கொண்டாராகிலுங் கொள்ளக்
கண்டாலுங்கருதேனெருதேறுங்
கண்ணாநின்னல தறியேன்
தொண்டாடித்தொழு வார்தொழக்கண்டு
தொழுதேனென்வினை போக
நண்டாடும்வயற் றண்டலைவேலி
நாட்டியத்தான்குடி நம்பீ. ௯

கூடாமன்னரைக் கூட்டத்துவென்ற
கொடிறன்கோட்புலி சென்னி
நாடார்தொல்புகழ் நாட்டியத்தான்குடி
நம்பியைநாளு மறவாச்
சேடார்பூங்குழற் சிங்கடியப்பன்
றிருவாரூர னுரைத்த
பாடீராகிலும் பாடுமின்றொண்டீர்
பாடநும்பாவம்பற் றறுமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - இரத்தினகிரிநாதர், இறைவி - மலர்மங்கைநாயகி.

---

**பதிக வரலாறு:**

வன்றொண்டப்பெருமான் திருவாரூரிலே யெழுந்தருளி யிருக்கும் **போது** கோட்புலி நாயனார் அவரையடைந்து தம்பதிக்கு எழுந்தருள **வேண்டுமென்று** குறையிரந்து இசைவுகொண்டு தமது பதிக்கேகினார்.

நம்பியாரூரரும் திருவாரூரினின்றும் புறப்பட்டுப் பல பதிகளை வணங்கி வழிபட்டுத் திருநாட்டியத்தான் குடியையடையக்கோட்புலியார் தமதுநக ரத்தை எலும் வகையாலலங்கரித்து எதிர்கொண்டிறைஞ்சித் தமது மாளி கையிலெழுந்தருளச்செய்து பொற்றவிசிலிருத்தித் திருவடியினை விளக்கி யருச்சித்து அடைக்காய் முதலியவற்றைப் பலபாசனத்தேந்தியும், திருப் பள்ளித்தாமங்கள் மிகவெடுத்தும் திருவாபரணவருக்கம் பல தாங்கியும் பலவிதத்துப் பரிவட்டங்கள் ஊழி னிரைத்தும் எதிரிறைஞ்சிப் பூசித்துத் தமது மனையிற் றிருவமுது செய்வித்துப் பெருவிருப்பாற் றாம் பெற்றெ டுத்த தேனார் கோதைச் சிங்கடியாரையும் மானார் நோக்கின் வனப்பகை யாரையும் கொணர்ந்து நாயனாரைப் பணிவித்துப் பணிந்து அடியேன் பெற்ற மக்களிவரை யடிமையாகக் கொண்டருளிக் கருணையளிக்க வேண்டுமென வேண்டினார். சுவாமிகள் இவரெனக்குத் தூயமக்களெனக் கருதி மகண்மைகொண்டு அவரைக் குறங்கின்வைத் துட்கசிவால் அணைத்து உச்சிமீது கண்ணீர்விழ மோந்து அவர் வேண்டுவன கொடுத் துத் திருக்கோயிலுக்கு எழுந்தருளி இறைவனை வணங்கிப் 'பூணாண தோரரவங் கண்டஞ்சேன்' என்னும் திருப்பதிகம் எடுத்து அதனது திருக்கடைக்காப்பில் கோட்புலி நாயனாரைக் 'கூடாமன்னரைக் கூட் டத்து வென்றகொடிறன் கோட்புலி சென்னி' என்று சிறப்பித்துத் தம்மையும் அவர் மக்களை மகண்மை கொண்டபடியின் சிங்கடியப்பன் என்று வைத்தருளினார்.



## திருக்கலயநல்லூர் பதிகம் கசு

### பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

குரும்பைமுலைமலர்க்குழலி கொண்டதவங்கண்டு
குறிப்பினொடுசென்றவடன் குணத்தினைநன்கறிந்து
விரும்புவரங்கொடுத்தவளை வேட்டருளிச்செய்த
விண்ணவர்கோன்கண்ணுதலோன் மேவியவூர்வினவில்
அரும்பருகேசுரும்பருவ வறுபதம்பண்பாட
வணிமயில்கணடமாடு மணிபொழில்சூழயலின்
கரும்பருகேகருங்குவளை கண்வளருங்கழனிக்
கமலங்கண்முகமலருங் கலயநல்லூர்காணே. க

செருமேவுசலந்தரனைப் பிளந்தசுடராழி
　　செங்கண்மலர்பங்கயமாச் சிறந்தானுக்கருளி
இருண்மேவுமந்தகன்மேற் றிரிசூலம்பாய்ச்சி
　　யிந்திரனைத்தோண்முரித்த விறையவனூர்வினவில்
பெருமேதைமறையொலியும் பேரிமுழவொலியும்
　　பிள்ளையினந்துள்ளிவிளை யாட்டொலியும்பெருகக்
கருமேதிபுனன்மண்டக் கயன்மண்டக்கமலங்
　　களிவண்டின்கணமிரியுங் கலயநல்லூர்காணே. உ

இண்டைமலர்கொண்டுமணை லிலிங்கமதுவியற்றி
　　யினத்தாவின்பாலாட்ட விடறியதாதையைத்தாள்
துண்டமிடுசெண்டியடி யண்டர்தொழுதேத்தத்
　　தொடர்ந்தவனைப்பணிகொண்ட விடங்கனதூர்வினவில்
மண்டபமுங்கோபுரமு மாளிகைசூளிகையும்
　　மறையொலியும்விழவொலியு மறுகுநிறைவெய்திக்
கண்டவர்கண்மனங்கவரும் புண்டரிகப்பொய்கைக்
　　காரிகையார்குடைந்தாடுங் கலயநல்லூர்காணே. ௩

மலைமடந்தைவிளையாடி வளையாடுகரத்தான்
　　மகிழ்ந்தவள்கண்புதைத்தலுமே வல்லிருளாயெல்லா
உலகுடன்றான்மூடவிரு ளோடும்வகைநெற்றி
　　யொற்றைக்கண்படைத்துகந்த வுத்தமனூர்வினவில்
அலையடைந்தபுனல்பெருகி யானைமருப்பிடறி
　　யகிலொடுசந்துந்திவரு மரிசிலின்றென்கரைமேல்
கலையடைந்துகலிகடியந் தணரோமப்புகையாற்
　　கணமுகில்போன்றணிகிளருங் கலயநல்லூர்காணே. ௪

நிற்பானுங்கமலத்தி லிருப்பானுமுதலா
　　நிறைந்தமரர்குறைந்திரப்ப நினைந்தருளியவர்க்காய்
வெற்பார்வில்லரவுநா ணெரியம்பால்விரவார்
　　புரமூன்றுமெரிவித்த விகிர்தனூர்வினவில்
சொற்பாலபொருட்பால சுருதியொருநான்குந்
　　தோத்திரமும்பலசொல்லித் துதித்திறைதன்றிறத்தே
கற்பாருங்கேட்பாரு மாயெங்குநன்கார்
　　கலைபயிலந்தணர்வாழுங் கலயநல்லூர்காணே. ௫

பெற்றிமையொன் றறியாத தக்கனது வேள்விப்
பெருந்தேவர்சிரந்தோள்பற் கரங்கண்பீடழியச்
செற்றுமதிக்கலைசிதையத் திருவிரலாற்றேய்வித்
தருள்பெருகுசிவபெருமான் சேர்தருமூர்வினவில்
தெற்றுகொடிமுல்லையொடு மல்லிகைசெண்பகமுந்
திரைபொருதுவருபுனல்சே ரரிசிலின்றென்கரைமேல்
கற்றினநன்கரும்பின்முளை கறிகற்கக்கறவை
கமழ்கழுநீர்கவர்கழனிக் கலயநல்லூர்காணே. ௬

இலங்கையர்கோன்சிரம்பத்தோ டிருபதுதிண்டோளு
மிற்றலறவொற்றைவிரல் வெற்பதன்மேலூன்றி
நிலங்கிளர்நீர்நெருப்பொடுகாற் றாகாசமாகி
நிற்பனவுநடப்பனவா நின்மலனூர்வினவில்
பலங்கள்பலதிரையுந்திப் பருமணிபொன்கொழித்துப்
பாதிரிசந்தகிலினொடு கேதகையும்பருகிக்
கலங்குபுனலலம்பிவரு மரிசிலின்றென்கரைமேற்
கயலுகளும்வயல்புடைசூழ் கலயநல்லூர்காணே. ௭

மாலயனுங்காண்பரிய மாலெரியாய்நிமிர்ந்தோன்
வன்னிமதிசென்னிமிசை வைத்தவன்மொய்த்தெழுந்த
வேலைவிடமுண்டமணி கண்டன்விடையூரும்
விமலனுமையவளோடு மேவியவூர்வினவில்
சோலைமலிகுயில்கூவக் கோலமயிலாலச்
சுரும்பொடுவண்டிசைமுரலப் பசுங்கிளிசொற்றுதிக்கக்
காலையிலுமாலையிலுங் கடவுளடிபணிந்து
கசிந்தமனத்தவர்பயிலுங் கலயநல்லூர்காணே. ௮

பொரும்பலமதுடையசுரன் றாரகனைப்பொருது
பொன்றுவித்தபொருளினைமுன் படைத்துகந்தபுனிதன்
கரும்புவிலின்மலர்வாளிக் காமனுடல்வேவக்
கனல்விழித்தகண்ணுதலோன் கருதுமூர்வினவில்
இரும்புனல்வெண்டிரைபெருகி யேலமிலவங்க
மிருகரையும்பொருதலைக்கு மரிசிலின்றென்கரைமேல்
கரும்புனைவெண்முத்தரும்பிப் பொன்மலர்ந்துபவளக்
கவின்காட்டுங்கடிபொழில்சூழ்கலயநல்லூர்காணே. ௯

தண்கமலப்பொய்கைபுடை சூழ்ந்தழகார் தலத்திற்
றடங்கொள்பெருங்கோயிறனிற் றக்கவகையாலே
வண்கமலத்தயன்முன்னாள் வழிபாடுசெய்ய
மகிழ்ந்தருளியிருந்தபரன் மருவியவூர்வினவில்
வெண்கவரிகரும்பீலி வேங்கையொடுகோங்கின்
விரைமலரும்விரவுபுன லரிசிலின்றென்கரைமேல்
தண்கமுகின்பூம்பாளை மதுவாசங்கலந்த
கமழ்தென்றல்புகுந்துலவுகலயநல்லூர்காணே. ௰

தண்புனலும்வெண்மதியுந் தாங்கியசெஞ்சடையன்
றாமரையோன்றலைகலனாக் காமரமுன்பாடி
உண்பலிகொண்டுழல்பரம னுறையுமூர்நிறைநீ
ரொழுகுபுனலரிசிலின்றென் கலயநல்லூரதனை
நண்புடையநன்சடைய னிசைஞானிசிறுவ
னாவலர்கோனாரூர னவினயந்துரைசெய்
பண்பயிலும்பத்துமிவை பத்திசெய்துபாட
வல்லவர்களல்லலொடு பாவமிலர்தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - அமிர்தகலாநாதர், இறைவி - அமிர்தவல்லி.



## திருநாவலூர் — பதிகம் ௧௭

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

கோவலனான்முகன் வானவர்கோனுங்குற் றேவல்செய்ய
மேவலர்முப்புரந் தீயெழுவித்தவ னோரம்பினால்
ஏவலனார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நாவலனார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. ௧

தன்மையினாலடி யேனைத்தாமாட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள்பேசிட வன்றொண்டனென்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள்பேசவும் பொன்னைத்தந்தென்னைப்போகம்புணர்த்த
நன்மையினார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. உ

வேகங்கொண்டோடிய வெள்விடையேறியொர் மெல்லியலை[டார்
ஆகங்கொண்டார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனையாளுங்கொண்
போகங்கொண்டார்கடற் கோடியின்மோடியைப் பூண்பதாக
நாகங்கொண்டார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. ங

அஞ்சுங்கொண்டாடுவ ராவினிற்சேவினை யாட்சிகொண்டார்
தஞ்சங்கொண்டாரடிச் சண்டியைத்தாமென வைத்துகந்தார்
நெஞ்சங்கொண்டார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனையாளுங்கொண்டு
நஞ்சங்கொண்டார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. ச

உம்பரார்கோனைத்திண் டோண்முரித்தாருரித் தார்களிற்றைச்
செம்பொனார்தீவண்ணர் தூவண்ணநீற்றரோ ராவணத்தால்
எம்பிரானார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நம்பிரானார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. ரு

கோட்டங்கொண்டார்குட மூக்கிலுங்கோவலுங் கோத்திட்டையும்
வேட்டங்கொண்டார்வெண்ணெய்நல்லூரில்வைத்தெனையாளுங்கொண்
ஆட்டங்கொண்டார்தில்லைச் சிற்றம்பலத்தே யருக்கனைமுன்[டார்
நாட்டங்கொண்டார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. சு

தாயவளாய்த்தந்தை யாகிச்சாதல் பிறத்தலின்றிப்
போயகலாமைத்தன் பொன்னடிக்கென்னைப் பொருந்தவைத்த
வேயவனார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நாயகனார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. எ

வாயாடிமாமறை யோதியோர்வேதிய னாகிவந்து
தீயாடியார்சினக் கேழலின்பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடியார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நாயாடியார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. அ

படமாடுபாம்பணை யானுக்கும்பாவைநல் லாடனக்கும்
வடமாடுமால்விடை யேற்றுக்கும்பாகனும் வந்தொருநாள்
இடமாடியார்வெண்ணெய் நல்லூரில்வைத்தெனை யாளுங்கொண்ட
நடமாடியார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. க

மிடுக்குண்டென்றோடியோர் வெற்பெடுத்தான்வலி யைநெரித்தார்
அடக்கங்கொண்டாவணங் காட்டிநல்வெண்ணெயூ ராளுங்கொண்டார்
தடுக்கவொண்ணாததோர் வேழத்தினையுரித் திட்டுமையை
நடுக்கங்கண்டார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே. ய

நாதனுக்கூர்நமக் கூர்நரசிங்க முனையரையன்
ஆதரித்தீசனுக் காட்செயுமூரணி நாவலூரென்
றோதநற்றக்கவன் றொண்டனாரூர னுரைத்ததமிழ்
காதலித்துங்கற் றுங் கேட்பவர்தம்வினைக் கட்டறுமே. கக

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது

இறைவன் - நாவலேசுவரர் ; இறைவி - சுந்தராம்பிகை.



## திருவேள்விக்குடி  பதிகம் கஅ

மூப்பதுமில்லை

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்பதில்லை
சேர்ப்பதுகாட்டகத் தூரினுமாகச்சிந் திக்கினல்லால்
காப்பதுவேள்விக் குடிதண்டுருத்தியெங் கோனரைமேல்
ஆர்ப்பதுநாக மறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. க

கட்டக்காட்டின்னட மாடுவரியாவர்க்குங் காட்சியொண்ணார்
சுட்டவெண்ணீறணிந் தாடுவர்பாடுவர் தூயநெய்யால்
வட்டக்குண்டத்தி லெரிவளர்த்தோம்பி மறைபயில்வார்
அட்டக்கொண்டுண்ப தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. உ

பேருமோராயிரம் பேருடையார்பெண்ணோ டாணுமல்லர்
ஊருமதொற்றியூர் மற்றையூர்பெற்றவா நாமறியோம்
காருங்கருங்கட னஞ்சமுதுண்டுகண் டங்கறுத்தார்க்
காரம்பாம்பாவ தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. ௩

ஏனக்கொம்பும்மிள வாமையும்பூண்டங்கோ ரேறுமேறிக்
கானக்காட்டிற்றொண்டர் கண்டனசொல்லியுங் காமுறவே
மானைத்தோலொன்றுடுத் துப்புலித்தோல் பியற்குமிட்டு
யானைத்தோல்போர்ப்ப தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே.

ஊட்டிக்கொண்டுண்பதொ ருண்மிலருரிடு பிச்சையல்லால்
பூட்டிக்கொண்டேற்றினை யேறுவரேறியொர் பூதந்தம்பால்
பாட்டிக்கொண்டுண்பவர் பாழிதொறும்பல பாம்புபற்றி
ஆட்டிக்கொண்டுண்ப தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. ரு

குறவனார் தம்மக டம்மகனார்மண வாட்டிகொல்லை
மறவனாராயங்கோர் பன்றிப்பின்போவது மாயங்கண்டீர்
இறைவனாராதியார் சோதியராயங்கோர் சோர்வுபடா
அறவனாராவ தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. சா

பித்தரையொத்தொரு பெற்றியர்நற்றவை யென்னைப்பெற்ற
முற்றவைதம்மனை தந்தைக்குந்தவ்வைக்குந் தம்பிரானார்
செத்தவர்தந்தலை யிற்பலிகொள்வதே செல்வமாகில்
அத்தவமாவ தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. எ

உம்பரானூழியா னாழியானோங்கி மலருறைவான்
தம்பரமல்லவர் சிந்திப்பவர்தடு மாற்றறுப்பார்
எம்பரமல்லவ ரென்னெஞ்சத்துள்ளு மிருப்பதாகில்
அம்பரமாவ தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. அ

இந்திரனுக்கு மிராவணனுக்கு மருள்புரிந்தார்
மந்திரமோதுவர் மாமறைபாடுவர் மான்மறியர்
சிந்துரக்கண்ணனு நான்முகனும்முட னாய்த்தனியே
அந்தரஞ்செல்வ தறிந்தோமேனுமிவர்க் காட்படோமே. கூ

கூடலர்மன்னன் குலநாவலூர்க்கோ னலத்தமிழைப்
பாடவல்லபர மன்னடியார்க்கடி மைவழுவா
நாடவல்லதொண்ட ஞரூரனுட்படு மாறுசொல்லிப்
பாடவல்லார்பர லோகத்திருப்பது பண்டமன்றே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது

இறைவன் - கலியாணசுந்தரர், இறைவி - பரிமளசுகந்தநாயகி.



## திருநின்றியூர்  பதிகம் கக

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

அற்றவனாரடி யார்தமக்காயிழை பங்கினராம்
பற்றவனீரெம் பராபரரென்று பலர்விரும்பும்
கொற்றவனார்குறு காதவரூர்நெடு வெஞ்சரத்தால்
செற்றவனார்க்கிட மாவதுநந்திரு நின்றியூரே. க

வாசத்தினார்மலர்க் கொன்றையுள்ளார்வடி வார்ந்தநீறு
பூசத்தினார்புக லிந்நகர்போற்றுமெம் புண்ணியத்தார்
நேசத்தினாலென்னை யாளுங்கொண்டார்நெடு மாகடல்சூழ்
தேசத்தினார்க்கிட மாவதுநந்திரு நின்றியூரே. உ

அங்கையின்மூவிலை வேலரமர ரடிபரவச்
சங்கையைநீங்க வருளித்தடங்கட னஞ்சமுண்டார்
மங்கையொர்பாகர் மகிழ்ந்தவிடம்வள மல்குபுனற்
செங்கயல்பாயும் வயல்பொலியுந்திரு நின்றியூரே. ந

ஆறுகந்தாரங்க நான்மறையாரெங்கு மாகியடல்
ஏறுகந்தாரிசை யேழுகந்தார்முடிக் கங்கைதன்னை
வேறுகந்தார்விரி நூலுகந்தார்பரி சாந்தமதா
நீறுகந்தாருறை யும்மிடமாந்திரு நின்றியூரே. ச

வஞ்சங்கொண்டார்மனஞ் சேரகில்லார்நறு நெய்தயிர்பால்
அஞ்சுங்கொண்டாடிய வேட்கையினாரதி கைப்பதியே
தஞ்சங்கொண்டார்தமக் கென்றுமிருக்கை சரணடைந்தார்
நெஞ்சங்கொண்டார்க்கிட மாவதுநந்திரு நின்றியூரே. ரு

ஆர்த்தவராடர வம்மரைமேற்புலி யீருரிவை
போர்த்தவரானையின் றோலுடல்வெம்புலால் கையகலப்
பார்த்தவரின்னுயிர் பார்படைத்தான்சிர மஞ்சிலொன்றைச்
சேர்த்தவருக்குறை யும்மிடமாந்திரு நின்றியூரே. சு

தலையிடையார்பலி சென்றகந்தோறுந் திரிந்தசெல்வர்
மலையுடையாளொரு பாகம்வைத்தார்கற் றுதைந்தநன்னீர்
அலையுடையார்சடை யெட்டுஞ்சுழல வருநடஞ்செய்
நிலையுடையாருறை யும்மிடமாந்திரு நின்றியூரே. எ

எட்டுகந்தார்திசை யேழுகந்தாரெழுத் தாறுமன்பர்
இட்டுகந்தார்மலர்ப் பூசையிச்சிக்கு மிறைவர்முன்னாள்
பட்டுகும்பாரிடைக் காலனைக்காய்ந்து பலியிரந்தூண்
சிட்டுகந்தார்க்கிட மாவதுநந்திரு நின்றியூரே. அ

காலமுநாயிறு மாகிநின்றார்கழல் பேணவல்லார்
சீலமுஞ்செய்கையுங் கண்டுகப்பாரடி போற்றிசைப்ப
மாலொடுநான்முக னிந்திரன்மந்திரத் தால்வணங்க
நீலநஞ்சுண்டவ ருக்கிடமாந்திரு நின்றியூரே. கூ

வாயார்மனத்தா னினைக்குமவருக் கருந்தவத்தில்
தூயார்சுடுபொடி யாடியமேனியர் வானிலென்றும்
மேயார்விடையுகந் தேறியவித்தகர் பேர்ந்தவர்க்குச்
சேயாரடியார்க் கணியவரூர்திரு நின்றியூரே. ய

சேரும்புகழ்த்தொண்டர் செய்கையறாத்திரு நின்றியூரிற்
சீருஞ்சிவகதி யாயிருந்தானைத் திருநாவலார்
ஊரனுரைத்த வுறுதமிழ்பத்தும்வல் லார்வினைபோய்ப்
பாரும்விசும்புந்தொ ழப்பரமன்னடி கூடுவரே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - மகாலட்சுமிநாதர், இறைவி - உலகநாயகி.

## திருக்கோளிலி பதிகம் ௨ம

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நீளநினைந்தடி யேனுமைநித்தலுங் கைதொழுவேன்
வாளனகண்மட வாளவள்வாடி வருந்தாமே
கோளிலியெம்பெரு மான்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலையெம்பெரு மானவையட்டித் தரப்பணியே. க

வண்டமருங்குழ லாளுமைநங்கையோர் பங்குடையாய்
விண்டவர்தம்புர மூன்றெரிசெய்தவெம் வேதியனே
தெண்டிரைநீர்வயல் சூழ்திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டமதாயவ னேயவையட்டித் தரப்பணியே. ௨

பாதியோர்பெண்ணை வைத் தாய்படருஞ்சடைக் கங்கைவைத்தாய்
மாதர்நல்லார்வருத் தமதுநீயும றிதியன்றே
கோதில்பொழில்புடை சூழ்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆதியேயற்புத னேயவையட்டித் தரப்பணியே. ௩

சொல்லுவதென்னுனை நான்றொண்டைவாயுமை நங்கையைநீ
புல்கியிடத்தில்வைத் தாய்க்கொருபூசல்செய் தாருளரோ
கொல்லைவளம்புற விற்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அல்லல்களைந்தடி யேற்கவையட்டித் தரப்பணியே. ௪

முல்லைமுறுவ லுமையொருபங்குடை முக்கணனே
பல்லயர்வெண்டலை யிற்பலிகொண்டுழல் பாசுபதா
கொல்லைவளம்புற விற்றிருக்கோளிலி யெம்பெருமான்
அல்லல்களைந்தடி யேற்கவையட்டித் தரப்பணியே. ௫

குரவமருங்குழ லாளுமைநங்கையொர் பங்குடையாய்
பரவைபசிவருத் தமதுநீயும றிதியன்றே
குரவமரும்பொழில் சூழ்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அரவமசைத்தவ னேயவையட்டித் தரப்பணியே. ௬

எம்பெருமானுனை யேநினைந்தேத்துவ னெப்பொழுதும்
வம்பமருங்குழ லாளொருபாக மமர்ந்தவனே
செம்பொனின்மாளிகை சூழ்திருக்கோளிலி யெம்பெருமான்
அன்பதுவாயடி யேற்கவையட்டித் தரப்பணியே. எ

அரக்கன்முடிகரங் களடர்த்திட்டவெம் மாதிப்பிரான்
பரக்குமரவல்கு லாள்பரவையவள் வாடுகின்றாள்
குரக்கினங்கள்குதி கொள்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
இரக்கமதாயடி யேற்கவையட்டித் தரப்பணியே. அ

பண்டையமால்பிர மன்பறந்தும்மிடந் தும்மயர்ந்தும்
கண்டிலராயவர் கள்கழல்காண்பரி தாயபிரான்
தெண்டிரைநீர்வயல் சூழ்திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டமதாயவனே யவையட்டித் தரப்பணியே. கூ

கொல்லைவளம்புற விற்றிருக்கோளிலி மேயவனை
நல்லவர்தாம்பர வுந்திருநாவல வூரனவன்
நெல்லிடவாட்கள்வேண்டி நினைந்தேத்திய பத்தும்வல்லார்
அல்லல்களைந்துலகி னண்டர்வானுல காள்பவரே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கோளிலிநாதர்; இறைவி - வண்டமர்பூங்குழலி.

---

**பதிக வரலாறு:**

வேளாண்டலைவராகிய குண்டையூர்க் கிழவர் சுந்தரமூர்த்திநாயனாரிடத்துப் பேரன்புடையராய்ச் செந்நெல்லும், பொன்னன்ன செழும் பருப்புந் தீங்கரும்பினின் னல்ல வமுது முதலான எண்ணில்லாத பல பொருள்களையும் பல நாளாக அனுப்பி வருபவர் மழை வளஞ் சுருங்கிப் படித்தரம் எடுக்கப் போதாமல் வருந்தி ஒருநாள் இன்று குறைவாகின்றதே யென்று துயிலும்போது சிவபெருமான் கனவினிடத்து நெற்றந்தோமென்றுஅருளி நிதிக்கோனை யேவ, அவன் அந்நாடு முழுவதும் நென்மலைகளை நிறைத்து வைத்தான். குண்டையூர்க் கிழவர் அதனைக் கண்டு வியந்து திருவருளைப் பாராட்டி இதனை யெடுத்தல் நம்மாலாகாது, நம்பியாரூரரிடத்துத் தெரிவிப்பேன் என்று சென்று தெரிவிக்க, நாவலர்,

பெருமான் அவரோடு சென்று விண்ணினை யளக்கு நெல்லின் வெற்பினை நோக்கி இறைவனைத் துதித்து வணங்கி யதிசயித்து இதனையெடுக்க ஆளுஞ் சிவபெருமானை தரிலன்றி யாகாது என்று அருகிலுள்ள திருக் கோளிலியிற் சென்று திருக்கோயிலை யடைந்து இறைவனை 'நீள நினைந் தடியேன்' னென்றெடுத்து 'வாளன கண்மடவாளவள்வாடி வருந்தாமே' யெனும் பதிகம்பாடி யருளலும்,எம்பெருமான் ஆகாயத்தில் அசரீரியாகப் பகற்பொழுது கழிந்ததற்பின் நமது பூதங்கள் இவற்றைப் பரவைமனையள வன்றித் திருவாரூர் அடையவும் புகப்பெய்து தரும் என்று அருளினர். நாவலூர் நாவலனார் திருவருளைப் பணிந்து போற்றித் திருவாரூருக்கு எழுந்தருளிப் பரவையாரிடத்து யாவுங்கூறி யினிதிருந்தார். அன்றிரவு சிவபூதங்கள் திருவாரூரடங்கவும் எங்கும் ஆளியங்க விடமின்றி நிறைத்து வைத்தன. பரவையார் கண்டு அதிசயித்து அவரவர் எல்லையி லுள்ள நென்மலைகளை அவரவர் அடையுமாறு பறையறைவித்து அடை யச்செய்து மனமகிழ்ந்திருந்தார்.



## திருக்கச்சிமேற்றளி பதிகம் உக

### பண் - நட்டராகம்

*திருச்சிற்றம்பலம்*

நொந்தாவொண்சுடரே நுனையேநி னைந்திருந்தேன்
வந்தாய்போயறியாய் மனமேபு குந்துநின்ற
சிந்தாயெந்தைபிரான் றிருமேற்ற ளியுறையும்
எந்தாயுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. க

ஆட்டான்பட்டமையா லடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன்கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன்
சேட்டார்மாளிகைசூழ் திருமேற்ற ளியுறையும்
மாட்டேயுன்னையல்லான் மகிழ்ந்தேத்த மாட்டேனே. உ

மோறுந்தோரொருகா லினையாதி ருந்தாலும்
வேறுவந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே
சேறார்தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
ஏறேயுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. ங

உற்றார்சுற்றமெனு மதுவிட்டு நுன்னடைந்தேன்
எற்றாலென்குறைவென் னிடரைத்து றந்தொழிந்தேன்
செற்றாய்மும்மதிலுந் திருமேற்ற ளியுறையும்
பற்றேநுன்னையல்லால் பணிந்தேத்த மாட்டேனே. ௪

எம்மானெம்மனையென் றவரிட்டி றந்தொழிந்தார்
மெய்ம்மாலாயினதீர்த் தருள்செய்யு மெய்ப்பொருளே
கைம்மாவீருரியாய் கனமேற்ற ளியுறையும்
பெம்மானுன்னையல்லால் பெரிதேத்த மாட்டேனே. ௫

நானேனுன்னடியே நினைந்தேனி னைதனுமே
ஊனேரிவ்வுடலம் புகுந்தாயெ னொண்சுடரே
தேனேயின்னமுதே திருமேற்ற ளியுறையும்
கோனேயுன்னையல்லாற் குளிர்ந்தேத்த மாட்டேனே. ௬

கையார்வெஞ்சிலைநா ணதன்மேற்ச ரங்கோத்தே
எய்தாய்மும்மதிலும் மெரியுண்ண வெம்பெருமான்
செய்யார்பைங்கமலத் திருமேற்ற ளியுறையும்
ஐயாவுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௭

விரையார்கொன்றையினாய் விமலாவினி யுன்னையல்லால்
உரையேனாவதனா லுடலில்லுயி ருள்ளளவும்
திரையார்தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
அரையாவுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௮

நிலையாய்நின்னடியே நினைந்தே னினைதனுமே
தலைவாநின்னினையப் பணித்தாய் சலமொழிந்தேன்
சிலையார்மாமதில்சூழ் திருமேற்ற ளியுறையும்
மலையேயுன்னையல்லான் மகிழ்ந்தேத்த மாட்டேனே. ௯

பாரூர்பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூரும்புறவிற் றிருமேற் றளிச்சிவனை
ஆரூரன்னடியா னடித்தொண்ட னாரூரன்சொன்ன
சீரூர்பாடல்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - திருமேற்றளிநாயகர்.

## திருப்பழமண்ணிப்படிக்கரை   பதிகம் உஉ

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

முன்னவனெங்கள்பிரான் முதல்காண்பரி தாயபிரான்
சென்னியிலெங்கள்பிரான் றிருநீலமிடற் றெம்பிரான்
மன்னியவெங்கள்பிரான் மறைநான்குங்கல் லானிழற்கீழ்ப்
பன்னியவெங்கள்பிரான் பழமண்ணிப் படிக்கரையே. க

அண்டகபாலஞ்சென்னி யடிமேலல ரிட்டுநல்ல
தொண்டங்கடிபரவித் தொழுதேத்திநின் றாடுமிடம்
வெண்டிங்கள்வெண்மழுவன் விரையார்கதிர் மூவிலைய
பண்டங்கன்மேயவிடம் பழமண்ணிப் படிக்கரையே. உ

ஆடுமினன்புடையீ ரடிக்காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின்றொண்டருள்ளீ ருமரோடெமர் சூழவந்து
வாடுமிவ்வாழ்க்கைதன்னை வருந்தாமற் றிருந்தச்சென்று
பாடுமின்பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே. ௩

அடுதலையேபுரிந்தா னவையந்தர மூவெயிலும்
கெடுதலையேபுரிந்தான் கிளருஞ்சிலை நாணியிற்கோல்
நடுதலையேபுரிந்தா னரிகான்றிட்ட வெச்சில்வெள்ளைப்
படுதலையேபுரிந்தான் பழமண்ணிப் படிக்கரையே. ௪

உங்கைகளாற் கூப்பியுகந் தேத்தித்தொழு மின்றொண்டீர்
மங்கையொர்கூறுடையான் வானோர்முத லாயபிரான்
அங்கையில்வெண்மழுவன் னலையார்கதிர் மூவிலைய
பங்கயபாதனிடம் பழமண்ணிப் படிக்கரையே. ௫

செடிபடத்தீவிளைத்தான் சிலையார்மதிற் செம்புனஞ்சேர்
கொடிபடுமூரிவெள்ளை யெருதேற்றையு மேறக்கொண்டான்
கடியவன்காலன்றன்னைக் கறுத்தான்கழற் செம்பவளப்
படியவன்பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. ௬

கடுத்தவன்றேர்கொண்டோடிக் கயிலாயநன் மாமலையை
எடுத்தவனீரைந்துவா யரக்கன்முடி பத்தலற
விடுத்தவன்கைநரம்பால் வேதகீதங்கள் பாடலுறப்
படுத்தவன்பால்வெண்ணீற்றன் பழமண்ணிப் படிக்கரையே. எ

திரிவனமும்மதிலும் மெரித்தானிமை யோர்பெருமான்
அரியவ னட்டபுட்ப மவைகொண்டடி போற்றிநல்ல
கரியவனான்முகனும் மடியும்முடி காண்பரிய
பரியவன்பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. அ

வெற்றரைக்கற்றமணும் விரையாதுவிண் டாலமுண்ணும்
துற்றரைத்துற்றறுப்பான் றுன்னவாடைத் தொழிலுடையீர்
பெற்றரைப்பித்தரென்று கருதேன்மின் படிக்கரையுள்
பற்றரைப்பற்றிநின்று பழிபாவங்க டீர்மின்களே. சு

பல்லுயிர்வாழுந்தெண்ணீர்ப் பழமண்ணிப் படிக்கரையை
அல்லியந்தாமரைத்தா ராரூர னுரைத்ததமிழ்
சொல்லுதல்கேட்டல்வல்லா ரவர்க்குந் தமர்க்குங்கிளைக்கும்
எல்லியுநன்பகலு மிடர்கூருத லில்லையன்றே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - நீலகண்டர் ; இறைவி - அமிர்தகரவல்லி.



## திருக்கழிப்பாலை பதிகம் உரு

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செடியேன்றீவினையிற் றடுமாறக் கண்டாலும்
அடியானாவனெ தொழித றகவாமே
முடிமேன்மாமதியும் மரவும் முடன்றுயிலும்
வடிவேதாமுடையார் மகிழுங் கழிப்பாலையதே. க

எங்கேனு மிருந்துன் னடியே னுனைநினைந்தால்
அங்கேவந் தென்னொடு முடனாகி நின்றருளி
இங்கேயென் வினையை யறுத்திட் டெனையாளுங்
கங்காநாயகனே கழிப்பாலை மேயானே. உ

ஒறுத்தாய்நின்னருளில் லடியேன் பிழைத்தனகள்
பொறுத்தாயெத்தனையுந் நாயேனைப் பொருட்படுத்துச்
செறுத்தாய்வேலைவிட மறியாம லுண்டுகண்டங்
கறுத்தாய்தண்கழனிக் கழிப்பாலை மேயானே. ௩

சுரும்பார்விண்டமல ரவைதூவித் தூங்குகண்ணீர்
அரும்பாநிற்குமனத் தடியாரொடு மன்புசெய்வன்
விரும்பேனுன்னையல்லா லொருதெய்வ மென்மனத்தாற்
கரும்பாருங்கழனிக் கழிப்பாலை மேயானே. ௪

ஒழிப்பாயென்வினையை யுகப்பாய் முனிந்தருளித்
தெழிப்பாய்மோதுவிப்பாய் விலையா வணமுடையாய்
கழிப்பால்கண்டடங்கச் சுழியேந்து மாமறுகிற்
கழிப்பாலைமருவுங் கனலேந்து கையானே. ரு

ஆர்த்தாயாடரவை யரையார் புலியதண்மேற்
போர்த்தாயானையின்றோ லுரிவைபு லாறுறக்
காத்தாய்தொண்டுசெய்வார் வினைக ளவைபோகப்
பார்த்தானுக்கிடமாம் பழியில்கழிப் பாலையதே. சா

பருத்தாள்வன்பகட்டைப் படமாகமுன் பற்றியதள்
உரித்தாயானையின்றோ லுலகந்தொழு முத்தமனே
எரித்தாய்முப்புரமு மிமையோர்க ளிடர்கடியுங்
கருத்தாதண்கழனிக் கழிப்பாலை மேயானே. ௭

படைத்தாய்ஞாலமெலாம் படர்புன்சடை யெம்பரமா
உடைத்தாய்வேள்விதனை யுமையாளையோர் கூறுடையாய்
அடர்த்தாய்வல்லரக்கன் றலைபத்தொடு தோணெரியக்
கடற்சாருங்கழனிக் கழிப்பாலை மேயானே. அ

பொய்யாநாவதனாற் புகழ்வார்கண் மனத்தினுள்ளே
மெய்யேநின்றெரியும் விளக்கேயொத்த தேவர்பிரான்
செய்யானுங்கரிய நிறத்தானுந் தெரிவரியான்
மையார்கண்ணியொடு மகிழ்வான்கழிப் பாலையதே. கூ

பழிசேரில்புகழான் பரமன் பரமேட்டி
கழியார்செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவானாவலர்கோ னாரூர னுரைத்ததமிழ்
வழுவாமாலைவல்லார் வானோருல காள்பவரே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - பால்வண்ணநாதர்; இறைவி - வேதநாயகி.



## திருமழபாடி பதிகம் உச

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார்மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னேமாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னேயுன்னையல்லா லினியாரை நினைக்கேனே. க

கீளார்கோவணமுந் திருநீறுமெய் பூசியுன்றன்
தாளேவந்தடைந்தேன் றலைவாவெனை யேன்றுகொணீ
வாளார்கண்ணிபங்கா மழபாடியுண் மாணிக்கமே
ஆளாய்நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. உ

எம்மானெம்மனையென் றனக்கெட்டனைச் சார்வாகார்
இம்மாயப்பிறவி பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம்பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
அம்மானின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௩

பண்டேநின்னடியே னடியாரடி யார்கட்கெல்லாம்
தொண்டேபூண்டொழிந்தேன் றொடராமைத் துரிசறுத்தேன்
வண்டார்பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
அண்டாநின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௪

கண்ணாயேழுலகுங் கருத்தாய வருத்தமுமாய்ப்
பண்ணாரின்றமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே
மண்ணார்பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
அண்ணாநின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௫

நாளார்வந்தணுகி நலியாமுன நின்றனக்கே
ஆளாவந்தடைந்தே னடியேனையு மேன்றுகொணீ
மாளாநாளருளு மழபாடியுண் மாணிக்கமே
ஆளாநின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௬

சந்தாருங்குழையாய் சடைமேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார்வெண்பொடியாய் விடையேறிய வித்தகனே
மைந்தார்சோலைகள்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
எந்தாய்நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௭

வெய்யவிரிசுடரோன் மிகுதேவர்க ணங்களெல்லாம்
செய்யமலர்களிட மிகுசெம்மையு ணின்றவனே
மையார்பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
ஐயாநின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௮

நெறியேநின்மலனே நெடுமாலயன் போற்றிசெய்யும்
குறியேநீர்மையனே கொடியேரிடை யாடலைவா
மறிசேரங்கையனே மழபாடியுண் மாணிக்கமே
அறிவேநின்னையல்லா லினியாரை நினைக்கேனே. ௯

ஏரார்முப்புரமு மெரியச்சிலை தொட்டவனை
வாரார்கொங்கையுடன் மழபாடியுண் மேயவனைச்
சீரார்நாவலர்கோ னூரூர னுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வச்சிரத்தம்பநாதர்; இறைவி - அழகம்மை.

---

**பதிக வரலாறு :**

நாவலர் காவலராகிய நம்பியாரூரர் 'சேவில் வருவார் திருவாலம் பொழிலிற் சேர்ந்து தாழ்ந்திரவுபாலி சயனத் தமர்ந்தருளிப் பற்றிக் கொள்' ளும்போது இறைவர் அவர் கனவில் எழுந்தருளி 'மழபாடியில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ' என்று தமது திருக்கோலத்தைக் காட்டி யருள்செய்ய, அவர் காவிரியின் வடகரையைச் சேர்ந்து திருமழ பாடியை யணைந்து அன்பர்களோடு இறைவனை வீழ்ந்தெழுந்து வணங்கி யுருகிப் 'பொன்னார் மேனியனே' யென்னு மித்திருப்பதிகத்தை யெடுத் துத் திருப்பாட் டிறுதிதோறும் 'உன்னையல்லா லினியாரை நினைக் கேனே' என்று வைத்துப்பாடி யங்குச் சிலநாட் டங்கிப் பிறபதிகளுந் தொழச் சென்றார்.



## திருமுதுகுன்றம் பதிகம் உரு

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்செய்தமேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள் பரவையிவடன் முகப்பே
என்செய்தவா றடிகே ளடியேனிட் டளங்கெடவே. க

உம்பரும்வானவரும் முடனேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத்தந் தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்
வம்பமருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்
எம்பெருமானருளீ ரடியேனிட் டளங்கெடவே. உ

பத்தாபத்தர்களுக் கருள்செய்யும் பரம்பரனே
முத்தாமுக்கணனே முதுகுன்ற மமர்ந்தவனே
மைத்தாருந்தடங்கண் பரவையிவள் வாடாமே
அத்தா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. ங

மங்கையொர்கூறமர்ந்தீர் மறைநான்கும் விரித்துகந்தீர்
திங்கள்சடைக்கணிந்தீர் திகழும்முது குன்றமர்ந்தீர்
கொங்கைநல்லாள்பரவை குணங்கொண்டிருந் தாண்முகப்பே
அங்கணனேயருளா யடியேனிட் டளங்கெடவே. ச

மையாரும்மிடற்றாய் மருவார்புர மூன்றெரித்த
செய்யார்மேனியனே திகழும்முது குன்றமர்ந்தாய்
பையாரும்மரவே ரல்குலாளிவள் வாடுகின்றாள்
ஐயா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. ரு

நெடியானான்முகனு மிரவியொடு மிந்திரனும்
முடியால்வந்திறைஞ்ச முதுகுன்ற மமர்ந்தவனே
படியாரும்மியலாள் பரவையிவ டன்முகப்பே
யடிகேடந்தருளீ ரடியேனிட் டளங்கெடவே. சு

கொந்தணவும்பொழில்சூழ் குளிர்மாமதின் மாளிகைமேல்
வந்தணவும்மதிசேர் சடைமாமுது குன்றுடையாய்
பந்தணவும்விரலாள் பரவையிவ டன்முகப்பே
அந்தணனேயருளா யடியேனிட் டளங்கெடவே. எ

பரசாருங்கரவா பதினெண் கணமுஞ்சூழ
முரசார்வந்ததிர முதுகுன்ற மமர்ந்தவனே
விரைசேருங்குழலாள் பரவையிவ டன்முகப்பே
அரசே தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. அ

ஏத்தாதிருந்தறியே னிமையோர்தனி நாயகனே
மூத்தாயுலகுக்கெல்லா முதுகுன்ற மமர்ந்தவனே
பூத்தாருங்குழலாள் பரவையிவ டன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேனிட் டளங்கெடவே. சு

பிறையாருஞ்சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால்வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார்தங்குரிசில் வயல்நாவலா ரூரன்சொன்ன
இறையார்பாடல்வல்லார்க் கெளிதாஞ்சிவ லோகமதே. ய

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவர் - பழமலைநாதர் ; இறைவி - பெரியநாயகி.



## திருக்காளத்தி பதிகம் உசு

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செண்டாடும்விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டாருங்குழலா ளுமைபாக மகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங் கணநாதனெங் காளத்தியாய்
அண்டாவுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. க

இமையோர்நாயகனே யிறைவாவென் னிடர்த்துணையே
கமையார்கருணையினாய் கருமாமுகில் போன்மிடற்றாய்
உமையோர்கூறுடையா யுருவேதிருக் காளத்தியுள்
அமைவேயுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. உ

படையார்வெண்மழுவா பகலோன்பல் லுகுத்தவனே
விடையார்வேதியனே விளங்குங்குழைக் காதுடையாய்
கடையார் மாளிகைசூழ் கணநாதனெங் காளத்தியாய்
உடையாயுன்னையல்லா லுகந்தேத்த மாட்டேனே. ங

மறிசேர்கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியேயென்னுடைய குருவேயுன்குற் றேவல்செய்வேன்
நெறியேநின்றடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவேயுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ச



ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தி லெடுத்தது.

ப. கூ௨.

திருமுதுகுன்றர் தந்தபொன்னை மணிமுத்தாற்றிலிட்டு வந்த ஆரூரர் பரவையாரோடு திருவாரூர் திருக்குளத்திற் சென்று அப்பொன்னைத் தடவும்போது, பரவையார் ''ஆற்றிலே யிட்டுக் குளத்திலே தேடுகின்றீரோ' வென்று நகைத்தலும், நாயனார் 'பொன்செய்த மேனியினீ' ரென்னுமித் திருப்பதிகம் பாடிப் பொன்னெடுத்தார்.

செஞ்சே லன்னகண்ணார் திறத்தேகிடந் துற்றலறி
நஞ்சே னடியே னலமொன்றறி யாமையினல்
துஞ்சே னொருகாற் றொழுதேன்றிருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௬

பொய்யவ னையடியேன் புகவேநெறி யொன்றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிடரானவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்குந்திருக் காளத்தியென்
ஐயநுன் றன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. ௬

கடியேன் காதன்மையாற் கழற்போதறி யாதவென்னுள்
குடியாக் கோயில்கொண்ட குளிர்வார்சடை யெங்குழகா
முடியால் வானவர்கள் முயங்குந்திருக் காளத்தியாய்
அடியே னுன்னையல்லா லறியேன்மற் றொருவரையே. எ

நீறூர் மேனியனே நிமலாநினை யன்றிமற்றுக்
கூறே னாவதனாற் கொழுந்தேயென் குணக்கடலே
பாரூர் வெண்டலையிற் பலிகொண்டுழல் காளத்தியாய்
ஏறே யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. அ

தளிர்போல் மெல்லடியாள் தனையாகத் தமர்ந்தருளி
எளிவாய் வந்தெனுள்ளம் புகுதவல்ல வெம்பெருமான்
களியார் வண்டறையுந் திருக்காளத்தி யுள்ளிருந்த
ஒளியே யுன்னையல்லா லினியொன்று முணரேனே. கூ

காரூ ரும்பொழில்சூழ் கணநாதனெங் காளத்தியுள்
ஆரா வின்னமுதை யணிநாவலா ரூரன்சொன்ன
சீரூர் செந்தமிழ்கள் செப்புவார்வினை யாயினபோய்ப்
பேரா விண்ணுலகம் பெறுவார்பிழைப் பொன்றிலரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - காளத்திநாதர்; இறைவி - ஞானப்பூங்கோதை.



## திருக்கற்குடி பதிகம் ௨௭

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விடையா ருங்கொடியாய் வெறியார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பரமாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அடிகே ளெம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. ௧

மறையோர் வானவருந் தொழுதேத்தி வணங்கநின்ற
இறைவா வெம்பெருமா னெனக்கின்னமு தாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அறவா வங்கணனே யடியேனையு மஞ்சலென்னே. ௨

சிலையான் முப்புரங்கள் பொடியாகச் சிதைத்தவனே
மலைமேன் மாமருந்தே மடமாதிடங் கொண்டவனே
கலைசேர் கையினனே திருக்கற்குடி மன்னிநின்ற
அலைசேர் செஞ்சடையா யடியேனையு மஞ்சலென்னே. ௩

செய்யார் மேனியனே திருநீல மிடற்றினனே
மையார் கண்ணிபங்கா மதயானை யுரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக்கற்குடி மன்னிநின்ற
ஐயா வெம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. ௪

சந்தார் வெண்குழையாய் சரிகோவண வாடையனே
பந்தா ரும்விரலா ளொருபாக மமர்ந்தவனே
கந்தார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
எந்தா யெம்பெருமா னடியேனையு மேன்றுகொள்ளே. ௫

அரையார் கீளொடுகோ வணமும்மரவும் மசைத்து
விரையார் கொன்றையுடன் விளங்கும்பிறை மேலுடையாய்
கரையா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அரையா வெம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. ௬

பாரார் விண்ணவரும் பரவிப்பணிந் தேத்தநின்ற
சீரார் மேனியனே திகழ்நீல மிடற்றினனே
காரார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
ஆரா வின்னமுதே யடியேனையு மஞ்சலென்னே. எ

நிலனே நீர்வளிதீ நெடுவானக மாகிநின்ற
புலனே புண்டரிகத் தயன்மாலவன் போற்றிசெய்யும்
கனலே கற்பகமே திருக்கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே யடியேனையு மஞ்சலென்னே. அ

வருங்கா லன்னுயிரை மடியத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்றனக்காய்ப் பிரிவித்த பெருந்தகையே
கரும்பா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
விரும்பா வெம்பெருமா னடியேனையும் வேண்டுதியே. கூ

அலையார் தண்புனல்சூழ்ந் தழகாகி விழவமரும்
கலையார் மாதவர்சேர் திருக்கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாணுதலாள் நல்லசிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியன்மூவுல காள்பவரே. ω

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - உச்சிநாதர்; இறைவி - அஞ்சனாட்சி.



## திருக்கடவூர்வீரட்டம்                                    பதிகம் உஅ

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர்கங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே யெனக்கார்துணை நீயலதே.

பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறையின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. உ

அன்றா லின்னிழற்கீ ழறநால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை யோனுக்குமான்
கன்றா ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்றா தைபெருமா னெனக்கார்துணை நீயலதே. ங

போரா ருங்கரியின் னுரிபோர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையா ளொருபாக மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டானத்
தாரா வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. ச

மையார் கண்டத்தினாய் மதமாவுரி போர்த்தவனே
பொய்யா தென்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்
கையா ராடரவா கடவூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. ரு

மண்ணீர் தீவெளிகால் வருபூதங்க ளாகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணா ரும்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா வென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. சா

எரியார் புன்சடைமே லிளநாக மணிந்தவனே
நரியா ருஞ்சுடலை நகுவெண்டலை கொண்டவனே
கரியா ரீருரியாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அரியா யென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. எ

வேறா வுன்னடியேன் விளங்குங்குழைக் காதுடையாய்
தேறே னுன்னையல்லாற் சிவனேயென் செழுஞ்சுடரே
காறூர் வெண்மருப்பா கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஆறூர் செஞ்சடையா யெனக்கார்துணை நீயலதே. அ

அயனோ டன்றரியும் மடியும்முடி காண்பரிய
பயனே யெம்பரனே பரமாய பரஞ்சுடரே
கயமா ருஞ்சடையாய் கடவூர்த்திரு வீரட்டத்துள்
அயனே யென்னமுதே யெனக்கார்துணை நீயலதே. கூ

காரா ரும்பொழில்சூழ் கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணையாவெழி லவலர்கோன்
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அமிர்தகடேசுவரர்; இறைவி - அபிராமியம்மை.



## திருக்குருகாவூர்வெள்ளடை பதிகம் உகூ

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

இத்தனையா மாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. க

ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக் குளத்திடை மடைதோறுங்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. உ

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக வுண்பலிக் குழல்வானே
காடுநின் னிடமாகக் கடுவிரு ளிடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௩

வெப்பொடு பிணியெல்லாந் தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
ஒப்புடை யொளிநீல மோங்கிய மலர்ப்பொய்கை
அப்படி யழகாய வணிநடை மடவன்னம்
மெய்ப்படு குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௪

வரும்பழி வாராமே தவிர்த்தென்னை யாட்கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச் சுண்ணவெண் ணீற்றானே
அரும்புடை மலர்ப்பொய்கை யல்லியு மல்லிகையும்
விரும்பிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௫

பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுவிருட் சுடரொப்பாய்
மண்ணிடை யடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௬

போந்தனை தரியாமே நமன்றமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலு நுன்னல தறியேனான்
சாந்தனை வருமேலுந் தவிர்த்தென்னை யாட்கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௭

மலக்கினின் னடியார்கள் மனத்திடை மாறீர்ப்பாய்
சலச்சல மிடுக்குடைய தருமனார் தமரென்னைக்
கலக்குவான் வந்தாலுங் கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௮

படுவிப்பா யுனக்கேயாட் பலரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடுபொன் றோலுடுத் துழல்வானே
கெடுவிப்பா யல்லாதார் கேடிலாப் பொன்னடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. ௯

வளங்கனி பொழின்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை யாரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வெள்ளடையப்பர்; இறைவி - காவியங்கண்ணியம்மை.

---

*பதிக வரலாறு :*

நம்பியாரூரர் திருக்குருகாவூருக்கு அருகாக வெயில் நேரத்திற் போகும்போது அவர் பசியுந் தாகமுங் கொண்டிருந்தமையால், அஃ தறிந்து இறைவன் வழியிற் றண்ணீர்ப் பந்தரமைத்துக்கொண்டு அந் தணர் வடிவினராய்ச் சுந்தரர் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தனர். சுந்தரரும் அங்கு வந்து அப்பந்தரின் கீழமர்ந்து ஐந்தெழுத் தோதிக் கொண்டிருந்தார். அந்தணர் அவரை நோக்கி, 'நீர் மிகப் பசித்திருத்த லால் இப்பொதி சோற்றையுண்டு தண்ணீரையும் பருகுமெனத் தாம் வைத்திருந்தவற்றைக் கொடுக்க, நம்பிகளும் அவற்றை உண்டுங் குடித் தும் இளைப்பினுற் சிறிது உறங்கினர். அந்நேரத்தில் இறைவன் பந்த ருடன் மறைய,விழித்தெழுந்த நம்பியாரூரர் இறைவன் றிருவிளையாடலை யுணர்ந்து நெஞ்சுருகி 'இத்தனையாமாற்றை யறிந்திலேன்' என்னுமித் திருப்பதிகத்தைப் பாடியருளினர்.



## திருக்கருப்பறியலூர்  பதிகம் ௯௧

பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில்
வைத்துகந்து திறம்பாவண்ணம்
கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக்
கண்டானைக் கருப்பறியலூர்க்

கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட
மயிலாடுங் கொகுடிக்கோயில்
எம்மானை மனத்தினா னினைந்தபோ
தவர்நமக் கினியவாறே. க

நீற்றுரு மேனியராய் நினைவார்த
முள்ளத்தே நிறைந்து தோன்றும்
காற்றானைத் தீயானைக் கதிரானை
மதியானைக் கருப்பறியலூர்க்
கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக்கோயில்
ஏற்றானை மனத்தினா னினைந்தபோ
தவர்நமக் கினியவாறே. உ

முட்டாமே நாடோறு நீர்மூழ்கிப்
பூப்பறித்து மூன்றுபோதும்
கட்டார்ந்த விண்டைகொண் டடிச்சேர்த்து
மந்தணர்தங் கருப்பறியலூர்க்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்
குழகனைக் கொகுடிக்கோயில்
எட்டான மூர்த்தியை நினைந்தபோ
தவர்நமக் கினியவாறே. ௩

விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி
வினைபோக வேலிதோறும்
கருந்தாள வாழைமேற் செங்கனிக
டேன்சொரியுங் கருப்பறியலூர்க்
குருந்தாய முள்ளெயிற்றுக் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக்கோயில்
இருந்தானை மனத்தினா னினைந்தபோ
தவர்நமக் கினியவாறே.

பொடியேறு திருமேனிப் பெருமானைப்
பொங்கரவக் கச்சையானைக்
கடிநாறும் பூம்பொய்கைக் கயல்வாளை
குதிகொள்ளுங் கருப்பறியலூர்க்

கொடியேறி வண்டினமுந் தண்டேனும்
　　பண்செய்யுங் கொகுடிக்கோயில்
அடியேறு கழலானை நினைந்தபோ
　　தவர்நமக் கினியவாறே. ௫

பொய்யாத வாய்மையாற் பொடிபூசிப்
　　போற்றிசைத்துப் பூசைசெய்து
கையினா லெரியோம்பி மறைவளர்க்கு
　　மந்தணர்தங் கருப்பறியலூர்க்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ
　　மயிலாலுங் கொகுடிக்கோயில்
ஐயனையென் மனத்தினா னினைந்தபோ
　　தவர்நமக் கினியவாறே. ௬

செடிகொணோ யுள்ளளவுந் தீவினையுந்
　　தீர்ந்தொழியச் சிந்தைசெய்ம்மின்
கடிகொள்பூந் தடமண்டிக் கருமேதி
　　கண்படுக்குங் கருப்பறியலூர்க்
கொடிகொள்பூ நுண்ணிடையாள் கோல்வளையா
　　ளவளோடுங் கொகுடிக்கோயில்
அடிகளையென் மனத்தினா னினைந்தபோ
　　தவர்நமக் கினியவாறே. ௭

பறையாத வல்வினைகள் பறந்தொழியப்
　　பன்னாளும் பாடியாடிக்
கறையார்ந்த கண்டத்த னெண்டோளன்
　　முக்கண்ணன் கருப்பறியலூர்க்
குறையாத மறைநாவர் குற்றேவ
　　லொழியாத கொகுடிக்கோயில்
உறைவானை மனத்தினா னினைந்தபோ
　　தவர்நமக் கினியவாறே. ௮

சங்கேந்து கையானுந் தாமரையின்
　　மேலானுந் தன்மை காணாக்
கங்கார்ந்த வார்சடைக ளுடையானை
　　விடையானைக் கருப்பறியலூர்க்

கொங்கார்ந்த பொழிற்சோலை சூழ்கனிகள்
பலவுதிர்க்குங் கொகுடிக்கோயில்
எங்கோனை மனத்தினா லினைந்தபோ
தவர்நமக் கினியவாறே.

பண்டாழி னிசைமுரலப் பன்னாளும்
பாவித்துப் பாடிபாடிக்
கண்டார்தங் கண்குளிருங் களிக்கமுகம்
பூஞ்சோலைக் கருப்பறியலூர்க்
குண்டாடுஞ் சமணருஞ் சாக்கியரும்
புறங்கூறுங் கொகுடிக்கோயில்
எண்டோளெம் பெருமானை நினைந்தபோ
தவர்நமக் கினியவாறே.

கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம்
மிடர்தீர்க்குங் கருப்பறியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும்
பூஞ்சோலைக் கொகுடிக்கோயில்
இலைமலிந்த மழுவானை மனத்தினா
லன்புசெய் தின்பமெய்தி
மலைமலிந்த தோளூரன் வனப்பகையப்
பன்னுரைத்த வண்டமிழ்களே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-குற்றம்பொறுத்த ஈசுவரர்; இறைவி-கோல்வளைநாயகி.



## திருஇடையாறு பதிகம் ௩௧

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

முந்தையூர் முதுகுன்றங் குரங்கணின் முட்டம்
சிந்தையூர் நன்றுசென் றடைவான் றிருவாரூர்
பந்தையூர் பழையாறு பழனம் பைஞ்ஞீலி
எந்தையூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௧

சுற்றலூர் சுழியல் திருச்சோ புரந்தொண்டர்
ஒற்றியூ ரொற்றியூர் திருவூற லொழியாப்
பெற்றமேறி பெண்பாதி யிடம்பெண்ணைத் தெண்ணீர்
எற்றியூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௨

கடங்களூர் திருக்காரிக் கரைகயி லாயம்
விடங்களூர் திருவெண்ணி யண்ணாமலை வெய்ய
படங்களூர் கின்றபாம் பரையான் பரஞ்சோதி
இடங்கொளூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௩

கச்சையூர் காவங் கழுக்குன்றங் காரோணம்
பிச்சையூர் திரிவான் கடவூர் வடபேறூர்
கச்சியூர் கச்சிக்கல் நெய்த்தான மிழலை
இச்சையூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௪

நிறையனூர் நின்றியூர் கொடுங்குன்ற மமர்ந்த
பிறையனூர் பெருவூர் பெரும்பற்றப் புலியூர்
மறையனூர் மறைக்காடு வலஞ்சுழி வாய்த்த
இறையனூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௫

திங்களூர் திருவா திரையான் பட்டினமூர்
நங்களூர் நறையூர் நனிநா லிசைநாலூர்
தங்களூர் தமிழா னென்றுபா விக்கவல்ல
எங்களூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௬

கருக்கநஞ் சமுதுண்ட கல்லாலன் கொல்லேற்றன்
தருக்கருக் கனைச்செற் றுகந்தான்றன் முடிமேல்
எருக்கநாண் மலரின் டையுமத்த முஞ்சூடி
இருக்குமூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௭

தேசனூர் வினைதேய நின்றான் றிருவாக்கூர்
பாசனூர் பரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் நனிபள்ளி நள்ளாறை யமர்ந்த
ஈசனூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௮

பேறனூர் பிறைச்சென் னியினான் பெருவேளூர்
தேறனூர் திருமா மகள்கோன் றிருமாலோர்
கூறனூர் குரங்காடு துறைதிருக் கோவல்
ஏறனூ ரெய்தமா னிடையா றிடைமருதே. ௯

ஊறிவா யனநாடி யவன்றொண்ட னூரன்
தேறுவார் சிந்தை தேறுமிடஞ் செங்கண்வெள்ளே
றேறுவா ரெய்தமா னிடையா றிடைமருதைக்
கூறுவார் வினையெவ் விடமெய் குளிர்வாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - இடையாற்றுநாதர்; இறைவி - சிற்றிடைநாயகி.



## திருக்கோடிக்குழகர் பதிகம் ௩௨

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதா னயலே யிருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீர்
அடிகே ளுமக்கார் துணையாக விருந்தீரே. ௧

கோல்லி

முன்றான் கடனஞ்ச முண்ட வதனாலோ
பின்றான் பரவைக் குபகாரஞ் செய்தாயோ
குன்றாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
என்றான் றனியே யிருந்தா யெம்பிரானே. உ

மத்தம் மலிசூழ் மறைக்கா டதன்றென்பால்
பத்தர் பலர்பாட விருந்த பரமா
கொத்தார் பொழில்சூழ் தருகோடிக் குழகா
எத்தாற் றனியே யிருந்தா யெம்பிரானே. ௩

காடேன் மிகவா லிதுகா ரிகையஞ்சக்
கூடிப் பொந்தி லாந்தைகள் கூகைகுழற
வேடித் தொண்டர் சாலவுந் தீயர்சழக்கர்
கோடிக் குழகா விடங்கோயில் கொண்டாயே. ௪

மையார் தடங்கண்ணி பங்கா கங்கையாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிட மில்லை
கையார் வளைக்காடு காளோடு முடனாய்க்
கொய்யார் பொழிற்கோடி யேகோயில் கொண்டாயே. ௫

அரவே ரல்குலாளை யொர்பாக மமர்ந்து
மரவங் கமழ்மா மறைக்கா டதன்றென்பால்
குரவப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
இரவே துணையா யிருந்தா யெம்பிரானே. ௬

பறையுங் குழலும் மொலிபாட லியம்ப
அறையுங் கழலார்க்க நின்றாடு மமுதே
குறையாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
இறைவா தனியே யிருந்தா யெம்பிரானே. ௭

ஒற்றியூ றென்றவூ னத்தினா லதுதானோ
அற்றப் படவாரூ ரதென்ற கன்றாயோ
முற்றா மதிசூ டியகோடிக் குழகா
எற்றாற் றனியே யிருந்தா யெம்பிரானே. ௮

நெடியா னொடுநான் முகனும் மறிவொண்ணாப்
படியான் பலிகொள்ளு மிடங்குடி யில்லை
கொடியார் பலர்வேடர்கள் வாழுங் கரைமேல்
அடிகே ளன்பதா யிடங்கோயில் கொண்டாயே. ௯

பாரூர் மலிசூழ் மறைக்கா டதன்றென்பால்
ஏரார் பொழில்சூழ் தருகோடிக் குழகை
ஆரூர னுரைத்தன பத்திவை வல்லார்
சீரூர் சிவலோகத் திருப்பவர் தாமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - அமுதகடநாதர்; இறைவி - மையார்தடங்கணம்மை.



## நமக்கடிகளாகியவடிகள் — பதிகம் ௩௩

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

பாறுதாங்கிய காடரோபடு தலையரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட்டிள
ஏறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோவிலங் கும்பிறை
ஆறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய வடிகளே. ௧

இட்டிதாகவந் துரைமினோநமக் கிசையுமாறினந் தேத்துவீர்
கட்டிவாழ்வது நாகமோசடை மேலுநாறுக ரந்தையோ
பட்டியேறுகந் தேறரோபடு வெண்டலைப்பலி கொண்டுவந்
தட்டியாளவுங் கிற்பரோநமக் கடிகளாகிய வடிகளே. ௨

ஒன்றிநீர்கள்வந் துரைமினோநமக் கிசையுமாறினந் தேத்துவீர்
குன்றிபோல்வதொ ருருவரோகுறிப் பாகிநீறுகொண் டணிவரோ
இன்றியேயில ராவரோவன்றி யுடையராயில ராவரோ
அன்றியேமிக வறவரோநமக் கடிகளாகிய வடிகளே. ௩

தேனையாடுமுக் கண்ணரோமிகச் செய்யரோவெள்ளை நீற்றரோ
பானையாடலும் பயில்வரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
மானைமேவிய கண்ணினாள்மலை மங்கைநங்கையைப் பஞ்சவோர்
ஆனையீருரி போர்ப்பரோநமக் கடிகளாகிய வடிகளே. ௪

சோணன்மாமதி சூடரோகொடு கொட்டிகாலர் கழலரோ
வீணைதானவர் கருவியோவிடை யேறுவேதமு தல்வரோ
நாணதாகவொர் நாகங்கொண்டரைக் கார்ப்பரோநல மார்தர
ஆணையாகநம் மடிகளோநமக் கடிகளாகிய வடிகளே. ௫

வந்துசொல்லுமின் மூடனேனுக்கு வல்லவாகினைந் தேத்துவீர்
வந்தசாயினை யறிவரோதம்மை வாழ்த்தினார்கட்கு நல்லரோ
புந்தியாலுரை கொள்வரோவன்றிப் பொய்யின்மெய்யுரைத் தாள்வரோ
அன்றியேமிக வறவரோநமக் கடிகளாகிய வடிகளே. ௬

மெய்யென்சொல்லுமி னமரங்காளுமக் கிசையுமாகினைந் தேத்துவீர்
கையிற்சூலம தடையரோகரி காடரோகறைக் கண்டரோ
வெய்யபாம்பரை யார்ப்பரோவிடை யேறரோகடை தோறுஞ்சென்
றையங்கொள்ளுமவ் வடிகளோநமக் கடிகளாகிய வடிகளே. ௭

நீடுவாழ்பதி யுடையரோவய னெடியமாலுக்கு நெடியரோ
பாடுவாரையு முடையரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
காடுதானரங் காகவேகைக ளொட்டிஞேடில யம்பட
ஆடுவாரெனப் படுவரோநமக் கடிகளாகிய வடிகளே. ௮

நமணநந்தியுங் கருமவீரனுந் தருமசேனனு மென்றிவர்
குமணமாமலைக் குன்றுபோனின்று தங்கள்கூறையொன் றின்றியே
ஞமணஞாஞண ஞாணஞோணமென் றோதியாரையு நாணிலா
அமணராற்பழிப் புடையரோநமக் கடிகளாகிய வடிகளே. ௯

படிசெய்நீர்மையிற் பத்தர்காள்பணிந் தேத்தினேன்பணி யீரருள்
வடிவிலான்றிரு நாவலூரன்வ னப்பகையப்பன் வன்றொண்டன்
செடியனாகிலுந் தீயனாகிலுந் தம்மையேமனஞ் சிந்திக்கும்
அடியனூரனை யாள்வரோநமக் கடிகளாகிய வடிகளே. ௰

திருச்சிற்றம்பலம்

## திருப்புகலூர் பதிகம் ௩௪

பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

தம்மையேபுகழ்ந் திச்சைபேசினுஞ்
சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேயெந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்
இம்மையேதருஞ் சோறுங்கூறையு
மேத்தலாமிடர் கெடலுமாம்
அம்மையேசிவ லோகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௧

மிடுக்கிலாதானை வீமனேவிறல்
விசயனேவில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியேயென்று
கூறினுங்கொடுப் பாரிலை
பொடிக்கொள்மேனியெம் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அடிக்குமேலம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௨

காணியேற்பெரி துடையனேகற்று
நல்லனேசுற்ற நற்கிளை
பேணியேவிருந் தோம்புமேயென்று
பேசினுங்கொடுப் பாரிலை
பூணிபூண்டுழப் புட்சிலம்புந்தண்
புகலூர்பாடுமின் புலவீர்காள்
ஆணியாயம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௩

நரைகள்போந்துமெய் தளர்ந்துமூத்துட
னடுங்கிநிற்குமிக் கிழவனை
வரைகள்போற்றிர டோளனேயென்று
வாழ்த்தினுங்கொடுப் பாரிலை

புரைவெள் ளேறுடைப் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அரையனாயம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௪

வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப்
பாவியைவழக் கில்லியைப்
பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று
பாடினுங்கொடுப் பாரிலை
பொன்செய்செஞ்சடைப் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
நெஞ்சினோயறத் துஞ்சுபோவதற்
கியாதுமையுற வில்லையே. ௫

நலமிலாதானை நல்லனேயென்று
நரைத்தமாந்தரை யிளையனே
குலமிலாதானைக் குலவனேயென்று
கூறினுங்கொடுப் பாரிலை
புலமெலாம்வெறி கமழும்பூம்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அலமராதம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௬

நோயனைத்தடந் தோளனேயென்று
நொய்யமாந்தரை விழுமிய
தாயன்றோபுல வோர்க்கெலாமென்று
சாற்றினுங்கொடுப் பாரிலை
போயுழன்றுகண் குழியாதேயெந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்
ஆயமின்றிப்போ யண்டமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௭

எள்விழுந்திடம் பார்க்குமாகிலு
மீக்குமீகில னாகிலும்
வள்ளலேயெங்கண் மைந்தனேயென்று
வாழ்த்தினுங்கொடுப் பாரிலை

புள்ளெலாஞ்சென்று சேரும்பூம்புக
ளூரைப்பாடுமின் புலவீர்காள்
அள்ளற்பட்டழுந் தாதுபோவதற்
கியாதுமையுற வில்லையே. ௯

கற்றிலாதானைக் கற்றுநல்லனே
காமதேவனை யொக்குமே
முற்றிலாதானை முற்றனேயென்று
மொழியினுங்கொடுப் பாரிலை
பொத்திலாந்தைகள் பாட்டறாப்புக
ளூரைப்பாடுமின் புலவீர்காள்
அத்தனாயம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௰

தையலாருக்கொர் காமனேயென்றுஞ்
சாலநல்வழக் குடையனே
கையுலாவிய வேலனேயென்று
கழறினுங்கொடுப் பாரிலை
பொய்கையாவியின் மேதிபாய்புக
ளூரைப்பாடுமின் புலவீர்காள்
ஐயனாயம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. ௧௰

செறுவினிற்செழுங் கமலமோங்குதென்
புகலூர்மேவிய செல்வனை
நறவம்பூம்பொழி னாவலூரன்வ
னப்பகையப்பன் சடையன்றன்
சிறுவன்வன்றொண்ட னூரன்பாடிய
பாடல்பத்திவை வல்லவர்
அறவனாரடி சென்றுசேர்வதற்
கியாதுமையுற வில்லையே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-அக்கினீசுவரர்; இறைவி-கருந்தார்க்குழலம்மை.

---

பதிக வரலாறு :

தம்பிரான் றோழர் திருவாரூரில் எழுந்தருளியிருக்கு நாளிற் பங்குனி யுத்திரத் திருநாள் குறுக வருதலால் அதிற் பரவையார் கொடைக்குக் குறைவறுக்க நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து திருப்புகலூருக்கு எழுந்தருளித் திருக்கோயிலிலே இறைவனை வணங்கிப் பாடித் தமது கருத்தினை நிகழ்த்தி வறிதே புறம்போந்து திருமடத்தையடையாமற் றிருமுற்றத்தில் அன்பரோ டொருசிறை யிருந்தபோ திறைவரருளாற் றுயில்வந்தெய்தியது. நாயனார் திருப்பணிச் செங்கற்களைக் கொணர்வித்துத் திருமுடிக் குயரமாக வடுக்கித் திருவாடையை விரித்து அதன்மேற் பள்ளிகொண்டருளினார். பிறகு துயிலுணர்ந்த நம்பிகள் வெற்றி விடையாரருளாலே வேமண்கல்லே விரிசுடர் செம்பொற் றிண்கனகமாகக்கண்டு புகலூரிறைவரருள் போற்றிக் கோயிலையடைந்து குறிப்பிலடங்காப் பேரன்பினால் வணங்கிப் பண் டங்கிய இசையில் மதுரமொழி மாலை 'தம்மையே புகழ்ந்து என்றெடுத்துப் பாடித் திருக்கடைக்காப் பணிந்து புறம்போந்து நிதியின் குவையைக் கொண்டு திருப்பனையூருக் கெழுந்தருளினார்.



## திருப்புறம்பயம் பதிகம் ௯௬

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

அங்கமோதியோ ராறைமேற்றளி நின்றும்போந்துவந் தின்னம்பர்த்
தங்கினோமையு மின்னதென்றில ரீசனாரெழு நெஞ்சமே
கங்குலேமங்கள் கொண்டுதேவர்க ளேத்திவானவர் தாந்தொழும்
பொங்குமால்விடை யேறிசெல்வப் புறம்பயந்தொழப் போதுமே. ௧

பதியுஞ்சுற்றமும் பெற்றமக்களும் பண்டையாரலர் பெண்டிரும்
நிதியிலிம்மனை வாழும்வாழ்க்கையு நினைப்பொழிமட நெஞ்சமே
மதியஞ்சேர்சடைக் கங்கையானிட மகிழுமல்லிகை செண்பகம்
புதியபூமலர்ந் தெல்லிநாறும் புறம்பயந்தொழப் போதுமே. ௨

புறந்திரைந்துந ரம்பெழுந்துந ரைத்துநீயுரை யாற்றளர்ந்
தறம்புரிந்துநி னைப்பதாண்மை யரிதுகாணிஃ தறிதியேல்
திறம்பியாதெழு நெஞ்சமேசிறு காலைநாமுறு வாணியம்
புறம்பயத்துறை பூதநாதன் புறம்பயந்தொழப் போதுமே. ௩

குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைக ளிம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற வாதெழுமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி புறம்பயந்தொழப் போதுமே. ௪

கள்ளிநீசெய்த தீமையுள்ளன பாவமும்பறை யும்படி
தெள்ளிதாவெழு நெஞ்சமேசெங்கண் சேவுடைச்சிவ லோகனூர்
துள்ளிவெள்ளிள வாளைபாய்வயற் றோன்றுதாமரைப் பூக்கண்மேல்
புள்ளிநள்ளிகள் பள்ளிகொள்ளும் புறம்பயந்தொழப் போதுமே.

படையெலாம்பக டாரவாளினும் பௌவஞ்சூழ்ந்தர சாளினும்
கடையெலாம்பிணைத் தேரைவால்கவ லாதெழுமட நெஞ்சமே
மடையெலாங்கழு நீர்மலர்ந்தும ருங்கெலாங்கரும் பாடத்தேன்
புடையெலாமண நாறுசோலைப் புறம்பயந்தொழப் போதுமே.

முன்னைச்செய்வினை யிம்மையில்வந்து மூடுமாதலின் முன்னமே
என்னைநீதியக் காதெழுமட நெஞ்சமேயெந்தை தந்தையூர்
அன்னச்சேவலோ டூடிப்பேடைகள் கூடிச்சேரு மணிபொழில்
புன்னைக்கன்னி களக்கரும்பு புறம்பயந்தொழப் போதுமே. ௭

மலமெலாமறு மிம்மையேமறு மைக்கும்வல்வினை சார்கிலா
சலமெலாமொழி நெஞ்சமேயெங்கள் சங்கரன்வந்து தங்குமூர்
கலமெலாங்கடன் மண்டுகாவிரி நங்கையாடிய கங்கைநீர்
புலமெலாமண்டிப் பொன்விளைக்கும் புறம்பயந்தொழப் போதுமே.

பண்டரீயன செய்ததீமையும் பாவமும்பறை யும்படி
கண்டரீயன கேட்டியேற்கவ லாதெழுமட நெஞ்சமே
தொண்டரீயன பாடித்துள்ளிநின் றூடிவானவர் தாந்தொழும்
புண்டரீக மலரும்பொய்கைப் புறம்பயந்தொழப் போதுமே. ௯

துஞ்சியும்பிறந் துஞ்சிறந்துந் துயக்கறாத மயக்கிவை
அஞ்சியூரன் திருப்புறம்பயத் தப்பனைத்த மிழ்ச் சீரினால்
நெஞ்சினாலே புறம்பயந்தொழு துய்துமென்று நினைத்தன
வஞ்சியாதுரை செய்யவல்லவர் வல்லவானுல காள்வரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-சாட்சிவரதேசுவரர், இறைவி-கரும்படுசொல்லம்மை.



## திருப்பைஞ்ஞீலி  பதிகம் ௩௬

பண் - கோல்லி

திருச்சிற்றம்பலம்

காருலாவிய நஞ்சையுண்டிருள் கண்டவெண்டலை யோடுகொண்
டூரெலாந்திரிந் தென்செய்வீர்பலி யோரிடத்திலே கொள்ளுநீர்
பாரெலாம்பணிந் தும்மையேபர விப்பணியும்பைஞ் ஞீலியீர்
ஆரமாவது நாகமோசொலு மாரணீய விடங்கரே. க

சிலைத்துநோக்கும்வெள் ளேறுசெந்தழல் வாயபாம்பது மூசெனும்
பலிக்குநீர்வரும் போதுநுங்கையிற் பாம்புவேண்டா பிரானிரே
மலைத்தசந்தொடு வேங்கைகோங்கமு மன்னுகாரகில் சண்பகம்
அலைக்கும்பைம்புனல் சூழ்பைஞ்ஞீலியி லாரணீய விடங்கரே. உ

தூயவர்கண்ணும் வாயுமேனியுந் துன்னவாடை சுடலையில்
பேயொடாடலைத் தவிருநீரொரு பித்தரோவெம் பிரானிரே
பாயுநீர்க்கிடங் கார்கமலமும் பைந்தண்மாதவி புன்னையும்
ஆயபைம்பொழில் சூழ்பைஞ்ஞீலியி லாரணீய விடங்கரே. ௩

செந்தமிழ்த்திறம் வல்லிரோசெங்க ணரவமுன்கையி லாடவே
வந்துநிற்குமி தென்கொலோபலி மாற்றமாட்டோ மிடகிலோம்
பைந்தண்மாமல ருந்துசோலைகள் கந்தநாறுபைஞ் ஞீலியீர்
அந்திவானமு மேனியோசொலு மாரணீய விடங்கரே. ச

நீறுநுந்திரு மேனிநித்தில நீணெடுங்கண்ணி னாளொடும்
கூறராய்வந்து நிற்றிராற்கொணர்ந் திடுகிலோம்பலி நடமினோ
பாறுவெண்டலை கையிலேந்திப்பைஞ் ஞீலியேனென்றீ ரடிகணீர்
ஆறுதாங்கிய சடையரோசொலு மாரணீய விடங்கரே. ௫

குரவநாறிய குழலினார்வளை கொள்வதேதொழி லாகிநீர்
இரவுமிம்மனை யறிதிரேயிங்கே நடந்துபோகவும் வல்லிரே
பரவிநாடொறும் பாடுவார்வினை பற்றறுக்கும்பைஞ் ஞீலியீர்
அரவமாட்டவும் வல்லிரோசொலு மாரணீய விடங்கரே. ௬

ஏடுலாமலர்க் கொன்றைசூடுதி ரென்பெலாமணிந் தென்செய்வீர்
காடுநும்பதி யோடுகையது காதல்செய்பவர் பெறுவதென்
பாடல்வண்டிசை யாலுஞ்சோலைப்பைஞ் ஞீலியேனென்று நிற்றிரால்
ஆடல்பாடலும் வல்லிரோசொலு மாரணீய விடங்கரே. ௭

மத்தமாமலர்க் கொன்றைவன்னியுங் கங்கையாளொடு திங்களும்
மொய்த்தவெண்டலை கொக்கிறகொடு வெள்ளெருக்கமுன் சடையதாம்
பத்தர்சித்தர்கள் பாடியாடும்பைஞ் ஞீலியேனென்று நிற்றிரால்
அத்தியீருரி போர்த்திரோசொலு மாரணீய விடங்கரே. ௮

தக்கைதண்ணுமை தாளம்வீணை தகுணிச்சங்கிணை சல்லரி
கொக்கரைகுட முழவினோடிசை கூடிப்பாடிநின் றாடுவீர்
பக்கமேகுயில் பாடுஞ்சோலைப்பைஞ் ஞீலியேனென்று நிற்றிரால்
அக்குமாமையும் பூண்டிரோசொலு மாரணீய விடங்கரே. ௯

கையொர்பாம்பரை யார்த்தொர்பாம்பு கழுத்தொர்பாம்பவை பின்புதாழ்
மெய்யெலாம்பொடிக் கொண்டுபூசுதிர் வேதமோதுதிர் கீதமும்
பையவேவிடங் காகநின்றுபைஞ் ஞீலியேனென்றீ ரடிகணீர்
ஐயமேற்குமி தென்கொலோசொலு மாரணீய விடங்கரே. ௰

அன்னஞ்சேர்வயல் சூழ்பைஞ்ஞீலியி லாரணீய விடங்கரை
மின்னுநுண்ணிடை மங்கைமார்பலர் வேண்டிக்காதன் மொழிந்தசொல்
மன்னுதொல்புகழ் நாவலூரன்வன் றொண்டன்வாய்மொழி பாடல்பத்
துன்னியின்னிசை பாடுவாருமை கேள்வன்சேவடி சேர்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-மெய்ஞ்ஞான நீலகண்டேசுவரர்; இறைவி-விசாலாட்சியம்மை.

பதிக வரலாறு:

திருப்பைஞ்ஞீலியை யடைந்த நம்பியாரூரர் இறைவனை வணங்கித் தமக்கு முன்னே தோன்றுங் கங்காளரைக் காணப்பெற்று நெஞ்சு கரைந்துருகி மயலாற்கூறிய கூற்றாகக் 'காருலாவிய நஞ்சை' என்று எடுத்து 'ஆரணீய விடங்கரே' என்று பாடியேத்தினார்.



## திருவாரூர் — பதிகம் ௬௭

### பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

குருகுபா யக்கொழுங் கரும்புக ணெரிந்தசா
றருகுபா யும்வய லந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
துருகுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ௧

பறக்குமெங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்
அறக்கணென் னத்தகு மடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகணில் லாமையும்
உறக்கமில் லாமையு முணர்த்தவல் லீர்களே. ௨

சூழுமோ டிச்சுழன் றுழலும்வெண் ணாரைகாள்
ஆளுமம் பொற்கழ லடிகளா ரூரர்க்கு
வாழுமா றும்வளை கழலுமா றும்மெனக்
கூழுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ௩

சக்ரவா ளத்திளம் பேடைகாள் சேவல்காள்
அக்ரமங் கள்செயு மடிகளா ரூரர்க்கு
வக்ரமில் லாமையும் வளைகணில் லாமையும்
உக்ரமில் லாமையு முணர்த்தவல் லீர்களே. ௪

இலைகொள்சோ லைத்தலை யிருக்கும்வெண் ணாரைகாள்
அலைகொள்சூ லப்படை யடிகளா ரூரர்க்குக்
கலைகள்சோர் கின்றதுங் கனவளை கழன்றதும்
முலைகள்பீர் கொண்டதும் மொழியவல் லீர்களே. ௫

வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் குருகுகாள்
அண்டவா ணர்தொழு மடிகளா ரூரரைக்
கண்டவா றுங்காமத் தீக்கனன் றெரிந்துமெய்
உண்டவா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ௬

தேனலங் கொண்டதேன் வண்டுகாள் கொண்டல்காள்
ஆனலங் கொண்டவெம் மடிகளா ரூரர்க்குப்
பானலங் கொண்டவெம் பணைமுலை பயந்துபொன்
ஊனலங் கொண்டதும் முணர்த்தவல் லீர்களே. ௭

சுற்றுமுற் றுஞ்சுழன் றழலும்வெண் ணுரைகாள்
அற்றமுற் றப்பகர்ந் தடிகளா ரூரர்க்குப்
பற்றுமற் றின்மையும் பாடுமற் றின்மையும்
உற்றுமற் றின்மையு முணர்த்தவல் லீர்களே. ௮

குரவநா றக்குயில் வண்டினம் பாடநின்
றரவமா டும்பொழி லந்தணா ரூரரைப்
பரவிநா டும்மதும் பாடிநா டும்மதும்
உருகிநா டும்மதும் முணர்த்தவல் லீர்களே. ௯

கூடுமன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
ஆடுமம் பொற்கழ லடிகளா ரூரரைப்
பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி
ஊடுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. ௰

நித்தமா கநினைந் துள்ளமேத் தித்தொழும்
அத்தனம் பொற்கழ லடிகளா ரூரரைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி யப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

பதிக வரலாறு :

திருத்துருத்தியை வணங்கித் திருவாரூரை யடைந்த நம்பியாரூரர் மயங்கு மாலையிற் புகுந்து முன்னம் திருப்பாவையுண் மண்டளியிற்

றாவாயரைக் கண்டு ஈண்டு எமது துயர் களைந்து கண்காணக் காட்டா யென்று இறைவர் முன்னின்று 'தூவாயர்' என்றெடுத்துப் பாடிப் புறம் போந்து வேறே யிருந்து திருத்தொண்டருடன் கூடித் திருக்கருவறையுள் இடைதெரிந்து நடுநிசிக்கண் இறைஞ்ச வருகின்றவர் அடியவரைப் பார்த்துக் கைக்கிளையினாலே இப்பதிகம் பாடியருளினார்.



## திருவதிகைத்திருவீரட்டானம் பதிகம் ௩அ

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௧

முன்னேயெம் பெருமானை மறந்தென்கொ னறவா
தொழிந்தென்கொன் மறவாத சிந்தையால் வாழ்வேன்
பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே யீசனென் றுன்னையே புகழ்வேன்
அன்னேயென் னத்தாவென் றமரரா லமரப்
படுவானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்னேயென் னெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௨

விரும்பினேற் கெனதுள்ளம் விடகிலா விதியே
விண்ணவர்தம் பெருமானே மண்ணவர்நின் றேத்துங்
கரும்பேயென் கட்டியென் றுள்ளத்தா லுள்கிக்
காதல்சேர் மாதராள் கங்கையா ணங்கை

வரும்புனலுஞ் சடைக்கணிந்து வளராத பிறையும்
வரியரவு முடன்றுயில வைத்தருளு மெந்தை
இரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௩

நாற்றானத் தொருவனை நானாய பரனை
நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக்
காற்றானைத் தீயானைக் கடலானை மலையின்
றலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள
ஆற்றானைப் பிறையானை யம்மானை யெம்மான்
றம்மானை யாவர்க்கு மறிவரிய செங்கண்
ஏற்றானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௪

சேந்தர்தாய் மலைமங்கை திருநிறமும் பரிவு
முடையானை யதிகைமா நகருள்வாழ் பவனைக்
கூந்தலுழ் புனன்மங்கை குயிலன்ன மொழியாள்
சடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி
வாய்ந்தநீர் வரவுந்தி மராமரங்கள் வணக்கி
மறிகடலை யிடங்கொள்வான் மலையாரம் வாரி
ஏந்துநீ ரெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௫

மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்
வல்லேனக் கொம்பணிந்த மாதவனை வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம்புந்
தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை வென்ற
வெம்மான மதகரியி னுரியானை வேத
விதியானை வெண்ணீறு சண்ணித்த மேனி
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௬

வெய்தாய வினைக்கடலிற் றடுமாறு முயிர்க்கு
மிகவிரங்கி யருள்புரிந்து வீடுபே றாக்கம்
பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங் கண்டத்
தெண்டோளெம் பெருமானைப் பெண்பாக மொருபால்

செய்தானைச் செக்கர்வா னொளியானைத் தீவா
யரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ
எய்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௭

பொன்றானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்றானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வா னந்தி
அன்றானை யமரர்கடம் பெருமானைக் கருமா
னுரியானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்றானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௮

திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச்
சிலைவளைவித் தொருகணையாற் றொழில்பூண்ட சிவனைக்
கருந்தாள மதக்களிற்றி னுரியானைப் பெரிய
கண்மூன்று முடையானைக் கருதாத வரக்கன்
பெருந்தோள்க ளலைந்து மீரைந்து முடியு
முடையானைப் பேயுருவ மூன்றுமுற மலைமேல்
இருந்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௯

என்பினையே கலனாக வணிந்தானை யெங்க
ளெருதேறும் பெருமானை யிசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயனாவ லூர்க்கோன்
வன்றொண்ட னாரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கு மறிவரிய வத்தர்
பெருமானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்பொன்னை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - அதிகைவீரட்டநாதர்; இறைவி - அதிகைநாயகி.

---

பதிக வரலாறு :

நம்பியாரூரர் பெருமான் திருவெண்ணெய் நல்லூரில் ஆட்கொள்ளப் பெற்ற பிறகு திருநாவலூர் திருத்துறையூர் முதலிய திருப்பதிகளை வணங்கி வழிபட்டு திருத்தனூர் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று வழிக்கொள்வாராய்ப் பெண்ணையாற்றைக் கடந்தேறிச் சூரியன் மேற்கடலிற் செலவணையும் பொழுதணையும் நேரத்தில் திருவதிகைப் புறத்தணைந்து அஃது உடைய வரசு உழவாரப் படையாளி விடையவர்க்குக் கைத்தொண்டு செய்த பெரும்பதி யாதலால், அதனை நான் மிதிக்கமாட்டேனென்றஞ்சி யடையாமற் புறம்பணையிலுள்ள 'சித்தவட மடம்' புகுந்து அதனிடத்துத் திருவீரட்டானரைத் திருவுளத்திற் கொண்டு பள்ளியமர்ந்த போது இறைவர் முதுவடிவின் மறையவராய் முன்னொருவரறியாதே மடத்திற் புகுந்து நாயனாரது திருமுடிமேல் திருவடித்தாமரைகளை வைத்துப் பள்ளிகொள்வாரைப்போ லிருந்தார். அதனை யாரூரர் உணர்ந்து முதுமறையோய் உன்னடி என் சென்னியில் வைத்தனையென்ன, இறைவர் திசையறியா வகை செய்தது என்னுடைய மூப்புக் காண் என்றருளியதனால் அவர் அதற்கிசைந்து தமது முடி யப்பால் வைத்துத் துயிலுணர்ந்தும் அங்கும் அவர் திருமுடிமேல் மீட்டும் இறைவர் தாணீட்டிய போது திருநாவலூரர் 'இங்கு எனைப் பலகாலு மிதித்தனை நீயார்' என்று கேட்டனர். அதற்கிறைவர் என்னை யறிந்திலையோ வெனத் திருவுருக் கரத்தலும் வன்றொண்டர் 'செம்மாந்திங்கு யானறியாதென் செய்தேன்' எனத் தெளிந்து இத்திருப்பதிகத்தைப் பாடித் திருவடி பணிந்தார்.



## திருத்தொண்டத்தொகை

பதிகம் ௩௯

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
　திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
　னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
　விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
　னாரூர னாரூரி லம்மானுக் காளே. க

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க் கடியே
னேனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாற
னெஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானாயர்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௨

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௩

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே
னொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௪

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே
னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியே
னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கற்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௫

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௬

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. எ

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. அ

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. கூ

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
　　பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
　　திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
　　முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்தா ரடியார்க்கு மடியே
　　னாரூர னாரூரி லம்மானுக் காளே. ௰

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
　　வரிவளையாண் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
　　திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
　　னிசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பா
　　ராரூரி லம்மானுக் கன்பரா வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

பரவையாரை மணந்த பாவலர் பெருமான் ஒருநாள் பல முனிவரோடும் திருக்கோயிலை யடைந்து தேவாசிரியத் திருக்காவணத்து எண்ணிலராய்க் கூடியிருந்த அடியவரைக் கண்டு இவர்க்கு யான் அடியானாகும் நாள் எந்நாள் என்று எண்ணி உள்ளே செல்ல இறைவர் அவர்க்கு எதிரே தமது திருவுருவைக் காட்டி யெழுந்தருளலும் அவர் திருவடிகளைப் பணிந்து பூண்டு ஏத்தி நின்றார். நின்ற அவர்க்கு இறைவர் அவ்வடியார் வழித்தொண்டையுணர நல்கியவர் பெருமையையும் விளக்கியருளி இவரை நீ யடைந்து பாடுவாயாக வென்று பணித்தருளினார். நம்பியாரூரரும் ஏதந் தீர் நெறியைப் பெற்றேனென்று எதிர் வணங்கி இன்னவாறு இன்னபண்பு என்று எவ்வாறு ஏத்துகேன்? அதற்கு யான் யார்? பாடும் பரிசைத் தேவரீர் எனக்கு அருள் செய்ய வேண்டுமென்று வேண்ட உமைபாகர் உலகம் அல்லல் தீர்ந்து உய்ய மறையளித்த திருவாக்கால் 'தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்' என்று

எல்லையில் வண்புகழாரை இசைப்பாமொழியென அடியெடுத்துக் கொடுத்தருளினார். ஆரூரர் அடியவரைத் தொலைவிலேயே பல முறை தொழுதடைந்து அருகு சென்று அழியா வீரத்தாராகிய அவ்வடியார்க் கெல்லாம் தனித்தனி வேறடியேனென்று ஆர்வத்தால் திருத்தொண்டத்தொகை என்னும் இதனை யருளிச் செய்து அவர் எதிர் பணிந்து திருக்கூட்டத்தின் நடுவணைந்தார்.



## திருக்காளுட்டுமுள்ளூர் பதிகம் ௬௰

### பண் - கோல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை
மறையவனை வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கியுமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூ லான்முகத்தி னானை
முள்வாய மடல்தழுவி முடத்தாழை யீன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
காளுட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ௧

ஒருமேக முகிலாகி யொத்துலகந் தானா
யூர்வனவு நிற்பனவு மூழிகளுந் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்க ளைந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி னானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க வந்தணர்க ளோதுநக ரெங்கும்
கருமேதி செந்தா மரைமேயுங் கழனிக்
காளுட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ௨

இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
யிறையவனை மறையவனை யெண்குணத்தி னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை

அரும்புயர்ந்த வரவிந்தத் தணிமலர்க ளேறி
யன்னங்கள் விளையாடு மகன்றுறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ௩

பூளைபுனை கொன்றையொடு புரிசடையி னானைப்
புனலாகி யனலாகிப் பூதங்க ளாந்தாய்
நாளையின்று நெருநலா யாகாய மாகி
ஞாயிறாய் மதியமாய் நின்றவெம் பரனைப்
பாளைபடு பைங்கமுகின் சூழலிளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயி லாலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ச

செருக்குவாய்ப் பைங்கண்வெள் ளரவரையி னானைத்
தேவர்கள்கு ளாமணியைச் செங்கண்விடை யானை
முருக்குவாய் மலரொக்குந் திருமேனி யானை
முன்னிலையாய் முழுதுலக மாயபெரு மானை
இருக்குவா யந்தணர்க ளெழுபிறப்பு ளெங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநக ரெங்கும்
கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்கமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ரு

விடையரவக் கொடியேந்தும் விண்ணவர்தங் கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுத லானும்
அடியிணையுந் திருமுடியுங் காணவரி தாய
சங்கரனைத் தத்துவனைத் தையல்மட வார்கள்
உடையவிழக் குழலவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்க ளுந்திவரு கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. சா

அருமணியை முத்தினை யானஞ்சு மாடு
மமரர்கடம் பெருமானை யருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பி னூறலிருந் தேனைத்;
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்

குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேல்
கருமணிகள் போனீல மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. எ

இழைதழுவு வெண்ணூலு மேவுதிரு மார்பி
னீசன்ற னெண்டோள்கள் வீசியெரி யாடக்
குழைதழுவு திருக்காதிற் கோளரவ மசைத்துக்
கோவணங்கொள் குழகனைக் குளிர்சடையி னானைத்
தழைதழுவு தண்ணிறத்த செந்நெலத னயலே
தடந்தரள மென்கரும்பின் றாழ்கிடங்கி னருகே
கழைதழுவித் தேன்றொடுக்குங் கழனிசூழ் பழனக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. அ

குனிவினிய கதிர்மதியஞ் சூடுசடை யானைக்
குண்டலஞ்சேர் காதவனை வண்டினங்கள் பாடப்
பனியுதிருஞ் சடையானைப் பால்வெண்ணீற் றானைப்
பலவுருவுந் தன்னுருவே யாயபெரு மானைத்
துனிவினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலங் கண்வளருஞ் சூழ்கிடங்கி னருகே
கனிவினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. கூ

தேவியம்பொன் மலைக்கோமான் றன்பாவை யாகத்
தனதுருவ மொருபாகஞ் சேர்த்துவித்த பெருமான்
மேவியவெந் நரகத்தி லழுந்தாமை நமக்கு
மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுத லானைத்
தூவியவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக்கெண்டை மிளிர்ந்துகய றுள்ளிவிளை யாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. ய

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனறழுவு கொள்ளிடத்தின் கரைமேற்
கானாட்டு முள்ளூரிற் கண்டுகழ றொழுது

உரையினூர் மதயானை நாவலா ரூர
னுரிமையா லுரைசெய்த வொண்டமிழ்கள் வல்லார்
வரையினார் வகைஞால மாண்டவர்க்குந் தாம்போய்
வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-பதஞ்சலியீசுவரர்; இறைவி-கானார்குழலம்மை.



## திருக்கச்சூராலக்கோயில் பதிகம் ௪௨

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முதுவாயோரி கதறமுதுகாட் டெரிகொண்டாடன் முயல்வானே
மதுவார்கொன்றைப் புதுவீசூடும் மலையான்மகடன் மணவாளா
கதுவாய்த்தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரே
அதுவேயாமா றிதுவோகச்சூ ராலக்கோயி லம்மானே. ௧

கச்சேரரவொன் றரையிலசைத்துக் கழலுஞ்சிலம்புங்கலிக்கப்பலிக்கென்
றுச்சம்போதா வூரூர்திரியக் கண்டாலடியா ருருகாரே
இச்சையறியோ மெங்கள்பெருமா னேழேழ்பிறப்புமெனையாள்வாய்
அச்சமில்லாக் கச்சூர்வடபா லாலக்கோயி லம்மானே. ௨

சாலக்கோயி லுளநின்கோயி லவையென்றலைமேற் கொண்டாடி
மாலைத்தீர்ந்தேன் வினையுந்துரந்தேன் வானோரறியா நெறியானே
கோலக்கோயில் குறையாக்கோயில் குளிர்பூங்கச்சூர் வடபாலை
ஆலக்கோயிற் கல்லாநிழற்கீ ழறங்கட்டுரைத்த வம்மானே. ௩

விடையுங்கொடியுஞ் சடையுமுடையாய் மின்னேருருவத் தொளியானே
கடையும்புடைசூழ் மணிமண்டபமுங் கன்னிமாடங் கலந்தெங்கும்
புடையும்பொழிலும் புனலுந்தழுவிப் பூமேற்றிருமா மகள்புல்கி
அடையுங்கழனிப் பழனக்கச்சூ ராலக்கோயி லம்மானே. ௪

மேலைவிதியே வினையின்பயனே விரவார்புரமூன் றெரிசெய்தாய்
காலையெழுந்து தொழுவார்தங்கள் கவலைகளைவாய் கறைக்கண்டா
மாலைமதியே மலைமேன்மருந்தே மறவேனடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக்கழனிப் பழனக்கச்சூ ராலக்கோயி லம்மானே. ரு

பிறவாயிறவாய் பேணாய்மூவாய் பெற்றமேறிப் பேய்சூழ்தல்
துறவாய்மறவாய் சுடுகாடென்று மிடமாக்கொண்டு நடமாடி
ஒறுவாய்த்தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியா ருருகாரே
அறவேயொழியாய் கச்சூர்வடபா லாலக்கோயி லம்மானே. சு

பொய்யேயுன்னைப்புகழ்வார்புகழ்ந்தாலதுவும்பொருளாக் கொள்வானே
மெய்யேயெங்கள் பெருமானுன்னை நினைவாரவரை நினைகண்டாய்
மையார்தடங்கண் மடந்தைபங்கா கங்கார்மதியஞ் சடைவைத்த
ஐயாசெய்யாய் வெளியாய்கச்சூ ராலக்கோயி லம்மானே. எ

ஊனைப்பெருக்கியுன்னைநினையாதொழிந்தேன்செடியேனுணர்வில்லேன்
கானக்கொன்றை கமழமலருங் கடிநாறுடையாய் கச்சூராய்
மானைப்புரையு மடமென்னோக்கி மடவாளஞ்ச மறைத்திட்ட
ஆனைத்தோலாய் ஞானக்கண்ணா யாலக்கோயி லம்மானே. அ

காதல்செய்து களித்துப்பிதற்றிக் கடிமாமலரிட் டுனையேத்தி
ஆதல்செய்யு மடியாரிருக்க வையங்கொள்ள வழக்கிதே
ஓதக்கண்டே னுன்னைமறவே னுமையாள்கணவா வெனையாள்வாய்
ஆதற்பழனக் கழனிக்கச்சூ ராலக்கோயி லம்மானே. கூ

அன்னமன்னும் வயல்சூழ்கச்சூ ராலக்கோயி லம்மானை
உன்னமுன்னு மனத்தாரூர ராரூரன்பேர் முடிவைத்த
மன்னுபுலவன் வயனாவலர்கோன் செஞ்சொனாவன் வன்றொண்டன்
பன்னுதமிழ்நூன் மாலைவல்லா ரவரெந்தலைமேற் பயில்வாரே. ல

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன்-விருந்திட்டவரதர்; இறைவி-உமையம்மை.

பதிக வரலாறு :

திருக்கழுக்குன்றத்தை வழிபட்ட வன்றொண்டர் திருக்கச்சூரை யடைந்து மெய்யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தபோது அமுது செய்யும் பொழுதாகி அமுது செய்தளிப்பார் வாராமையால் மிக்க பசி வருத்தத்தால் திருவாயிலின் மதிற்புறத்திருந்தார். மலைமேன் மருந் தான இறைவர் வன்றொண்டர் பசி தீர்க்கும் பொருட்டுப் பிரமன் றலை யோடல்லாத வெற்றோட்டைக் கையிலேந்திக்கொண்டு அங்கு வாழும் மறையவராய் வெளிப்பட்டு வந்து நாயனாரைப் பார்த்துப் 'பசியினான் மிக வருந்தி யிளைத்துற்றீர். உம்முடைய பசி வேட்கைதீர இப்போது உமக்குச் சோறிரந்து கொணர்கின்றேன். அப்புறம் செல்லாது சிறிது பொழுது அமரும்' எனச் செப்பித் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென் றிரந்து ஆட்கொண்டவர் முன் கொடுவந்து இன்னடிசிலுங் கறியும் அரந்தைதரும் பசிதீர அருந்தும்படி பணித்துக் கொடுத்ததை நாயனார் கோர் தொழுது வாங்கித் தமது மருங்கணைந்த வத் தொண்டரோடு உண்டு உவந்திருக்கும்போது இறைவர் மறைந்தருளினார். அதனை யுணர்ந்து மறையவர் இறைவரெனத் தெளிந்து எளியேன் பொருட்டாக இப் பெரும் பகற்கண் பேரோசைச் சிலம்பணி சேவடி வருந்த எழுந்தருளி னாரேயென வருந்தி உருகிக் கண்ணீர் பொழியப் புளகம் போர்த்த உடம்பொடு இப்பதிகத்தால் இறைவரைப் பணிந்து பாடி மகிழ்ந்தார்.



## திருவெஞ்சமாக்கூடல் பதிகம் சஉ

### பண் - கோல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

எறிக்குங்கதிர்வே யுதிர்முத்தமொ
டேலமிலவங்கந் தக்கோலமிஞ்சி
செறிக்கும்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
முறிக்குந்தழைமா முடப்புன்னைஞாழல்
குருக்கத்திகண்மேற் குயில்கூவலறா
வெறிக்குங்கலைமா வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. க

குளங்கள்பலவுங் குழியுந்நிறையக்
குடமாமணிசந் தனமும்மகிலும்
துளங்கும்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
வளங்கொண்மதிண்மா ளிகைகோ புரமும்
மணிமண்டபமும் மிவைமஞ்சுதன்னுள்
விளங்கும்மதிதோய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௨

வரைமானனையார் மயிற்சாயனல்லார்
வடிவேற்கணல்லார் பலர்வந்திறைஞ்சத்
திரையார்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
நிரையார்கமுகுந் நெடுந்தாட்டெங்குங்
குறுந்தாட்பலவும் விரவிக்குளிரும்
விரையார்பொழில்சூழ் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௩

பண்ணேர்மொழியா ளையோர்பங்குடையாய்
படுகாட்டகத்தென் றுமோர்பற்றொழியாய்
தண்ணாரகிலுந் நலசாமரையும்
மலைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
மண்ணார்முழவுங் குழலுமியம்ப
மடவார்நடமா டுமணியரங்கில்
விண்ணார்மதிதோய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௪

துளைவெண்குழையுஞ் சுருள்வெண்டோடுந்
தூங்குங்காதிற் றுளங்கும்படியாய்
களையேகமழும் மலர்க்கொன்றையினுங்
கலந்தார்க்கருள்செய் திடுங்கற்பகமே
பிளைவெண்பிறையாய் பிறங்குஞ்சடையாய்
பிறவாதவனே பெறுதற்கரியாய்
வெளைமால்விடையாய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௫

தொழுவார்க்கெளியாய் துயர்தீரநின்றாய்
சுரும்பார்மலர்க்கொன் றைதுன்றுஞ்சடையாய்
உழுவார்க்கரிய விடையேறியொன்னார்
புரந்தீயெழவோ டுவித்தாயழகா
முழவாரொலிபா டலொடாடலறா
முதுகாடரங்கா நடமாடவல்லாய்
விழவார்மறுகில் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௬

கடமாகளியா னையுரித்தவனே
கரிகாடிடமா வனல்வீசிநின்று
நடமாடவல்லாய் நரையேறுகந்தாய்
நல்லாய்நறுங்கொன் றைநயந்தவனே
படமாயிரமாம் பருத்துத்திப்பைங்கண்
பகுவாயெயிற்றோ டழலேயுமிழும்
விடவாரரவா வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௭

காடும்மலையுந் நாடும்மிடறிக்
கதிர்மாமணிசந் தனமும்மகிலும்
சேடன்னுறையும் மிடந்தான்விரும்பித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
பாடன்முழவுங் குழலும்மியம்பப்
பணைத்தோளியர்பா டலொடாடலறா
வேடர்விரும்பும் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௮

கொங்கார்மலர்க்கொன் றையந்தாரவனே
கொடுகொட்டியொர்வீ ணையுடையவனே
பொங்காடரவும் புனலுஞ்சடைமேற்
பொதியும்புனிதா புனஞ்சூழ்ந்தழகார்
துங்கார்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
வெங்கார்வயல்சூழ் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியே னையும்வேண்டுதியே. ௯

வஞ்சிநுண்ணிடையார் மயிற்சாயலன்னார்
வடிவேற்கணல்லார் பலர்வந்திறைஞ்சும்
வெஞ்சமாக்கூடல் விகிர்தாவடியே
னையும்வேண்டுதியே யென்றுதான்விரும்பி
வஞ்சியாதளிக்கும் வயனாவலர்கோன்
வனப்பகையப்பன் வன்றொண்டன்சொன்ன
செஞ்சொற்றமிழ்மாலைகள்பத்தும்வல்லார்
சிவலோகத்திருப் பதுதிண்ணமன்றே. ய

திருச்சிற்றம்பலம்

இது கொங்குநாட்டிலுள்ளது.
இறைவன் - விகிர்தேசுவரர்; இறைவி - விகிர்தேசுவரி.



## திருமுதுகுன்றம் பதிகம் சரு

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

நஞ்சியிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்
துஞ்சியிட்டாற் பின்னைச் செய்வதென்னடி கேள்சொலீர்
பஞ்சியிடப் புட்டில் கீறுமோபணி யீரருள்
முஞ்சியிடைச் சங்கமார்க் குஞ்சீர்முது குன்றரே. க

ஏரிக்கனகக் கமல மலரன்ன சேவடி
ஊரித்தனையுந் திரிந்தக் காலவை நோங்கொலோ
வாரிக்கட்சென்று வளைக்கப் பட்டுவ ருந்திப்போய்
மூரிக்களிறு முழக்க றுமுது குன்றரே. உ

தொண்டர்கள் பாடவிண் ணோர்களேத் தவுழிதர்வீர்
பண்டகந் தோறும் பலிக்குச்செல்வதும் பான்மையே
கண்டகர் வாளிகள் வில்லிகள்புறங் காக்குஞ்சீர்
மொண்டகை வேள்வி முழக்கறுமுது குன்றரே. ங

இளைப்பறி யீரிம்மை யேத்துவார்க்கம்மை செய்வதென்
விளைப்பறி யாதவெங் காலனையுயிர் வீட்டினீர்
அளைப்பிரி யாவர வல்குலாளொடு கங்கைசேர்
முளைப்பிறைச் சென்னிச் சடைமுடிமுது குன்றரே. ௪

ஆடி யசைந்தடி யாருநீரு மகந்தொறும்
பாடிப் படைத்த பொருளெலாமுமை யாளுக்கோ
மாட மதிலணி கோபுரமணி மண்டபம்
மூடி முகிறவழ் சோலைசூழ்முது குன்றரே. ௫

இழைவளர் நுண்ணிடை மங்கையொடிடு காட்டிடைக்
குழைவளர் காதுகள் மோதநின்றுகு னிப்பதே
மழைவள ரும்நெடுங் கோட்டிடைமத யானைகள்
முழைவள ராளி முழக்கறுமுது குன்றரே. ௬

சென்றி லிடைச்செடி நாய்குரைக்கச் செடிச்சிகள்
மன்றி லிடைப்பலி தேரப்போவது வாழ்க்கையே
குன்றி லிடைக்களி றாளிகொள்ளக் குறத்திகள்
முன்றி லிடைப்பிடி கன்றிடும்முது குன்றரே. ௭

அந்தி திரிந்தடி யாருநீரு மகந்தொறும்
சந்திக டோறும் பலிக்குச்செல்வது தக்கதே
மந்தி கடுவனுக் குண்பழநாடி மலைப்புறம்
முந்தி யடிதொழ நின்றசீர்முது குன்றரே. ௮

செட்டிநின் காதலி யூர்கடோறு மறஞ்செய
அட்டுமின் சில்பலிக் கென்றகங்கடை நிற்பதே
பட்டிவெள் ளேறுகந் தேறுவீர்பரி சென்கொலோ
முட்டி யடிதொழ நின்றசீர்முது குன்றரே. ௯

எத்திசை யுந்திரிந் தேற்றக்காற்பிற ரென்சொலார்
பத்தியி னாலிடு வாரிடைப்பலி கொள்மினோ
எத்திசை யுந்திரை யேறமோதிக் கரைகண்மேல்
முத்தி முத்தாறு வலஞ்செயும்முது குன்றரே. ௰

முத்தி முத்தாறு வலஞ்செயும்முது குன்றரைப்
பித்தனைப் பாடித் தொண்டனூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயினார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களு மேத்துவார்க்கிட ரில்லையே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன்-பழமலைநாதர்; இறைவி - பெரியநாயகியம்மை.



பொது முடிப்பதுகங்கை பதிகம் ௪௪

பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெ ழக்கணை நூறினார்
கடிப்பது மேறுமென் றஞ்சு வன்றிருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி யில்லை யோவெம் பிரானுக்கே. ௧

தூறன்றி யாடரங் கில்லை யோசுட லைப்பொடி
நீறன்றிச் சாந்தமற் றில்லை யோவிம வான்மகள்
கூறன்றிக் கூறுவ தில்லை யோகொல்லைச் சில்லைவெள்
ளேறன்றி யேறுவ தில்லை யோவெம் பிரானுக்கே. ௨

தட்டெனுந் தட்டெனுந் தொண்டர் காடடு மாற்றத்தை
ஒட்டெனு மொட்டெனு மாகி லத்துயிர் கோறலைச்
சிட்டன் றிரிபுரஞ் சுட்ட தேவர்க டேவனை
வெட்டெனப் பேசன்மின் றொண்டர் காளெம் பிரானையே. ௩

நரிதலை கவ்வநின் றோரி கூப்பிட நள்ளிருள்
எரிதலைப் பேய்புடை சூழ வாரிருட் காட்டிடைச்
சிரிதலைமாலை சடைக்க ணிந்தவெஞ் செல்வனைப்
பிரிதலைப் பேசன்மின் றொண்டர் காளெம் பிரானையே. ௪

வேயன தோளி மலைமகளை விரும்பிய
மாயமில் மாமலை நாட னாகிய மான்பனை
ஆயன சொல்லிநின் றார்க ளல்ல லறுக்கினும்
பேயனே பித்தனே யென்ப ராலெம் பிரானையே. ரு

இறைவனென் றெம்பெரு மானைவானவரேத் தப்போய்த்
துறையொன் றித்தூ மலரிட் டடியிணை போற்றுவார்
மறையன்றிப் பாடுவ தில்லை யோமல்கு வானிளம்
பிறையன்றிச் சூடுவ தில்லை யோவெம் பிரானுக்கே. சா

தாருந்தண் கொன்றையுங் கூவிளந்தனி மத்தமும்
ஆரு மளவறி யாத வாதியு மந்தமும்
ஊருமொன் றில்லை யுலகெ லாமுகப் பார்தொழப்
பேருமொ ராயிர மென்ப ராலெம் பிரானுக்கே. எ

அரியொடு பூமிசை யானு மாதியு மறிகிலார்
வரிதரு பாம்பொடு வன்னி திங்களு மத்தமும்
புரிதரு புன்சடை வைத்த வெம்புனி தற்கினி
எரியன்றி யங்கைக்கொன் றில்லை யோவெம் பிரானுக்கே. அ

கரிய மனச்சமண் காடி யாடுகை மூக்களால்
எரிய வசவுணுந் தன்மை யோவிம வான்மகள்
பெரிய மனந்தடு மாறவேண் டிப்பெம் மான்மதக்
கரியி னுரியல்ல தில்லை யோவெம் பிரானுக்கே. சூ

காய்சின மால்விடை மாணிக்கத் தெங்கறைக் கண்டத்
தீச னையூர னெட்டோ டிரண்டு விரும்பிய
ஆயின சீர்ப்பகை ஞானியப் பனடித் தொண்டன்றன்
ஏசின பேசுமின் றொண்டர் காளெம் பிரானையே. கo

திருச்சிற்றம்பலம்



## திருவாமாத்தூர் பதிகம் ௬௫

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

காண்டனன் காண்டனன் காரிகையாடன் கருத்தனாய்
ஆண்டனா னண்டனா னாமாத்தூரெம் மடிகட்காட்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்றுசொல்லுவன் கேண்மின்கள்
மீண்டனன் மீண்டனன் வேதவித்தல்லா தவர்கட்கே. ௧

பாடுவன் பாடுவன் பார்ப்பதிதன்னடி பற்றிநான்
தேடுவன் றேடுவன் திண்ணெனப்பற்றிச் செறிதர
ஆடுவ னாடுவ னாமாத்தூரெம் மடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றமதற்றென் குறிப்பொடே. ௨

காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழலாலன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தினாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவ னாய்ந்தவ னாமாத்தூரெம் மடிகளார்
ஏய்ந்தவ னேய்ந்தவ னெம்பிராட்டியைப் பாகமே. ௩

ஓர்ந்தனனோர்ந்தன னுள்ளத்துள்ளேநின்ற வொண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்றுதிருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென்றோட் டடமுலை
ஆர்ந்தன னார்ந்தன னாமாத்தூரைய னருளதே. ௪

வென்றவன் வென்றவன் வேள்வியில்விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக்கென்று தெருவிடை
நின்றவ னின்றவ னீதிநிறைந்தவர் தங்கள்பால்
அன்றவ னன்றவன் செய்யருளாமாத்தூ ரையனே. ௫

காண்டவன் காண்டவன் காண்டற்கரிய கடவுளாய்
நீண்டவ னீண்டவ னாரணனான்முக னேடவே
ஆண்டவ னாண்டவ னாமாத்தூரையு மெனையுமாட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற்புரிநூல் புரளவே. ௬

எண்ணவ னெண்ணவ னேழுலகத்துயிர் தங்கட்குக்
கண்ணவன் கண்ணவன் காண்டுமென்பாரவர் தங்கட்குப்
பெண்ணவன் பெண்ணவன் மேனியொர்பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவ னண்ணவ னுமாத்தூரெம் மடிகளே. ௭

பொன்னவன் பொன்னவன் பொன்னைத்தந்தென்னைப் போகவிடா
மின்னவன் மின்னவன் வேதத்தினுட்பொரு ளாகிய
அன்னவ னன்னவ னுமாத்தூரையனை யார்வத்தால்
என்னவ னென்னவ னென்மனத்தின்புற் றிருப்பனே. ௮

தேடுவன் றேடுவன் செம்மலர்ப்பாதங்க ளுடொறும்
நாடுவ னாடுவ னாபிக்குமேலேயொர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கைபிடித்து மகிழ்ந்துளே
ஆடுவ னாடுவ னுமாத்தூரெம் மடிகளே. ௯

உற்றன னுற்றவர் தம்மையொழிந்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச்சேவடிக் கேசெல்ல
அற்றன னற்றன னுமாத்தூர்மேயா னடியார்கட்கான்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும்பெயர்த்தும் பிறவாமைக்கே. ௰

ஐயனை யத்தனை யாளுடையாமாத்தூ ரண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொருளான விமலனை
மையனை மையணி கண்டனைவன்றொண்ட னூரன்சொல்
பொய்யொன் றுமின்றிப் புலம்புவார்பொற்கழல் சேர்வரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - அழகியநாதர், இறைவி - அழகியநாயகியம்மை.



## திருநாகைக்காரோணம் பதிகம் சுசுஅ

### பண் - கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறுழுடித் திரிவீர்
செத்தார்தம் மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. க

வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத் தீற்றி
விருத்திநா னுமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப்
பகட்டநா னொட்டுவனோ பலகாலு முழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கிற் றிகழுந்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. உ

பூண்பதோ ரிளவாமை பொருவிடையொன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேன் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்
காண்பினிய மணிமாட நிறைந்தநெடு வீதிக்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. ௩

விட்டதோர் சடைதாழ வீணைவிடங் காக
வீதிவிடை யேறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநட மாடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே
வட்டவார் குழன்மடவார் தம்மைமயல் செய்தன்
மாதவமோ மாதிமையோ வாட்டமெலாந் தீரக்
கட்டியெமக் கீவதுதா னெப்போது சொல்லீர்
கடனாகைக் காரோணமேவியிருந் தீரே.

மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றுஞ்
சுந்தரனே கந்தமுத லாடையா பரணம்
பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாண மொன்றுண்டே நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடனாகைக் காரோணமேவியிருந் தீரே. ரு

இலவவிதழ் வாயுமையோ டெருதேறிப் பூத
மிசைபாட விடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலவகம்புக் குழிதர்வீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறே
உலவுதிரைக் கடனஞ்சை யன்றமரர் வேண்ட
வுண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணு திடவே
கலவமயி லியலவர்க ணடமாடுஞ் செல்வக்
கடனாகைக் காரோணமேவியிருந் தீரே. சா

தூசுடைய வகலல்குற் றூமொழியா ளூட
றொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய விலங்கையர்கோன் வரைமெடுக்க வடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவா ள் கொடுத்தீர்

நேசமுடை யடியவர்கள் வருந்தாமை யருந்த
நிறைமறையோ ருறைவீழி மிழலைதனி னித்தல்
காசருளிச் செய்தீரின் றெனக்கருள வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. எ

மாற்றமேலொன் றுரையீர் வாளாநீ ரிருந்தீர்
வாழ்விப்ப னெனவாண்டீர் வழியடியே னுமக்கு
ஆற்றவேற் றிருவுடையீர் நல்கூர்ந்தீ ரல்லீ
ரணியாரூர் புகப்பெய்த வருநெதிய மதனில்
தோற்றமிகு முக்கூற்றி லொருகூறு வேண்டுந்
தாரீரே லொருபொழுது மடியெடுக்க லொட்டேன்
காற்றனைய கடும்பரிமா வேறுவது வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. அ

மண்ணுலகும் விண்ணுலகு முமதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன் கணபதியொன் றறியா
னெம்பெருமா னிதுதகவோ வியம்பியருள் செய்யீர்
திண்ணெனவென் னுடல்விருத்தி தாரீரே யாகிற்
றிருமேனி வருந்தவே வளைக்கின்றே னாளைக்
கண்ணறையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. கூ

மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநெதியந் தருவனென்று வல்லீரா யாண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீ ரடிகேள்
கிறியுமாற் படுவேனோ திருவாணை யுண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டுங்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே. ௰

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
　　பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த வுமக்கடியேன் குறைதீர்க்க வேண்டு
　　மொளிமுத்தம் பூணார மொண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
　　கடனாகைக் காரோணா மேவியிருந் தீரென்
றண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
　　வருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகா ளபவரே.　　　　கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-காயாரோகணேசுவரர்; இறைவி-நீலாயதாட்சியம்மை.

---

பதிக வரலாறு :

தில்லைப் பெருமான் அறிவிக்க அறிந்து சேரமான்பெருமானை யுடனாய்த் திருவாரூருக்கு எழுந்தருளும்போது நம்பியாரூரர் திருநாகைக் காரோணஞ் சென்று வழிபட்டுப் பாடிப் பொன்னும், மணியும், அவற்றாலான நகைகளும், ஆடைகளும், சந்தனமும், வெற்றி வாய்ந்த குதிரையும், பசிய பொன்னுறையோடு கூடிய உடைவாள் முதலிய பலவும் பெற்றுத் திரும்பி வந்திருந்தவர், அவரை எதிர் கொண்டு பரவையார் திருமாளிகைக்கு அழைத்துச் சென்று அளவளாவியிருந்தார்.



பொது　　　　　　ஊர்த்தொகை　　　　　　பதிகம் ௭௱

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

காட்டூர்க்கடலே கடம்பூர்மலையே கானப்பேரூராய்
கோட்டூர்க்கொழுந்தே யழுந்தூரரசே கொழுநற்கொல்லேறே
பாட்டூர்பலரும் பரவப்படுவாய் பனங்காட்டூரானே
மாட்டூரறவா மறவா துன்னைப் பாடப்பணியாயே.　　　　க

கொங்கிற்குறும்பிற் குரக்குத்தளியாய் குழகாகுற்றாலா
மங்குற்றிரிவாய் வானோர்தலைவா வாய்மூர்மணவாளா
சங்கக்குழையார் செவியாவழகா வவியாவனலேந்திக்
கங்குற்புறங்காட் டாடீயடியார் கவலைகளையாயே. ௨

நிறைக்காட்டானே நெஞ்சத்தானே நின்றியூரானே
மிறைக்காட்டானே புனல்சேர்சடையா யனல்சேர்கையானே
மறைக்காட்டானே திருமாந்துறையாய் மாகோணத்தானே
இறைக்காட்டாயே யெங்கட்குன்னை யெம்மான்றம்மானே. ௩

ஆரூரத்தா வையாற்றமுதே யளப்பூரம்மானே
காரூர்பொழில்கள் புடைசூழ்புறவிற் கருகாவூரானே
பேரூருறைவாய் பட்டிப்பெருமான் பிறவாநெறியானே
பாரூர்பலரும் பரவப்படுவாய் பாசூரம்மானே. ௪

மருகலுறைவாய் மாகாளத்தாய் மதியஞ்சடையானே
அருகற்பிணிநின் னடியார்மேல வகலவருளாயே
கருகற்குரலாய் வெண்ணிக்கரும்பே கானூர்க்கட்டியே
பருகப்பணியா யடியார்க்குன்னைப் பவளப்படியானே. ௫

தாங்கூர்பிணிநின் னடியார்மேல வகலவருளாயே
வேங்கூருறைவாய் விளமர்நகராய் விடையார்கொடியானே
நாங்கூருறைவாய் தேங்கூர்நகராய் நல்லூர்நம்பானே
பாங்கூர்பலிதேர் பரனேபரமா பழனப்பதியானே. ௬

தேனைக்காவல் கொண்டுவிண்ட கொன்றைச்செழுந்தாராய்
வானைக்காவல் கொண்டுநின்றா ரறியாநெறியானே
ஆனைக்காவி லரனேபரனே யண்ணாமலையானே
ஊனைக்காவல் கைவிட்டுன்னை யுகப்பாருணர்வாரே. ௭

துருத்திச்சுடரே நெய்த்தானத்தாய் சொல்லாய்கல்லாலா
பருத்திநியமத் துறைவாய்வெயிலாய்ப் பலவாய்க்காற்றானாய்
திருத்தித்திருத்தி வந்தென்சிந்தை யிடங்கொள்கயிலாயா
அருத்தித்துன்னை யடைந்தார்வினைக ளகலவருளாயே. ௮

புலியூர்ச்சிற்றம் பலத்தாய்புகலூர்ப் போதாமூதூரா
பொலிசேர்புரமூன் றெரியச்செற்ற புரிபுன்சடையானே
வலிசேரரக்கன் றடக்கையைஞ்ஞான் கடர்த்தமதிசூடீ
கலிசேர்புறவிற் கடவூராளீ காணவருளாயே. ௯

கைம்மாவுரிவை யம்மான்காக்கும் பலவூர்கருத்துன்னி
மைம்மாந்தடங்கண் மதுரமன்ன மொழியாள்மடச்சிங்கடி
தம்மானூரன் சடையன்சிறுவ னடியன்றமிழ்மாலை
செம்மாந்திருந்து திருவாய்திறப்பார் சிவலோகத்தாரே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருப்பாண்டிக்கொடுமுடி பதிகம் ௬௯

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மற்றுப்பற்றெனக் கின்றிநின்திருப்
பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற
வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சிவாயவே. ௧

இட்டனும்மடி யேத்துவாரிகழ்ந்
திட்டநாண்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலாற்கரு
தேன்கிளர்புனற் காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழு
தேத்துபாண்டிக் கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௨

ஓவுநாளுணர் வழியுநாளுயிர்
போகுநாளுயர் பாடைமேல்
காவுநாளிவை யென்றலாற்கரு
தேன்கிளர்புனற் காவிரிப்
பாவுதண்புனல் வந்திழிபரஞ்
சோதிபாண்டிக் கொடுமுடி
நாவலாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

எல்லையில்புக ழெம்பிரானெந்தை
தம்பிரானென்பொன் மாமணி
கல்லையுந்தி வளம்பொழிந்திழி
காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே.

அஞ்சினார்க்கர ணாதியென்றடி
யேனுநான்மிக வஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கரு
ணல்கினாய்க்கழி கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
நஞ்சணிகண்ட நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௬

ஏடுவானிளந் திங்கள்சூடினை
யென்பின்கொல்புலித் தோலின்மேல்
ஆடுபாம்ப தரைக்கசைத்த
வழகனேயந்தண் காவிரிப்
பாடுதண்புனல் வந்திழிபரஞ்
சோதிபாண்டிக் கொடுமுடிச்
சேடனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௭

விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந்
தேன்வினைகளும் விண்டனன்
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற
நின்றகாவிரிக் கோட்டிடைக்
குரும்பைமென்முலைக் கோதைமார்குடைந்
தாடுபாண்டிக் கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௭

செம்பொனேர்சடை யாய்திரிபுரந்
தீயெழச்சிலை கோலினாய்
வம்புலாங்குழ லாளைப்பாக
மமர்ந்துகாவிரிக் கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில் கூவமாமயி
லாடுபாண்டிக் கொடுமுடி
நம்பனேயுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௮

சாரணன்றந்தை யெம்பிரானெந்தை
தம்பிரானென்பொன் மாமணியென்று
பேரெணாயிர கோடிதேவர்
பிதற்றிநின்று பிரிகிலார்
நாரணன்பிர மன்றொழுங்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடிக்
காரணாவுனை நான்மறக்கினுஞ்
சொல்லுநாநமச்சி வாயவே. ௯

கோணியபிறை சூடியைக்கறை
யூரிற்பாண்டிக் கொடுமுடி
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப்
பித்தனைப்பிறப் பில்லியைப்

பாணுலாவரி வண்டறைகொன்றைத்
தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை
சொல்லுவார்க்கில்லைத் துன்பமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது கொங்குநாட்டிலுள்ளது.
இறைவன்-கொடுமுடிநாதர்; இறைவி-பண்மொழியம்மை.

பதிக வரலாறு :

திருவீங்கோய் முதலிய திருப்பதிகளை வணங்கிக் கொங்கு நாட்டை யடைந்த வன்றொண்டப் பெருமான், கறையூர்க் கொடுமுடிக்கோயிலைக் குறுகிப் புனிதர் பொன்மேனியை வணங்கி இவர்தம்மை மறக்க வொண்ணுதென்னுங் குறிப்பால் 'அண்ணலார் அடிகள் மறக்கினும் நாம வஞ்செழுத்தறிய வெப்பொழுதும் எண்ணிய நாவே இன்சுவை பெருக இடையறாதியம்பும்' என்னு முணர்வினை யுடையார் இந் நமச்சி வாயத் திருப்பதிகத்தைப் பிணிப்புற்ற பேரன்பிற் பாடியருளினார்.



## திருமுருகன்பூண்டி பதிகம் ௪௯

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர்
விரவலாமை சொல்லித்
திடுகுமொட்டெனக் குத்திக்கூறைகொண்
டாறலைக் குமிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடு
மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௧

வில்லைக்காட்டி வெருட்டிவேடுவர்
விரவலாமை சொல்லிக்
கல்லினுலெறிந் திட்டுமோதியுங்
கூறைகொள் ளுமிடம்
முல்லைத்தாது மணங்கமழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
எல்லைகாப்பதொன் றில்லையாகிநீ
ரெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. உ

பசுக்களேகொன்று தின்றுபாவிகள்
பாவமொன் றறியார்
உயிர்க்கொலைபல நேர்ந்துநாடொறுங்
கூறைகொள் ளுமிடம்
முசுக்கள்போற்பல வேடர்வாழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
இசுக்கழியப் பயிக்கங்கொண்டுநீ
ரெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௩

பிறற்கூறையு டுத்தொர்பத்திரங்
கட்டிவெட் டனராய்ச்
சூறைப்பங்கிய ராகிநாடொறுங்
கூறைகொள் ளுமிடம்
மோறைவேடுவர் கூடிவாழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
ஏறுகாலிற்ற தில்லையாய்விடி
லெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௪

தயங்குதோலை யுடுத்தசங்கரா
சாமவேத மோதி
மயங்கியூரிடு பிச்சைகொண்டுணு
மார்க்கமொன் றறியீர்
முயங்குபூண்முலை மங்கையாளொடு
முருகன்பூண்டிமா நகர்வாய்
இயங்கவும்மிடுக் குடையராய்விடி
லெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௫

விட்டிசைப்பன கொக்கரைகொடு
கொட்டிதத் தளகம்
கொட்டிப்பாடுமித் துந்துமியொடு
குடமுழாநீர் மகிழ்வீர்
மொட்டலர்ந்து மணங்கமழ்
முருகன்பூண்டிமா நகர்வாய்
இட்டபிச்சைகொண் டுண்பதாகினீ
ரெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௬

வேதமோதிவெண் ணீறுபூசிவெண்
கோவணந்தற் றயலே
ஓதமேவிய வொற்றியூரையு
முத்திரநீர் மகிழ்வீர்
மோதிவேடுவர் கூறைகொள்ளு
முருகன்பூண்டிமா நகர்வாய்
ஏதுகாரண மேதுகாவல்கொண்
டெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௭

படவரவு நுண்ணேரிடைப்
பணைத்தோள்வரி நெடுங்கண்
மடவரல்லுமை நங்கைதன்னையொர்
பாகம்வைத் துகந்தீர்
முடவரல்லீ ரிடரிலீர்
முருகன்பூண்டிமா நகர்வாய்
இடவமேறியும் போவதாகினீ
ரெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௮

சாந்தமாகவெண் ணீறுபூசிவெண்
பற்றலை கலனு
வேய்ந்தவெண்பிறைக் கண்ணிதன்னையொர்
பாகம்வைத் துகந்தீர்
மோந்தையோடு முழக்கறு
முருகன்பூண்டிமா நகர்வாய்
ஏந்துபூண்முலை மங்கைதன்னொடு
மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே. ௯

முந்திவானவர் தாந்தொழு
முருகன்பூண்டிமா நகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னையொர்
பாகம்வைத் தவனைச்
சிந்தையிற்சிவ தொண்டனூர
னுரைத்தனபத் துங்கொண்
டெந்தம்மடிகளை யேத்துவாரிட
ரொன்றுந்தா மிலரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது கொங்குநாட்டிலுள்ளது.
இறைவன்-முருகாவுடையார்; இறைவி-ஆவுடையநாயகி.

---

**பதிக வரலாறு :**

மலைநாட்டிலே திருவஞ்சைக்களத்திலே சேரர் பெருமானோடு அளவளாவியிருந்த வன்றொண்டப்பெருமான் திருவாரூரை மிகவும் நினைந்த சிந்தையராய்த் திருத்தொண்டரோடு வழிக்கொள்ளும்போது சேரர்பிரான் முன்வந்து பிரிவாற்றாமையான் மிகவருந்த நாயனார் அவரை அன்றினார் முனைமுருக்கி யரசாண்டுகொண் டிருக்கும்படி சொல்லியருளலும் அதுகேட்டு வானவரம்பனார் தமது மந்திரிகளை யழைத்து நமது நகரில் இற்றைக்கு முன் புகுந்த பல வகையான நற் பெரும் பண்டாரமெல்லாம் பற்பல ஆள்களின் மேல் ஏற்றிவரும்படி பணித்தார். அவரும் பலவகைத் திரவியங்கள் உயர்ந்த பொன்கள் மணி கள் மணியிழைகள் ஆடைகள் பலவகையான விரைப்பண்டங்கள் மற்றும் பிறவற்றையும் பொதியாள்களின் மேல் ஏற்றி எங்கும் நிறையக் கொண்டுவர, அவரைச் சேரர் பெருமான் பரிசனங்களுக்கு முன்னே செல்ல ஏவி நம்பியாரூரரைப்பணிந்து திரும்பினார். ஆரூரரும் மலைநாடு கடந்து கற்சுரங்கள் காட்டாறுகள் பெருங்காடுகள் பல கடந்து, திரு முருகன் பூண்டிக்கருகு செல்லும் பொழுது இறைவர் அவர்க்குத் தாமே பொன்கொடுப்பதல்லாமல் வேறொருவர் கொடுப்பக் கொள்வது கூடாதென்றோ மற்றென்னோ யாமறியோம்; வென்றிமிக்க பூதங்களை வேடர் வடிவாய்ச் சென்று பொதியாள்களை மறித்துப் பறிக்கும்படி அருளலும் அவைகளும் அவ்வாறே சென்று சினந்தெழுந்து வில்வாங்கி நாணிலே அம்புகளைத் தொடுத்து அச்சுறுத்திப் பறித்து ஆரூரர்பாற் செல்லாது நீங்கின. நம்பியாரூரரும் திருமுருகன்பூண்டியை யடைந்து

கோயிலைச்சேர்ந்து வலம் வந்து பணிந்து திருமுன்பு போய்க் கைகூப்பி வணங்கி எழுந்து 'வெருவுறவேடுவர் பறிக்கும் வெஞ்சுரத்தில் எத்துக் கிங்கு அருகிருந்தீர்' என்று வைத்துக் 'கொடுகு வெஞ்சிலை' யென்னுமிப் பதிகம் பாடியருளினார். பாடிப் பரவியபின் இறைவர் பறித்த வப் பொன்னையெல்லாம் கோபுரவாயிலின் மருங்கு குவித்திடலும் நாயனார் பணிந்து அவைகளையப்படியே கொண்டு இறைவனை வணங்கித் திருவா ரூருக் கெழுந்தருளினார்.



## திருப்புனவாயில்

பதிகம் ருய

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

சித்த நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையி னீருரி போர்த்தம ணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே. க

கருதி நீமன மென்னொடு சூளறும் வைகலும்
எருது மேற்கொளு மெம்பெரு மாற்கிட மாவது
மருத வானவர் வைகும் மிடம்மற வேடுவர்
பொருது சாத்தொடு பூசல றாப்புன வாயிலே. உ

தொக்காய் மனமென்னொடு சூளறும் வைகலும்
நக்கா னமையா ளுடையா னவிலும்மிடம்
அக்கோ டரவார்த் தபிரானடிக் கன்பராய்ப்
புக்கா ரவர்போற் றொழி யாப்புன வாயிலே. ங

வற்கென் றிருத்திகண் டாய்மன மென்னொடு சூளறும் வைகலும்
பொற்குன் றஞ்சேர்ந்த தொர்காக்கை பொன்னா மதுவேபுகல்
கற்குன் றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்
புற்கென் று தோன்றிடு மெம்பெரு மான்புன வாயிலே. ச

நில்லாய் மன மென்னொடு சூளறும் வைகலும்
நல்லா னமையா னுடையா னவிலும்மிடம்
வில்லாய்க் கணைவேட் டுவராட் டவெருண் டுபோய்ப்
புல்வாய்க் கணம் புக்கொளிக் கும்புன வாயிலே. ௫

மறவ னீமன மென்னொடு சூளறும் வைகலும்
உறவு மூழியு மாயபெம் மாற்கிட மாவது
பிறவு கள்ளிபி னீள்கவட் டேறித்தன் பேடையைப்
புறவங் கூப்பிடப் பொன்புனஞ் சூழ்புன வாயிலே. ௬

ஏசற்று நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
பாசற் றவர்பாடி நின்றாடும் பழம்பதி
தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்
பூசற் றுடி பூசல றாப்புன வாயிலே. ௭

கொள்ளி வாயின கூரெயிற் றேனங் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை
கள்ளி வற்றிப் புற்றீந்து வெங்கானங் கழிக்கவே
புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே. ௮

எற்றே நினை யென்னொடு சூளறும் வைகலும்
மற்றேதும் வேண்டா வல்வினை யாயின மாய்ந்தறக்
கற்றா றுகார்க் காட்டிடை மேய்ந்தகார்க் கோழிபோய்ப்
புற்றேறிக் கூகூ வெனவழைக் கும்புன வாயிலே. ௯

பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியா ரடியன் னாவல ஆரூ ருரைத்தன
மடியாது கற்றிவை யேத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகிப் பாடிநின் றாடவல் லார்க்கில்லை குற்றமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன்-பழம்பதிநாயகர்; இறைவி-பரங்கருணைநாயகி.

## திருவாரூர் பதிகம் ருக

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பத்திமையும் மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாட் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. க

ஐவணமாம் பகழியுடை யடன்மதனன் பொடியாகச்
செவ்வணமாந் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி
மையணவு கண்டத்து வளர்சடையெம் மாரமுதை
எவ்வணநான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. உ

சங்கலக்குந் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் டீர்த்துவிட முண்டுகந்த வம்மானை
இங்கலக்கு முடற்பிறந்த வறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ந

இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வே னயராமே
அங்ஙனம்வந் தெனையாண்ட வருமருந்தெ னாரமுதை
வெங்கனன்மா மேனியனை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ச

செப்பரிய வயனெடுமால் சிந்தித்துந் தெரிவரிய
அப்பெரிய திருவினையே யறியாதே யருவினையேன்
ஒப்பரிய குணத்தானை யிணையிலியை யணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. ரு

வன்னாக நாண்வரைவில் லங்கிகணை யரிபகழி
தன்னாக முறவாங்கிப் புரமெரித்த தன்மையனை
முன்னாக நினையாத மூர்க்கனே னாக்கைசுமந்
தென்னாகப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. சு



ப. கஉந.　　மகிழடியில் சபதஞ்செய்து சங்கிலியாரை மணந்தது.

வன்சயமா யடியான்மேல் வருங்கூற்றி னுரங்கிழிய
முன்சயமார் பாதத்தான் முனிந்துகந்த மூர்த்திதனை
மின்செயும்வார் சடையானை விடையானை யடைவின்றி
என்செயநான் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே. எ

முன்னெறிவா னவர்கூடித் தொழுதேத்து முழுமுதலை
அந்நெறியை யமரர்தொழும் நாயகனை யடியார்கள்
செந்நெறியைத் தேவர்குலக் கொழுந்தைமறந் திங்ஙனநான்
என்னறிவான் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே. அ

கற்றுளவான் கனியாய கண்ணுதலைக் கருத்தார
உற்றுளனா மொருவனைமுன் னிருவர்கினைந் தினிதேத்தப்
பெற்றுளனும் பெருமையனைப் பெரிதடியேன் கையகன்றிட்
டெற்றுளனாய்ப் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே. கூ

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே. ய

வங்கமலி கடனஞ்சை வானவர்க டாமுய்ய
நுங்கியமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே. கக

பேரூரு மதகரியி னுரியானைப் பெரியவர்தம்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
ஆரூர னடித்தொண்ட னடியன்சொல் லகலிடத்தில்
ஊரூர னிவைவல்லா ருலகவர்க்கு மேலாரே. கஉ

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

சுந்தரமூர்த்தி நாயனார் திருவொற்றியூரிற் சங்கிலியாரை மணந்து தங்கியிருக்கும் நாள்களில் தமிழ் மலையிற் பிறந்து சந்தனமண மளவித்

தண்ணிய சாரலில் வளர்ந்து தொழுவிய தென்றலணையத் திருவாரூர் வீதிவிடங்கப் பெருமான் கொண்டருளுகின்ற வேனில் விழாவினை (வசந்தோற்சவம்) மிகவும் நினைந்தருளினார்; நினைந்தவர் வீதி விடங்கப் பெருமான் கொண்டருளும் ஒண்ணுதலார் புடைபரந்த திருவோலக்கத்திடைப் பண்ணிறைந்த மொழியினை யுடைய பாவையாருடைய ஆடலையும் பாடலையும் நேரே தமக்கு முன்னே கண்ணாரக் கண்டவராய்ப் பூங்கோயிலமர்ந்த தியாகேசப் பெருமானைத் தாம் முன்பு பணிந்து, தோழராகிய தன்மையை இங்கு நான் மறந்து விட்டேனே என்று ஏசறவான் மிக அழிந்து இத்திருப்பதிகம் பாடி இரங்கினார்.



## திருவாலங்காடு

பதிகம் ௫௨

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

முத்தாமுத்தி தரவல்ல முகிழ்மென்முலையா ளுமைபங்கா
சித்தாசித்தித் திறங்காட்டுஞ் சிவனேதேவர் சிங்கமே
பத்தாபத்தர் பலர்போற்றும் பரமாபழைய னூர்மேய
அத்தாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௧

பொய்யேசெய்து புறம்புறமே திரிவேன்றன்னைப் போகாமே
மெய்யேவந்திங் கெனையாண்ட மெய்யாமெய்யர் மெய்ப்பொருளே
பையாடரவ மரைக்கசைத்த பரமாபழைய னூர்மேய
ஐயாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௨

தூண்டாவிளக்கி னற்சோதீ தொழுவார்தங்க டுயர்தீர்ப்பாய்
பூண்டாயெலும்பைப் புரமூன்றும் பொடியாச்செற்ற புண்ணியனே
பாண்டாழ்வினைக ளவைதீர்க்கும் பரமாபழைய னூர்மேய
ஆண்டாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௩

மறிநேரொண்கண் மடநல்லார் வலையிற்பட்டு மதிமயங்கி
அறிவேயழிந்தே னையாநான் மையார்கண்ட முடையானே
பறியாவினைக ளவைதீர்க்கும் பரமாபழைய னூர்மேய
அறிவேயாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௪

வேலங்காடு தடங்கண்ணார் வலைப்பட்டுன் னெறிமறந்து
மாலங்காடி மறந்தொழிந்தேன் மணியேமுத்தே மரகதமே
பாலங்காடீ றெய்யாடீ படர்புன்சடையாய் பழையனூர்
ஆலங்காடா வுன்னுடைய வடியார்க்கடியே னாவேனே. ௫

எண்ணார்தங்க ளெயிலெய்த வெந்தாயெந்தை பெருமானே
கண்ணாயுலகங் காக்கின்ற கருத்தாதிருத்த லாகாதாய்
பண்ணாரிசைக ளதுகொண்டு பலருமேத்தும் பழையனூர்
அண்ணாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௬

வண்டார்குழலி யுமைநங்கை பங்காகங்கை மணவாளா
விண்டார்புரங்க ளெரிசெய்த விடையாய்வேத நெறியானே
பண்டாழ்வினைகள் பலதீர்க்கும் பரமாபழைய னூர்மேய
அண்டாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௭

பேழ்வாயரவி னணையானும் பெரியமலர்மே லுறைவானும்
தாழாதுன்றன் சரண்பணியத் தழலாய்நின்ற தத்துவனே
பாழாம்வினைக ளவைதீர்க்கும் பரமாபழைய னூர்தன்னை
ஆள்வாயாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௮

எம்மானெந்தை மூத்தப்ப னேழேழ்படிகா லெமையாண்ட
பெம்மானீமப் புறங்காட்டிற் பேயோடாடல் புரிவானே
பன்மாமலர்க ளவைகொண்டு பலருமேத்தும் பழையனூர்
அம்மாவாலங் காடாவுன் னடியார்க்கடியே னாவேனே. ௯

பத்தர்சித்தர் பலரேத்தும் பரமன்பழைய னூர்மேய
அத்தனாலங் காடன்ற னடிமைத்திறமே யன்பாகிச்
சித்தர்சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவனூர னொண்டமிழ்கள்
பத்தும்பாடி யாடுவார் பரமனடியே பணிவாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - ஊர்த்ததாண்டவர்; இறைவி - வண்டார்குழலியம்மை.

பதிக வரலாறு :

திருவெண்பாக்கத்தினின்றும் திருவாலங்காட்டை யடையும் தம்பிரான் றோழர் பழையனூருக் கருகே வந்து, திருவாலங்காடு காரைக்காலம்மையார் தலையாலே நடந்து திருப்பணி செய்ததாமாகலின் வெளியே நின்று கோயிலை நோக்கி இத்திருப்பதிகம் பாடியருளினார்.



## திருக்கடவூர்மயானம் பதிகம் ருங

பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மருவார்கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோல
வருவார்விடைமேன் மாதோடு மகிழ்ந்துபூதப் படைசூழத்
திருமால்பிரம னிந்திரற்குந் தேவர்நாகர் தானவர்க்கும்
பெருமான்கடவூர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. க

விண்ணோர்தலைவர் வெண்புரிநூன் மார்பர்வேத கீதத்தர்
கண்ணார்நுதலர் நகுதலையர் காலகாலர் கடவூரர்
எண்ணார்புரமூன் றெரிசெய்த விறைவருமையோ ரொருபாகம்
பெண்ணாணவர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. உ

காயும்புலியி னதளுடையர் கண்டரெண்டோட் கடவூரர்
தாயுந்தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனார்
பாயும்விடையொன் றதுவேறிப் பலிதேர்ந்துண்ணும் பரமேட்டி
பேய்கள்வாழு மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௩

நறைசேர்மலரைங் கணையானை நயனத்தீயாற் பொடிசெய்த
இறையாராவ ரெல்லார்க்கு மில்லையென்னா தருள்செய்வார்
பறையார்முழவம் பாட்டோடு பயிலுந்தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார்சடையார் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ச

கொத்தார்கொன்றை மதிசூடிக் கோணாகங்கள் பூணாக
மத்தயானை யுரிபோர்த்து மருப்புமாமைத் தாலியார்
பத்திசெய்து பாரிடங்கள் பாடியாடப் பலிகொள்ளும்
பித்தர்கடவூர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௫

துணிவார்கீளுங் கோவணமுந் துதைந்துசுடலைப் பொடியணிந்து
பணிமேலிட்ட பாசுபதர் பஞ்சவடிமார் பினர்கடவூர்த்
திணிவார்குழையார் புரமூன்றுந் தீவாய்ப்படுத்த சேவகனார்
பிணிவார்சடையார் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௬

காரார்கடலி னஞ்சுண்ட கண்டர்கடவூ ருறைவாணர்
தேராரரக்கன் போய்வீழ்ந்து சிதையவிரலா லூன்றினார்
ஊர்தானவ துலகேழு முடையார்க்கொற்றி யூராரூர்
பேராயிரவர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௭

வாடாமுலையா டன்னோடும் மகிழ்ந்துகானில் வேடுவனாய்க்
கோடார்கேழற் பின்சென்று குறுகிவிசயன் றவமகிழ்ந்து
நாடாவண்ணஞ் செருச்செய்து வாவநாழி நிலையருள்செய்
பீடார்சடையார் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௮

வேழமுரிப்பர் மழுவாளர் வேள்வியழிப்பர் சிரமறுப்பர்
ஆழியளிப்ப ரரிதனக்கு வானஞ்சுகப்ப ரறமுரைப்பர்
ஏழைத்தலைவர் கடவூரி லிறைவர்சிறுமான் மறிக்கையர்
பேழைச்சடையர் மயானத்துப் பெரியபெருமா னடிகளே. ௯

மாடமல்கு கடவூரின் மறையோரேத்து மயானத்துப்
பீடைதீர வடியாருக் கருளும்பெருமா னடிகள்சீர்
நாடிநாவ லாரூர னம்பிசொன்ன நற்றமிழ்கள்
பாடுமடியார் கேட்பார்மேற் பாவமான பறையுமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-பிரமபுரீசுவரர்; இறைவி-மலர்க்குழல்மின்னம்மை.

## திருவொற்றியூர் பதிகம் ருச

### பண் - தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தே
னதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லான்
மற்று நானறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க வென்கணுக் கொருமருந் துரையா
யொற்றி யூரெனு மூருறை வானே. க

கட்ட னேன்பிறந் தேனுனக் காளாய்க்
காதற் சங்கிலி காரண மாக
எட்டி னாற்றிக ழுந்திரு மூர்த்தி
யென்செய் வானடி யேனெடுத் துரைக்கேன்
பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன்
பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை
ஒட்டி னேனெனை நீசெய்வ தெல்லா
மொற்றி யூரெனு மூருறை வானே. உ

கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே
கட்டி யேபலர்க் குங்களை கண்ணே
அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே
யத்தா வென்னிட ரார்க்கெடுத் துரைக்கேன்
சங்கு மிப்பியுஞ் சலஞ்சல முரல
வயிர முத்தொடு பொன்மணி வரன்றி
ஒங்கு மாகட லோதம்வந் துலவு
மொற்றி யூரெனு மூருறை வானே. ங

ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்று
லியாவ ராகிலெ னன்புடை யார்கள்
தோன்ற நின்றருள் செய்தளித் திட்டாற்
சொல்லு வாரையல் லாதன சொல்லாய்
மூன்று கண்ணுடை யாயடி யேன்கண்
கொள்வ தேகணக் குவழக் காகில்
ஊன்று கோலெனக் காவதொன் றருளா
யொற்றி யூரெனு மூருறை வானே. ௪

வழித்த லைப்படு வான்முயல் கின்றே
னுன்னைப் போலென்னைப் பாவிக்க மாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன் சுழல்கின்றதென் னுள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல
வொருவன் கோல்பற்றிக் கறகற விழுக்கை
ஒழித்து நீயரு ளாயின செய்யா
யொற்றி யூரெனு மூருறை வானே. ௫

மானை நோக்கியர் கண்வலைப் பட்டு
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித்
தேனை யாடிய கொன்றையி னாயுன்
சில முங்குண முஞ்சிந்தி யாதே
நானு மித்தனை வேண்டுவ தடியே
னுயிரொ டுந்நர கத்தழுந் தாமை
ஊன முள்ளன தீர்த்தருள் செய்யா
யொற்றி யூரெனு மூருறை வானே. ௬

மற்றுத் தேவரை நினைந்துனை மறவே
னெஞ்சி னுரொடு வாழவு மாட்டேன்
பெற்றி ருந்து பெருதொழி கின்ற
பேதை யேன்பிழைத் திட்டதை யறியேன்
முற்று நீயெனை முனிந்திட வடியேன்
கடவ தென்னுனை நான்மற வேனேல்
உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளா
யொற்றி யூரெனு மூருறை வானே. ௭

கூடி னாய்மலை மங்கையை நினையாய்
கங்கை யாயிர முகமுடை யாளைச்
சூடி னாயென்று சொல்லிய புக்காற்
றொழும்பனே னுக்குஞ் சொல்லலு மாமே
வாடி நீயிருந் தென்செய்தி மனனே
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி
ஊடி னாலினி யாவதொன் றுண்டே
யொற்றி யூரெனு மூருறை வானே. ௮

மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுக ளானொன்று சொன்னா
லழையேற் போகுரு டாவெனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கட லோதம்வந் துலவு
மொற்றி யூரெனு மூருறை வானே. ௯

ஓதம் வந்துல வுங்கரை தன்மே
லொற்றி யூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்மறை யங்க மோதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல
சிறுவன் வன்றொண்ட னூர னுரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரகதி திண்ண நண்ணுவர் தாமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - படம்பக்கநாதர்; மாணிக்கத்தியாகர்;
இறைவி - வடிவுடையம்மை.

---

**பதிக வரலாறு :**

திருவாரூர் வேனிற் றிருநாளை நினைந்து 'பத்திமையு மடிமையையும்' என்னுந் திருப்பதிகம் பாடி மிக இரங்கிய திருநாவலூரர் பின்னொரு

நாள் திருவாரூரை மிக நினைந்து படம்பக்கநாதருடைய திருக்கோயி லுள்ளே சென்று பணிந்து திருவொற்றியூரை நீங்க அடியிட்ட அள வில் சங்கிலியாருக்கு அவர் செய்து கொடுத்த ஆணையால் மேலடி யெடுத்து வைக்க வழிதோன்றாது கண்கள் மறைந்து மூர்ச்சித்துப் பிறகு செய்வதிது வென்றறியாது நெட்டுயிர்த்துச் சூளுறவு மறுத்த தனால் நேர்ந்ததிதுவென நினைந்து இத்துயர் நீங்க இறைவனைப் பாடு வேனென்று எண்ணி இழுக்குநீக்கிடவும் எய்தும் வெந்துயர்க் கையற வினுக்கும் பழிக்கும் வெள்கியும் நல்ல பண்ணிசை பொருந்திய இத் திருப்பதிகம் பாடியருளினர்.



## திருப்புன்கூர் — பதிகம் ௯௬

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்ற னாருயி ரதனை
வவ்வி னாய்க்குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்றமர் நலியி
லிவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தையால் வந்துன் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௧

வையக முற்று மாமழை மறந்து
வயலி னீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௨

ஏத நன்னில மீரறு வேலி
யேயர்கோ னுற்ற விரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்த சண்டிக்குன்
சடைமி சைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௩

நற்றமிழ் வல்ல ஞானசம் பந்த
னாவினுக் கரைய னாளைப்போ வானும்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூ ருளானே. ௪

கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோளர வுசுற்றிக் கடைந்தெ ழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக விரிய
வமரர் கட்கருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடந்தனை யுண்டு
கண்டத் தேவைத்த பித்தநீ செய்த
சீலங் கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௫

இயக்கர் கின்னரர் யமனொடு வருண
ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானர நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
யர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௬

போர்த்த நீள்செவி யாளரந் தணர்க்குப்
பொழில்கொ ளானிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத்
தருளி னாய்பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்த னேநின்றன் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௭

மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரி
லிருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
யொருவ நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த
தேவ தேவநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௮

அறிவி னால்மிக்க வறுவகைச் சமய
மவ்வவர்க் கங்கே யாரருள் புரிந்து
எறியு மாகட லிலங்கையர் கோனைத்
துலங்க மால்வரைக் கீழடர்த் திட்டுக்
குறிகொள் பாடலி னின்னிசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த
செறிவு கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே. ௯

கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானை

உம்ப ராளியை யுமையவள் கோனை
ஊரன் வன்றொண்ட னுள்ளத் தாலுகந்
தன்பி னாற்சொன்ன வருந்தமி ழைந்தோ
டைந்தும் வல்லவ ரருவினை யிலரே. ம

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.
இறைவன் - சிவலோகநாதர்; இறைவி - சொக்கநாயகியம்மை.

---

**பதிக வரலாறு :**

திருப்பெருமங்கலத்து எழுந்தருளியிருந்த ஏயர்கோன் கலிக்காம நாயனார் திருநாவலூரர் இறைவனைப் பரவை நாய்ச்சியாரிடத்துத் தூதனுப்பிய செய்தியைக் கேட்டு வெம்பி வியர்து வெருவி நாயகனை அடியான் ஏவுங் காரியம் நன்று; பொருந்துமென் றிதனைச் செய்தவன் வன்றொண்டனும், இஃதென்ன தீவினை; இதனைச் செவியிற் கேட்கலா யிற்று; கேட்டும் உயிர் நீங்காது வைத்திருக்கின்றேன்; இறைவன் ஒரு முறைக் கிருமுறை திருவடித்தாமரைகள் நோவத் தெருவில் உழல் வராம், அடிமையுரிமையால்; இறைவன் செல்வதாயினும் இசைந்து அவரையேவ உள்ளம் கனியாதவனை நான் காணும் நாள் எந்நாளென் றும், காணில் என்னாவதென்றும் கூறும் சினம் பற்றிய நெஞ்சுடை யவராயிருந்தார். இதனையறிந்த நம்பியாரூரர் ஏயர்கோன் கலிக்காமரது பேற்றினை வியந்து தமது பிழையையும் நினைத்து அதற்கொரு தீர்வு விரும்புபவர் இறைவனிடத்து விண்ணப்பித்து நாடொறும் பணிந்து போற்றி வந்தார். இது நிற்க, இறைவரும் இருவரையும் ஒற்றுமையுற் றுப் பொருந்தும் நிலைமையை யுன்னிக் கலிக்காமருக்குச் சூலைநோயை யருளித் தம்மை நினைந்து வருந்துமவருக்கு இது வன்றொண்டன் றீர்க்கி லன்றித் தீராது என்றும் அருளிச்செய்து, நம்பியாரூரருக்கு இதனைத் தெரிவித்தருளினார். இதனைத் தெரிந்த நம்பியாரூரரும் விரைந்து சென்று தமது வருகையை முன்னே தெரிவித்தார். கலிக்காமர் அவ் வுரை கேட்ட அளவிலேயே அவன் வந்து தீர்ப்பதினும் உயிர் நீப்பதே நன்றென்று உடைவாளாற் குத்திக்கொண்டுயிர் துறந்தாராக, அவர் மனைவியாரும் உடனிறக்கத் துணிபவர் நாயனாரது வருகையைக் கேட் டுக் கணவர் செய்கையை மறைத்து ஒருவரையும் அழாதிருக்கச் செய்து உரிமையுடைய சிலரை நகரை அழகு செய்து நாயனாரை எதிர்கொள் ளும்படி ஏவினார். எதிர்கொண் டழைக்கப்பட்டு மனையிற் புகுந்து



ப. ௧௩௪. ஏயர்கோன் கலிக்காமரை நட்புக்கொண்டது.

அணையிலிருந்து எல்லா வரவேற்புத்தொண்டுகளையுங் கொண்ட பின்னர், நம்பியாரூரர் ஏயர்கோனாரது சூலையை நீக்கி அவரோடு உடனிருப்பதற்கென்னுள்ளம் விரும்புகின்றது என்றபோது கலிக்காமரது மாந்தர் அவர் உள்ளே பள்ளிகொள்கின்றார்; அவர்க்கொன்றுமில்லையென்று சொல்லியும் மேலும் வருந்தியபடியால்அவரைக் காட்டக்கண்டு வருந்தி நிகழ்ச்சி யறிந்து கொண்டு நானு மிவர்முன் செல்வேனென்று உடைவாளைக் கையிலே பற்ற, இறைவரருளினால் ஏயர்கோன் கலிக்காமர் பிழைத்தெழுந்து நட்புடையராய்க் 'கெட்டேன்' என்று விரைந்து வாளைப்பிடிக்க, வன்றொண்டர் வீழ்ந்து வணங்கத் தாமும் வாளினை வீசி அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினார். பின்பு இருவரும் அளவளாவிக் கலந்த நட்பினராய்த் திருப்புன்கூரையடைந்து இறைவரைப் பணிந்து போற்றினார்கள். நம்பியாரூரர் இறைவரது செயலை வியந்து 'அந்தணாளனென்னுமித் திருப்பதிகம் பாடியருளினார். அதிற் கலிக்காமரின் தொண்டுகளைச் சிறப்பித்துப் பாடியதும் விளங்குவதெனினும் பன்னிருவேலி கொண்டு மழை பெய்வித்ததும், மற்றொரு பன்னிருவேலிகொண்டு பெருவெள்ளமாய்ப் பெய்யுமதனைத் தவிர்த்தருளியதும் கலிக்காமரின் பொருட்டென்பது துணியக்கூடவில்லை.



## திருநீடூர் — பதிகம் ருகூ

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஊர்வ தோர்விடை பொன்றுடை யானை
யொண்ணு தற்றனிக் கண்ணுத லானைக்
கார தார்கறை மாமிடற் றானைக்
கருத லார்புர மூன்றெரித் தானை
நீரில் வாளை வரால்குதி கொள்ளு
நிறைபு னற்கழ னிச்செல்வ நீடூர்ப்
பாரு ளார்பர வித்தொழ நின்ற
பரம னைப்பணி யாவிட லாமே. க

துன்னு வார்சடைத் தூமதி யானைத்
துயக்கு றுவகை தோன்றுவிப் பானைப்
பன்னு நான்மறை பாடவல் லானைப்
பார்த்த னுக்கருள் செய்தபி ரானை
என்னை யின்னருள் ளெய்துவிப் பானை
யேதி லார்தமக் கேதிலன் றன்னைப்
புன்னை மாதவி போதலர் நீடூர்ப்
புனித னைப்பணி யாவிட லாமே. ௨

கொல்லு மூவிலை வேலுடை யானைக்
கொடிய காலனை யுங்குமைத் தானை
நல்ல வாநெறி காட்டுவிப் பானை
நாலு நாமுகக் கின்றபி ரானை
அல்ல லில்லரு ளேபுரி வானை
யாடு நீர்வயல் சூழ்புனல் நீடூர்க்
கொல்லை வெள்ளெரு தேறவல் லானைக்
கூறி நாம்பணி யாவிட லாமே. ௩

தோடு காதிடு தூநெறி யானைத்
தோற்ற முந்துறப் பாயவன் றன்னைப்
பாடு மாமறை பாடவல் லானைப்
பைம்பொ ழிற்குயில் கூவிட மாடே
ஆடு மாமயி லன்னமோ டாட
வலைபு னற்கழ னித்திரு நீடூர்
வேட னாயபி ரானவன் றன்னை
விரும்பி நாம்பணி யாவிட லாமே. ௪

குற்ற மொன்றடி யாரில ராகிற்
கூடு மாறத னைக்கொடுப் பானைக்
கற்ற கல்வியி லும்மினி யானைக்
காணப் பேணு மவர்க்கெளி யானை
முற்ற வஞ்சுந் துறந்திருப் பானை
மூவ ரின்முத லாயவன் றன்னைச்
சுற்று நீள்வயல் சூழ்திரு நீடூர்த்
தோன்ற லைப்பணி யாவிட லாமே. ௫

காடி லாடிய கண்ணுத லானைக்
காலனைக்கடிந் திட்டபி ரானைப்
பாடியா டும்பரி சேபுரிந் தானைப்
பற்றி னோடுசுற் றம்மொழிப் பானைத்
தேடி மாலயன் காண்பரி யானைச்
சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்
கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க்
கூத்த னைப்பணி யாவிட லாமே. ௬

விட்டி லங்கெரி யார்கையி னானை
வீடி லாத வியன்புக ழானைக்
கட்டு வாங்கந் தரித்தபி ரானைக்
காதி லார்கன கக்குழை யானை
விட்டிலங் குபுரி நூலுடை யானை
வீந்த வர்தலை யோடுகை யானைக்
கட்டி யின்கரும் போங்கிய நீடூர்க்
கண்டு நாம்பணி யாவிட லாமே. ௭

மாய மாய மனங்கெடுப் பானை
மனத்து ளேமதி யாயிருப் பானைக்
காய மாயமு மாக்குவிப் பானைக்
காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை
ஓயு மாறுறு நோய்புணர்ப் பானை
யொல்லை வல்வினை கள்கெடுப் பானை
வேய்கொ டோளுமை பாகனை நீடூர்
வேந்த னைப்பணி யாவிட லாமே. ௮

கண்ட முங்கறுத் திட்டபி ரானைக்
காணப் பேணு மவர்க்கெளி யானைத்
தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத்
துன்ப முந்துறந் தின்பினி யானைப்
பண்டை வல்வினை கள்கெடுப் பானைப்
பாக மாமதி யானவன் றன்னைக்
கெண்டை வாளை கிளர்புனல் நீடூர்க்
கேண்மை யாற்பணி யாவிட லாமே. ௯

அல்ல லுள்ளன தீர்த்திடு வானை
யடைந்த வர்க்கமு தாயிடு வானைக்
கொல்லை வல்லர வம்மசைத் தானைக்
கோல மார்கரி யின்னுரி யானை
நல்ல வர்க்கணி யானவன் றன்னை
நானுங் காதல்செய் கின்றபி ரானை
எல்லி மல்லிகை யேகமழ் நீடு
ரேத்தி நாம்பணி யாவிட லாமே. ௧௦

பேரா ராயிர மும்முடை யானைப்
பேசி னாற்பெரி தும்மினி யானை
நீரூர் வார்சடை நின்மலன் றன்னை
நீடூர் நின்றுகந் திட்டபி ரானை
ஆரூ ரன்னடி காண்பதற் கன்பா
யாத ரித்தழைத் திட்டவிம் மாலை
பாரூ ரும்பர வித்தொழ வல்லார்
பத்த ராய்முத்தி தாம்பெறு வாரே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சோமநாதேசுவரர்; இறைவி - வேயுறுதோளியம்மை.

---

**பதிக வரலாறு:**

திருநின்றியூரை வழிபட்டு மேலே செல்கின்ற நம்பியாரூரர் பெரிய புகழை யுடைய திருநீடூரைப் பணியாது போகும் பொழுது, ஒப்பரிய தம் முணர்வினால் நினைந்து 'நீடூர்ப் பாருளார் பரவித்தொழ நின்ற பரமனைப் பணியா விடலாமே'என்று வைத்து 'ஊர்வதோர் விடை' யென்று தொடங்கி இப்பதிகத்தைப் பாடிப் போந்து திருநீடூரை வழிபட்டுச் சிலநாள் தங்கினார்.



## திருவாழ்கொளிபுத்தூர் பதிகம் ௫௭

### பண் - தக்கேசி

### திருச்சிற்றம்பலம்

தலைக்க லன்றலை மேற்றரித் தானைத்
தன்னை யென்னை நினைக்கத் தருவானைக்
கொலைக்கையா னையுரி போர்த்துகந் தானைக்
கூற்றுதைத் தகுரை சேர்கழ லானை
அலைத்தசெங் கண்விடை யேறவல் லானை
யானை யாவடி யேனடி நாயேன்
மலைத்தசெந் நெல்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௧

படைக்கட் சூலம் பயிலவல் லானைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானைக்
கடைக்கட்பிச் சைக்கிச்சை காதலித் தானைக்
காமனு கந்தனைக் கட்டழித் தானைச்
சடைக்கட் கங்கையைத் தாழவைத் தானைத்
தண்ணீர்மண் ணிக்கரை யானைத்தக் கானை
மடைக்கணீ லமலர் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௨

வெந்த நீறுமெய் பூசவல் லானை
வேத மால்விடை யேறவல் லானை
அந்தமா தியறி தற்கரி யானை
யாறலைத் தசடை யானையம் மானைச்
சிந்தை யென்றடு மாற்றறுப் பானைத்
தேவ தேவனென் சொல்முனி யாதே
வந்தெனுள் ளம்புகும் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௩

தடங்கை யான்மலர் தூய்த்தொழு வாரைத்
தன்னடிக் கேசெல்லு மாறுவல் லானைப்
படங்கொளு கமரை யார்த்துகந் தானைப்
பல்லின்வெள் ளைத்தலை யூணுடை யானை
நடுங்கவா னையுரி போர்த்துகந் தானை
நஞ்ச முண்டுகண் டங்கறுத் தானை
மடந்தை பாகனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ச

வளைக்கை முன்கை மலைமங்கை மணாளன்
மார னாருட லீறெழச் செற்றுத்
துளைத்தவங் கத்தொடு தூமலர்க் கொன்றை
தோலுநூ லுந்துதைந் தவரை மார்பன்
திளைக்குந் தெவ்வர் திரிபுர மூன்று
மவுணர் பெண்டிரு மக்களும் வேவ
வளைத்த வில்லியை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ரு

திருவி னாயக னாகிய மாலுக்
கருள்கள் செய்திடும் தேவர் பிரானை
உருவி னானையொன் றுவறி வொண்ணு
மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவி லேந்தியோர் கேழற்பின் சென்று
செங்கண் வேடனா யென்னொடும் வந்து
மருவி னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. சா

எந்தை யையெந்தை தந்தை பிரானை
யேதமா யவிடர் தீர்க்க வல்லானை
முந்தி யாகிய மூவரின் மிக்க
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைக்
கந்தின் மிக்க கரியின் மருப்போடு
கார கில்கவ ரிம்மயிர் மண்ணி
வந்து வந்திழி வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. எ

தேனை யாடிய கொன்றையி னானைத்
    தேவர் கைதொழுந் தேவர் பிரானை
ஊன மாயின தீர்க்கவல் லானை
    யொற்றை யேற்றனை நெற்றிக்கண் ணானைக்
கான வானையின் கொம்பினைப் பீழ்ந்த
    கள்ளப் பிள்ளைக்குங் காண்பரி தாய
வான நாடனை வாழ்கொளி புத்தூர்
    மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௮

காளை யாகி வரையெடுத் தான்றன்
    கைக ளிற்றவன் மொய்தலை யெல்லாம்
மூளை போத வொருவிரல் வைத்த
    மூர்த்தி யைமுதல் காண்பரி யானைப்
பாளை தெங்கு பழம்விழ மண்டிச்
    செங்கண் மேதிகள் சேடெறிந் தெங்கும்
வாளை பாய்வயல் வாழ்கொளி புத்தூர்
    மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௯

திருந்த நான்மறை பாடவல் லானைத்
    தேவர்க் குந்தெரி தற்கரி யானைப்
பொருந்த மால்விடை யேறவல் லானைப்
    பூதிப் பைபுலித் தோலுடை யானை
இருந்துண் டேரரு நின்றுணுஞ் சமணு
    மேச நின்றவ னாருயிர்க் கெல்லாம்
மருந்த னான்றனை வாழ்கொளி புத்தூர்
    மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௰

மெய்யனை மெய்யி னின்றுணர் வானை
    மெய்யி லாதவர் தங்களுக் கெல்லாம்
பொய்ய னைப்புர மூன்றெரித் தானைப்
    புனித னைப்புலித் தோலுடை யானைச்
செய்ய னைவெளி யதிரு நீற்றிற்
    றிகழு மேனியன் மான்மறி யேந்தும்
மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர்
    மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. ௧௧

வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனென்
றுளங்கு ளிர்தமி ழூரன்வன் றொண்டன்
சடையன் காதலன் வனப்பகை யப்பன்
நலங்கி ளர்வய னாவலர் வேந்த
னங்கை சிங்கடி தந்தை பயந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற்
பறையு மாஞ்செய்த பாவங்க டானே. கஉ

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-மாணிக்கவண்ணர்; இறைவி-வண்டமர்பூங்குழலம்மை.

பதிக வரலாறு :

திருக்கருப்பறியலூர், திருப்பழமண்ணிப்படிக்கரை என்னும் இவைகளை யடைந்து மாதொருபாகர் மலர்த்தாள் போற்றிச் செல்கின்றவராய முனைப்பாடிச் செல்வர் திருவாழ்கொளிபுத்தூ ரெய்தாது போம்பொழுது 'தலைக்கலன்' என்றிப் பதிகமெடுத்து மீண்டு புகுந்து திருக்கோயில் வாயிலில் மயிர்ப்புளகத்தோடு தாழ்ந்து உள்ளணைந்து பணிந்து ஏத்தியுருகுமன்பால் பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாலானைப் போற்றி வைத்துப் புறம்பணைந்து சிலநாட் டங்கிக் கானாட்டுமுள்ளூருக்குச் சென்றருளினர்.



## திருக்கழுமலம் பதிகம் ருஅ

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னரு டந்தவெந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தவெம் மானை
ஏதிலென் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை
யெண்வகை யொருவனை யெங்கள்பி ரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. க

மற்றொரு துணையினி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணையென்று கருதேன்
துணையென்று நான்றொழப் பட்டவொண் சுடரை
முத்தியு ஞானமும் வானவ ரறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௨

திருத்தினை நகருறை சேந்த னப்பனென்
செய்வினை யறுத்திடுஞ் செம்பொனை யம்பொன்
ஒருத்தனை யல்லதிங் காரையு முணரே
னுணர்வுபெற் றேனுய்யுங் காரணந் தன்னால்
விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்தெங்குங் காணமாட் டாதுவிட் டிருந்தேன்
கருத்தனை நிருத்தஞ்செய் காலனை வேலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௩

மழைக்கரும் பும்மலர்க் கொன்றையி னானை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு காலினிப் போய்ப்பிற வாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்
குழைக்கருங் கண்டனைக் கண்டுகொள் வானே
பாடுகின் றேன்சென்று கூடவும் வல்லேன்
கழைக்கரும் புங்கத லிப்பல சோலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௪

குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங்
கொடுமழு வாட்படைக் குழகனே யென்றும்
வண்டலம் பும்மலர்க் கொன்றைய னென்றும்
வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே
பண்டைநம் பலமன முங்களைந் தொன்றாய்ப்
பசுபதி பதிவின விப்பல நாளுங்
கண்டலங் கழிக்கரை யோதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௫

வரும்பெரும் வல்வினை யென்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பியென் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டிநின் றேன்றொழு தேன்விதி யாலே
அரும்பினை யலரினை யமுதினைத் தேனை
யையனை யறவனென் பிறவிவே ரறுக்குங்
கரும்பினைப் பெருஞ்செந்நெ னெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௬

அயலவர் பரவவு மடியவர் தொழவு
மன்பர்கள் சாயலு ளடையலுற் றிருந்தேன்
முயல்பவர் பின்சென்று முயல்வலை யானை
படுமென மொழிந்தவர் வழிமுழு தெண்ணிப்
புயலினைத் திருவினைப் பொன்னின தொளியை
மின்னின துருவை யென்னிடைப் பொருளைக்
கயலினஞ் சேலொடு வயல்விளை யாடுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௭

நினைதரு பாவங்க ணாசங்க ளாக
நினைந்துமுன் றொழுதெழப் பட்டவொண் சுடரை
மலைதரு மலைமகள் கணவனை வானோர்
மாமணி மாணிக்கத் தைம்மறைப் பொருளைப்
புனைதரு புகழினை யெங்கள தொளியை
யிருவரு மொருவனென் றுணர்வரி யவனைக்
கனைதரு கருங்கட லோதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௮

மறையிடைத் துணிந்தவர் மனையிடை யிருப்ப
வஞ்சனை செய்தவர் பொய்கையு மாயத்
துறையுறக் குளித்துள தாகவைத் துய்த்த
வுண்மை யெனுந்தக வின்மையை யோரேன்
பிறையுடைச் சடையனை யெங்கள்பி ரானைப்
பேரரு ளாளனைக் காரிருள் போன்ற
கறையணி மிடறுடை யடிகளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. ௯

செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்
விரவிய சடைமுடி யடிகளை நினைந்திட்
டழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லா
லறிவரி தவன்றிரு வடியிணை யிரண்டுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்துந்
தொழுமல ரெடுத்தகை யடியவர் தம்மைத்
துன்பமு மிடும்பையுஞ் சூழகி லாவே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-பிரமபுரியீசுவரர்; இறைவி-திருநிலைநாயகியம்மை.

---

பதிக வரலாறு :

தில்லைச் சிற்றம்பலத்தை வணங்கிப் புறந்தருவார் போற்றிசைப்பக் கொள்ளிடத் திருநதியைக் கடந்து செல்கின்றவராய் அறம்பயந்தாள் திருமுலைப்பால் அமுதுண்டு வளர்ந்த ஆளுடைய பிள்ளையார் திருவவதாரஞ் செய்த பெரும்புகழ் வாய்ந்த திருக்கழுமலத்தை யடைந்து வன்றொண்டப் பெருமான் 'பிள்ளையார் பிறந்தருளிய பெரும்புகலி உள்ளும் நான் மிதியேன்' என்று ஊரெல்லைப்புறம் வணங்கி வலமாக வரும் பொழுது மங்கையிடங் கொண்டபிரான் எதிர்காட்சி கொடுத்தருள நிறைந்த பேரன்பினாற் 'கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படி' யென்று இத்திருப்பதிகம் பாடி வணங்கி வழிபட்டார்.



## திருவாரூர்   பதிகம் ௬௫

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி வொண்ணா
வெம்மா னையெளி வந்தபி ரானை
அன்னம் வைகும்வ யற்பழ னத்தணி
யாரு ரானை மறக்கலு மாமே. ௧

கட்ட மும்பிணி யுங்களை வானைக்
காலற் சீறிய காலுடை யானை
விட்ட வேட்கைவெந் நோய்களை வானை
விரவி னால்விடு தற்கரி யானைப்
பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை
வாரா மேதவி ரப்பணிப் பானை
அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை
யாரூ ரானை மறக்கலு மாமே. உ

கார்க்கின் றமழை யாய்ப்பொழி வானைக்
கலைக்கெ லாம்பொரு ளாயுடன் கூடிப்
பார்க்கின் றவுயிர்க் குப்பரிந் தானைப்
பகலுங் கங்குலு மாகிநின் றானை
ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை
யுணரு நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின் றகட லைமலை தன்னை
யாரூ ரானை மறக்கலு மாமே. ௩

செத்த போதினின் முன்னின்று நம்மைச்
சிலர்கள் கூடிச் சிரிப்பதன் முன்னம்
வைத்த சிந்தையுண் டேமன முண்டே
மதியுண் டேவிதி யின்பய னுண்டே
முத்த னெங்கள்பி ரானென்று வானோர்
தொழநின் றதிமி லேறுடை யானை
அத்த னெந்தைபி ரானெம்பி ரானை
யாரூ ரானை மறக்கலு மாமே. ௪

செறிவுண் டேன்மனத் தாற்றெளி வுண்டேற்
றேற்றத் தால்வருஞ் சிக்கன வுண்டேல்
மறிவுண் டேன்மறு மைப்பிறப் புண்டேல்
வாணாண் மேற்செல்லும் வஞ்சனை யுண்டேல்
பொறிவண் டியாழ்செய்யும் பொன்மலர்க் கொன்றை
பொன்போ லுஞ்சடை மேற்புனைந் தானை
அறிவுண் டேயுட லத்துயி ருண்டே
யாரூ ரானை மறக்கலு மாமே. ௫

பொள்ள லிவ்வுட லப்பொரு ளென்று
 பொருளுஞ் சுற்றமும் போகமு மாகி
மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம்
 வாரா மேதவிர்க் கும்விதி யானை
வள்ள லெந்தமக் கேதுணை யென்று
 நாளு நாளும மர்தொழு தேத்தும்
அள்ள லங்கழ னிப்பழ னத்தணி
 யாரு ரானை மறக்கலு மாமே. சு

கரியா னையுரி கொண்டகை யானைக்
 கண்ணின் மேலொரு கண்ணுடை யானை
வரியா னைவருத் தங்களை வானை
 மறையா னைக்குறை மாமதி சூடற்
குரியா னையுல கத்துயிர்க் கெல்லா
 மொளியா னையுகந் துள்கிநண் ணாதார்க்
கரியா னையடி யேற்கெளி யானை
 யாரு ரானை மறக்கலு மாமே. எ

வாளா நின்று தொழுமடி யார்கள்
 வாழ ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்
நாளு நாளும்மல ரிட்டுவ ணங்கார்
 நம்மையாள் கின்ற தன்மையை யோரார்
கேளா நான்கிடந் தேயுழைக் கின்றேன்
 கிளைக்கெ லாந்துணை யாமெனக் கருதி
ஆளா வான்பலர் முன்பழைக் கின்றே
 னாரு ரானை மறக்கலு மாமே. அ

விடக்கை யேபெருக் கிப்பல நாளும்
 வேட்கை யாற்பட்ட வேதனை தன்னைக்
கடக்கி லேனெறி காணவு மாட்டேன்
 கண்கு ழிந்திரப் பார்கையி லொன்றும்
இடக்கி லேன்பர வைத்திரைக் கங்கைச்
 சடையா னையுமை யாளையோர் பாகத்
தடக்கி னானையந் தாமரைப் பொய்கை
 யாரு ரானை மறக்கலு மாமே. கூ

ஒட்டி யாட்கொண்டு போயொளித் திட்ட
வுச்சிப் போதனை நச்சர வார்த்த
பட்டி யைப்பக லையிரு டன்னைப்
பாவிப் பார்மனத் தூறுமத் தேனைக்
கட்டி யைக்கரும் பின்றெளி தன்னைக்
காத லாற்கடற் சூர்தடிந் திட்ட
செட்டி யப்பனைப் பட்ட னைச்செல்வ
வாரூ ரானை மறக்கலு மாமே. ௰

ஒரூ ரென்றுல கங்களுக் கெல்லா
முரைக்க லாம்பொரு ளாயுடன் கூடிக்
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
முடியன் காரிகை காரண மாக
ஆரூ ரைம்மறத் தற்கரி யானை
யம்மான் றன்றிருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரூ ரன்னடி நாயுரை வல்லா
ரமர லோகத் திருப்பவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு:**

நாவலர்பெருமான் திருக்கொடுங்கோளூரிலே சேரர்பிரானோடு அளவளாவியிருக்கு நாள்களில் ஒருநாள் திருவாரூர் நகராளும் தேவர்பிரான் கழல் மிக நினைந்த உள்ளத்தினராய் 'ஆவியை ஆரூரானை மறக்கலுமாமே' என்றித் திருப்பதிகம் பாடிப் பிரிந்திருந்தமைபற்றி வெருவுற்றுத் திருவாரூரை நினைந்து திருக்கூட்டத்துடன் புறப்பட்டுச் சென்றார்.



## திருவிடைமருதூர் பதிகம் ௬௰

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தாற்
கைப்பர் பாழ்புக மற்றது போலப்
பழுது நானுழன் றுட்டடு மாறிப்
படிசு ழித்தலைப் பட்டன னெந்தாய்
அழுது நீயிருந் தென்செய்தி மனனே
யங்க ணாவா னேயென மாட்டா
இழுதை யேனுக்கொ ருய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௧

நரைப்பு மூப்பொடு பிணிவரு மின்னே
நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை யறிந்தே
னஞ்சி னேனம னாரவர் தம்மை
உரைப்ப னுன்ன சேவடி சேர
வுணரும் வாழ்க்கையை யொன்றறி யாத
இரைப்ப னேனுக்கொ ருய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௨

புன்னு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருளிலை நாளும்
என்னெ னக்கினி யிற்றைக்கு நாளை
யென்றி ருந்திட ருற்றன னெந்தாய்
முன்ன மேயுன சேவடி சேரா
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
இன்ன மென்றனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௩

முந்திச் செய்வினை யிம்மைக்க ணலிய
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவு மாட்டேன்
சிறுச்சிறி தேயிரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடுமெம் மானே
யாரூர் மேவிய வமரர்க டலைவா
எந்தை நீயெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௪

அழிப்ப ரைவர் புரவுடை யார்க
ளவ ரும்புர வாசற வாண்டு
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றையுனக் கேபொறை யானேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொரு டன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கையீ தாகில்
இழித்தே னென்றனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௫

குற்றந் தன்னொடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய வாயின கொடுமைகள் செய்தேன்
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்
எற்று ளேனெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௬

கொடுக்க கிற்றிலே னொண்பொரு டன்னைக்
குற்றஞ் செற்ற மிவைமுத லாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டி லம்புல னென்வச மல்ல
நடுக்க முற்றதோர் மூப்புவந் தெய்த
நமன்ற மர்நர கத்திட லஞ்சி
இடுக்க ணுற்றன னுய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௭

ஐவ கைய ரையர வராகி
யாட்சி கொண்டொரு காலவர் நீங்கார்
அவ்வ கையவர் வேண்டுவ தானா
லவர வர்வழி யொழுகிநான் வந்து
செய்வ கையறி யேன்சிவ லோகா
தீவ ணாசிவ னேயெரி யாடீ
எவ்வ கையெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௮

ஏழை மாநுட வின்பினை நோக்கி
யிளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
வாழை தான்பழுக் குநமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போக மும்பொரு ளொன்றறி யாத
ஏழை யேனுக்கோ ருய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தைபி ரானே. ௯

அரைக்குஞ் சந்தனத் தோடகி லுந்தி
யையவ னஞ்சுமந் தார்த்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மே
லிடைம ருதுறை யெந்தைபி ரானை
உரைக்கு மூர னொளிதிகழ் மாலை
யுள்ளத் தாலுகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையு மின்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மருதீசுவரர், இறைவி - நலமுலைநாயகியம்மை.



## திருக்கச்சியேகம்பம் பதிகம் கூ

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

உற்ற வர்க்குத வும்பெரு மானை
யூர்வ தொன்றுடை யானும்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை
அற்ற மில்புக ழாளுமை நங்கை
யாத ரித்து வழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

திரியு முப்புரந் தீப்பிழம் பாகச்
செங்கண் மால்விடை மேற்றிகழ் வானைக்
கரியி னீருரி போர்த்துகந் தானைக்
காம னைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை
மருவி யேத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை யெங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

குண்ட லந்திகழ் காதுடை யானைக்
கூற்று தைத்த கொடுந்தொழி லானை
வண்டலம் புமலர்க் கொன்றையி னானை
வாள ராமதி சேர்சடை யானைக்
கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை
கெழுமி யேத்தி வழிபடப் பெற்ற
கண்ட நஞ்சுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௪

வெல்லும் வெண்மழு வொன்றுடை யானை
வேலை நஞ்சுண்ட வித்தகன் றன்னை
அல்ல றீர்த்தருள் செய்யவல் லானை
யரும றையவை யங்கம்வல் லானை
எல்லை யில்புக ழாளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை யெங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௫

திங்க டங்கிய சடையுடை யானைத்
தேவ தேவனைச் செழுங்கடல் வளரும்
சங்க வெண்குழைக் காதுடை யானைச்
சாம வேதம் பெரிதுகப் பானை
மங்கை நங்கை மலைமகள் கண்டு
மருவி யேத்தி வழிபடப் பெற்ற
கங்கை யாளனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௬

விண்ண வர்தொழு தேத்தநின் றானை
வேதந் தான்விரித் தோதவல் லானை
நண்ணி னார்க்கென்று நல்லவன் றன்னை
நாளு நாமுகக் கின்றபி ரானை
எண்ணி றொல்புக ழாளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கண்ணு மூன்றுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ௭

சிந்தித் தென்று நினைந்தெழு வார்கள்
சிந்தை யிற்றிக ழுஞ்சிவன் றன்னைப்
பந்தித் தவினைப் பற்றறுப் பானைப்
பாலொடா னஞ்சு மாட்டுகந் தானை
அந்த மில்புக ழாளுமை நங்கை
யாத ரித்து வழிபடப் பெற்ற
கந்த வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. அ

வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம்
வாலி யபுர மூன்றெரித் தானை
நிரம்பிய தக்கன் றன்பெரு வேள்வி
நிரந்த ரஞ்செய்த நிட்கண் டகனைப்
பரந்த தொல்புக ழாளுமை நங்கை
பரவி யேத்தி வழிபடப் பெற்ற
கரங்க ளெட்டுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. கூ

எள்க லின்றி யிமையவர் கோனை
யீச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி யுகந்துமை நங்கை
வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி
வெருவியோ டித்தழு வவெளிப் பட்ட
கள்ளக் கம்பனை யெங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. ய

பெற்ற மேறுகந் தேறவல் லானைப்
பெரிய வெம்பெரு மானென்றெப் போதும்
கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று

கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக்
குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை யீரைந்தும் வல்லார்
நன்னெ றியுல கெய்துவர் தாமே. ௧௧.

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - ஏகாம்பரநாதர், இறைவி - காமாட்சியம்மை.

---

**பதிக வரலாறு :**

திருவாலங்காட்டை வணங்கிப் போய்த் திருவூறலமர்ந் திறைஞ்சி காஞ்சிமா நகரணைந்த சுந்தர மூர்த்தி நாயனார் திருக்காமக் கோட்டத்தில் எண்ணிலா உயிர்க்கெல்லாம் இகவாத அருளினாலான திருவறம் புரக்கும் அம்மையைப் பணிந்து போற்றித் தொல்லுலகம் முழுதுமளித்தழித்தாக்கு முதல்வர் திருவேகம்ப மடைந்து அடியவர் எதிர்கொளச் சென்று புக்குப் பணிபவர், 'இழுதையேன் என் மொழிவேன்' என்று இறைஞ்சி 'விண்ணாள்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட கண்ணாளா, கச்சியேகம்பனே, கடையானேன் எண்ணாத பிழை பொறுத்து இன்றுயான் காணக் கண் ணளித்தருளாய், எழிற்பவள வண்ணனே' என்று வணங்கினார். வணங்கிக் காமக் கோட்டியம்மையார் கைம்மலர்களாற் பனிமலர்கள் கொண்டருச்சித்த சேவடிகளை மிக நினைந்து பேரன்போடு பரவிப் போற்றிய வாரூரருக்கு மங்கை தழுவக் குழைந்தார் மறைந்த விடக்கண் கொடுத்தார். பெருந்தேவ ரிருவரானும் மூலமறிதற் கரியான் கண்ணளித்து மூலச்சுவட்டுக் கோலங்காட்டுதலும் நம்பியாரூரர் குறுகி விழுந்தெழுந்து களித்து 'ஆலந்தானுகந்தவ' னென்றிப்பதிகம் பாடினார்.



## திருக்கோலக்கா பதிகம் ௬உ

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

புற்றில் வாளர வார்த்தபி ரானைப்
பூத நாதனைப் பாதமே தொழுவார்
பற்று வான்றுணை யெனக்கெளி வந்த
பாவ நாசனை மேவரி யானை

முற்ற லார்திரி புரமொரு மூன்றும்
பொன்ற வென்றிமால் வரையரி யம்பாக்
கொற்ற வில்லங்கை யேந்திய கோனைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ௧

அங்க மாறுமா மறையொரு நான்கு
மாய நம்பனை வேய்புரை தோளி
தங்கு மாதிரு வுருவுடை யானைத்
தழன்ம திசடை மேற்புனைந் தானை
வெங்க ணானையி னீருரி யானை
விண்ணு ளாரொடு மண்ணுளார் பரசுங்
கொங்கு லாம்பொழிற் குரவெறி கமழுங்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ௨

பாட்ட கத்திசை யாகிநின் றானைப்
பத்தர் சித்தம் பரிவினி யானை
நாட்டகத் தேவர் செய்கையு ளானை
நட்ட மாடியை நம்பெரு மானைக்
காட்ட கத்துறு புலியுரி யானைக்
கண்ணொர் மூன்றுடை யண்ணலை யடியேன்
கோட்ட கப்புன லார்செழுங் கழனிக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ௩

ஆத்த மென்றெனை யாளுகந் தானை
யமரர் நாதனைக் குமரனைப் பயந்த
வார்த்த யங்கிய முலைமட மானை
வைத்து வான்மிசைக் கங்கையைக் கரந்த
தீர்த்த னைச்சிவ னைச்செழுந் தேனைத்
தில்லை யம்பலத் துண்ணிறைந் தாடுங்
கூத்த னைக்குரு மாமணி தன்னைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ௪

அன்று வந்தெனை யகலிடத் தவர்முன்
ஆள தாகவென் றுவணங் காட்டி
நின்று வெண்ணெய்நல் லூர்மிசை யொளித்த
நீத்தி லத்திரட் டொத்தினை முத்திக்
கொன்றி னொன்றனை யும்பர்பி ரானை
யுயருஞ் வல்லர ணங்கெடச் சீறுங்
குன்ற வில்லியை மெல்லிய லுடனே
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. ரு

காற்றுத் தீப்புன லாகிநின் றானைக்
கடவு ளைக்கொடு மால்விடை யானை
நீற்றுத் தீயுரு வாய்நிமிர்ந் தானை
நிரம்பு பல்கலை யின்பொரு ளாலே
போற்றித் தன்கழ றொழுமவ னுயிரைப்
போக்கு வானுயிர் நீக்கிடத் தாளாற்
கூற்றைத் தீங்குசெய் குரைகழ லானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. சு

அன்ற யன்சிர மரிந்ததிற் பலிகொண்
டமர ருக்கருள் வெளிப்படுத் தானைத்
துன்று பைங்கழ லிற்சிலம் பார்த்த
சோதி யைச்சுடர் போலொளி யானை
மின்ற யங்கிய விடைமட மங்கை
மேவு மீசனை வாசமா முடிமேற்
கொன்றை யஞ்சடைக் குழகனை யழகார்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. எ

நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந் தனுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு
மங்க ணன்றனை யெண்கணா மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. அ

அரக்க னாற்றலை யழித்தவன் பாட்டுக்
கன்றி ரங்கிய வென்றியி னானைப்
பரக்கும் பாரளித் தண்டுகந் தவர்கள்
பரவி யும்பணி தற்கரி யானைச்
சிரக்கண் வாய்செவி மூக்குயர் காய
மாகித் தீவினை தீர்த்தவெம் மானைக்
குரக்கி னங்குதி கொண்டுகள் வயல்சூழ்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே.

கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக் காவுளெம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி யடியவர் விரும்பப்
பயிலு நாவலா ரூரன்வன் றொண்டன்
நாடி ரங்கிமுன் னறியுமந் நெறியா
னவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடநவின் றான்பாற்
கதியு மெய்துவர் பதியவர்க் கதுவே.

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சத்தபுரீசுவரர்; இறைவி - ஓசைகொடுத்தநாயகியம்மை.

---

**பதிக வரலாறு :**

திருப்புன்கூரை அணைந்திறைஞ்சி மணம் விரிந்த மலர்ச்சோலை சூழ்ந்த திருக்கோலக்கா வடையக் கங்கை சடைக்கரந்தவர் எதிர்காட்சி கொடுத்தருளக் கண்ட வன்றொண்டர் பெருவிருப்பாற் றொழுது திருப்பதிகம் பாடுகின்றவர், திருக்கைகளா லொத்திப் பாடிய திருஞான சம்பந்தருக்குப் பிள்ளையார் அருளினாற் றிருத்தாள மளித்தபடியைச் சிறப்பித்துப் போற்றிசைத்தார்.



## நம்பியென்ற திருப்பதிகம்

பதிகம் சுரு

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மெய்யைமுற் றப்பொடிப் பூசியொர் நம்பி
வேதநான் கும்விரித் தோதியொர் நம்பி
கையிலோர் வெண்மழு வேந்தியோர் நம்பி
கண்ணு மூன்றுடை யாரொரு நம்பி
செய்யநம் பிசிறு செஞ்சடை நம்பி
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்தநம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. க

திங்கணம் பிமுடி மேலடி யார்பாற்
சிறந்தநம் பிபிறந் தவுயிர்க் கெல்லாம்
அங்கணம் பியருண் மால்விசும் பாளு
மமரர்நம் பிகும ரன்முதற் றேவர்
தங்கணம் பிதவத் துக்கொரு நம்பி
தாதை யென்றுன் சரண்பணிந் தேத்தும்
எங்கணம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. உ

வருந்தவன் றம்மத யானை யுரித்த
வழக்குநம் பிமுழக் குங்கட னஞ்சம்
அருந்துநம் பியம ரர்க்கமு தீந்த
வருளெனம் பிபொரு ளால்வரு நட்டம்
புரிந்தநம் பிபுரி நூலுடை நம்பி
பொழுதும் விண்ணும் முழுதும் பலவாகி
இருந்தநம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. ந

கருக

ஊறுநம் பியமு தாவுயிர்க் கெல்லா
உரியநம் பிதெரி யம்மறை யங்கம்
கூறுநம் பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்தநம் பிகுமை யாப்புல னைந்தும்
சீறுநம் பிதிரு வெள்ளடை நம்பி
செங்கண்வெள் ளேச்செழுங் கோட்டெரு தென்றும்
ஏறுநம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. ௪

குற்றநம் பிகுறு காரெயின் மூன்றைக்
குலைத்தநம் பிசிலை யாவரை கையில்
பற்றுநம் பிபர மானந்த வெள்ளம்
பணிக்குநம் பியெனப் பாடுத லல்லால்
மற்றுநம் பியுனக் கென்செய வல்லேன்
மதியிலி யேன்படு வெந்துய ரெல்லாம்
எற்றுநம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. ௫

அரித்தநம் பியடி கைதொழு வார்நோ
யாண்டநம் பிமுன்னை யீண்டுல கங்கள்
தெரித்தநம் பியொரு சேவுடை நம்பி
சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடம்
தரித்தநம் பிசம யங்களி னம்பி
தக்கன்றன் வேள்விபுக் கன்றிமை யோரை
இரித்தநம் பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. ௬

பின்னைநம் பும்புயத் தானெடு மாலும்
பிரமனு மென்றிவர் நாடியுங் காணா
உன்னைநம் பியொரு வர்க்கெய்த லாமே
யுலகுநம் பியுரை செய்யும தல்லால்
முன்னைநம் பிபின்னும் வார்சடை நம்பி
முழுதிவை யித்தனை யுந்தொகுத் தாண்ட
தென்னைநம் பியெம் பிரானுய நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. ௭

சொல்லைநம் பிபொரு ளாய்நின்ற நம்பி
தோற்றமீ றுமுத லாகிய நம்பி
வல்லைநம் பியடி யார்க்கருள் செய்ய
வருந்திநம் பியுனக் காட்செய கில்லார்
அல்லனம் பிபடு கின்றதென் னாடி
யணங்கொரு பாகம்வைத் தெண்கணம் போற்ற
இல்லநம் பியிடு பிச்சைகொ ணம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. அ

காண்டுநம் பிகழற் சேவடி யென்றுங்
கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை
ஆண்டுநம் பியவர் முன்கதி சேர
வருளுநம் பிகுரு மாப்பிறை பாம்பைத்
தீண்டுநம் பிசென்னி யிற்கன்னி தங்கத்
திருந்துநம் பிபொய்ச் சமண்பொரு ளாகி
ஈண்டுநம் பியிமை யோர்தொழு நம்பி
யெழுபிறப் புமெங்க ணம்பிகண் டாயே. கூ

கரக்குநம் பிகசி யாதவர் தம்மைக்
கசிந்தவர்க் கிம்மையோ டம்மையி லின்பம்
பெருக்குநம் பிபெரு கக்கருத்தா * * * * ய

திருச்சிற்றம்பலம்



## திருத்தினை நகர் பதிகம் கூசு

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்ற மில்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய வழகனை யமரர்க்
கரிய சோதியை வரிவரா லுகளும்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. க

பிணிகொளாக் கைபிறப் பிறப்பென்னு மிதனை
நீக்கி யீசன் றிருவடி யிணைக்காட்
டுணிய வேண்டிடிற் சொல்லுவன் கேணீ
யஞ்ச னெஞ்சமே வஞ்சர்வாழ் மதின்மூன்
றணிகொள் வெஞ்சிலை யாலுகச் சீறு
மையன் வையகம் பரவிநின் றேத்தும்
திணியும் வார்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. உ

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பா
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேலெரு தேறு
மூர்த்தி யைமுத லாயபி ரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்து
மப்ப னொப்பிலா முலையுமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௩

பாவ மேபுரிந் தகலிடந் தன்னிற்
பலப கர்ந்தல மந்துயிர் வாழ்க்கைக்
காவ வென்றுழந் தயர்ந்துவீ ழாதே
யண்ண றன்றிற மறிவினாற் கருதி
மாவி னீருரி யுடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௪

ஒன்ற லாவுயிர் வாழ்க்கையை நினைந்திட்
டுடற ளர்ந்தரு மாநிதி யியற்றி
என்றும் வாழலா மெமக்கெனப் பேசு
மிதுவும் பொய்யென வேநினை யுளமே
குன்று லாவிய புயமுடை யானைக்
கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்
சென்றெ லாம்பயி றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ரு

வேந்த ராயுல காண்டறம் புரிந்து
வீற்றி ருந்தவிவ் வுடலிது தன்னைத்
தேய்ந்தி றந்துவெந் துயருழந் திடுமிப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே
பாந்த ளங்கையி லாட்டுகந் தானைப்
பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௬

தன்னி லாசறு சித்தமு மின்றித்
தவமு யன்றவ மாயின பேசிப்
பின்ன லார்சடை கட்டியென் பணிந்தாற்
பெரிது நீந்துவ தரிதது நிற்க
முன்னெ லாமுழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. எ

பரிந்த சுற்றமு மற்றுவன் றுணையும்
பலருங் கண்டழு தெழவுயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சய மறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்தடங் கண்ணி பங்கனை யுயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. அ

நமையெ லாம்பல ரிகழ்ந்துரைப் பதன்மு
னன்மை யொன்றிலாத் தேரர்புன் சமணும்
சமய மாகிய தவத்தினா ரவத்தத்
தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்
உமையொர் கூறனை யேறுகந் தானை
யும்ப ராதியை யெம்பெரு மானைச்
சிமய மார்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௯

பிணிகொளாக் கைபிறப் பிறப்பென்னு மிதனை
நீக்கி யீசன் றிருவடி யிணைக்காட்
டுணிய வேண்டிடிற் சொல்லுவன் கேணீ
யஞ்ச னெஞ்சமே வஞ்சர்வாழ் மதின்மூன்
றணிகொள் வெஞ்சிலை யாலுகச் சீறு
மையன் வையகம் பரவிநின் றேத்துந்
திணியும் வார்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. உ

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பா
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேலெரு தேறு
மூர்த்தி யைமுத லாயபி ரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்து
மப்ப னொப்பிலா முலையுமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௩

பாவ மேபுரிந் தகலிடந் தன்னிற்
பலபகர்ந்தல மந்துயிர் வாழ்க்கைக்
காவ வென்றுழந் தயர்ந்துவீ ழாதே
யண்ண றன்றிற மறிவினாற் கருதி
மாவி னீருரி யுடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௪

ஒன்ற லாவுயிர் வாழ்க்கையை நினைந்திட்
டுடற ளர்ந்தரு மாநிதி யியற்றி
என்றும் வாழலா மெமக்கெனப் பேசு
மிதுவும் பொய்யென வேநினை யுளமே
குன்று லாவிய புயமுடை யானைக்
கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்
சென்றெ லாம்பயி றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ரு

வேந்த ராயுல காண்டறம் புரிந்து
வீற்றி ருந்தவிவ் வுடலிது தன்னைத்
தேய்ந்தி றந்துவெந் துயருழந் திடும்இப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே
பாந்த ளங்கையி லாட்டுகந் தானைப்
பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௬

தன்னி லாசறு சித்தமு மின்றித்
தவமு யன்றவ மாயின பேசிப்
பின்ன லார்சடை கட்டியென் பணிந்தாற்
பெரிது நீந்துவ தரிதது நிற்க
முன்னெ லாமுழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௭

பரிந்த சுற்றமு மற்றுவன் றுணையும்
பலருங் கண்டழு தெழவுயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சய மறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்தடங் கண்ணி பங்கனை யுயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௮

நமையெ லாம்பல ரிகழ்ந்துரைப் பதன்மு
னன்மை யொன்றிலாத் தேரர்புன் சமணும்
சமய மாகிய தவத்தினு ரவத்தத்
தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்
உமையொர் கூறனை யேறுகந் தானை
யும்ப ராதியை யெம்பெரு மானைச்
சிமய மார்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. ௯

நீடு பொக்கையிற் பிறவியைப் பழித்து
நீங்க லாமென்று மனத்தினைத் தெருட்டிச்
சேடு லாம்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைத் திருவடி யிணைதான்
நாடெ லாம்புகழ் நாவலூ ராளி
நம்பிவன் றொண்ட னூர னுரைத்த
பாட லாந்தமிழ் பத்திவை வல்லார்
முத்தி யாவது பரகதிப் பயனே. ௰

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - திருநந்தீசுவரர்; இறைவி - இளங்கொம்பன்னாள்.



## திருநின்றியூர் பதிகம் ௬௫

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவும் வண்மையுந் திண்டிற லரசுஞ்
சிலந்தியார் செய்த செய்பணி கண்டு
மருவு கோச்செங்க ணான்றனக் களித்த
வார்த்தை கேட்டுநுன் மலரடி யடைந்தேன்
பெருகு பொன்னிவந் துந்துபன் மணியைப்
பிள்ளைப் பல்கணம் பண்ணையு ணண்ணித்
தெருவுந் தெற்றியு முற்றமும் பற்றித்
திரட்டுந் தென்றிரு நின்றியூ ரானே.

அணிகொ ளாடையம் பூணணி மாலை
யமுது செய்தமு தம்பெறு தண்டி
இணைகொ ளேழெழு நூறிரும் பனுவ
லீன்ற வன்றிரு நாவினுக் கரையன்
கணைகொள்கண் ணப்ப னென்றிவர் பெற்ற
காத லின்னரு ளாதரித் தடைந்தேன்
திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. ௨

மொய்த்தசீர் முந்நூற் றறுபது வேலி
மூன்று நூறுவே தியரொடு நுனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி
யோங்கு நின்றியூ ரென்றுனக் களிப்பப்
பத்தி செய்தவப் பரசு ராமற்குப்
பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்குஞ்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. ௬.

இரவி நீள்சுட ரெழுவதன் முன்ன
மெழுந்து தன்முலைக் கலசங்க ளேந்திச்
சுரபி பால்சொரிந் தாட்டிநின் பாதந்
தொடர்ந்த வார்த்தை திடம்படக் கேட்டுப்
பரவி யுள்கிவன் பாசத்தை யறுத்துப்
பரம வந்துநுன் பாதத்தை யடைந்தேன்
நிரவி னித்தில மத்தகு செம்பொ
னளிக்குந் தென்றிரு நின்றியூ ரானே. ௭

வந்தொ ரிந்திரன் வழிபட மகிழ்ந்து
வான நாடுநீ யாள்கென வருளிச்
சந்தி மூன்றிலுந் தாபர நிறுத்திச்
சகளி செய்திறைஞ் சகத்தியர் தமக்குச்
சிந்து மாமணி யணிதிருப் பொதியிற்
சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன்
செந்தண் மாமலர்த் திருமகண் மருவுஞ்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. ௮

காது பொத்தரைக் கின்னர ருழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயம்
கோதின் மாதவர் குழுவுடன் கேட்பக்
கோல வானிழற் கீழறம் பகர
ஏதஞ் செய்தவ ரெய்திய வின்ப
மியானுங் கேட்டுநின் னிணையடி யடைந்தேன்
நீதி வேதியர் நிறைபுக ழுலகி
னிலவு தென்றிரு நின்றியூ ரானே. ௯

கோடு நான்குடைக் குஞ்சரங் குலுங்க
நலங்கொள் பாதநின் றேத்திய பொழுதே
பீடு விண்மிசைப் பெருமையும் பெற்ற
பெற்றி கேட்டுநின் பொற்கழ லடைந்தேன்
பேடை மஞ்ஞையும் பிணைகளின் கன்றும்
பிள்ளைக் கிள்ளையு மெனப்பிறை நுதலார்
நீடு மாடங்கண் மாளிகை தோறு
நிலவு தென்திரு நின்றியூ ரானே. எ

| | | | | |
|---|---|---|---|---|
| * | * | * | * | அ |
| * | * | * | * | கூ |
| * | * | * | * | ω |

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மகாலட்சுமிநாதர்; இறைவி-உலகநாயகி.

---

பதிக வரலாறு :

திருநனிபள்ளி, திருச்செம்பொன்பள்ளி முதலிய பதிகளைப் பணிந்து சென்று திருநின்றியூரை யடைந்த திருவாரூரர், அன்பினுள் ளுருகிப் பாடுவாராய், உடையவரசாய திருநாவுக்கரசு நாயனர் உலகம் இடர் நீங்கி யுய்யுமாறு எழுநூறு திருப்பதிகம் பாடிய செய்தியைச் சிறப்பித்துப் பாடினர்.



## திருவாவடுதுறை பதிகம் சாசா

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறையவ னொரு மாணிவந் தடைய
வார மாயவ னருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவ னெம்பெரு மானென் றெப்போது
மேத்தி யேத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடு மடைந்தே
னாவ டுதுறை யாதியெம் மானே.

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தே
னாவ டுதுறை யாதியெம் மானே. ௨

திகழு மாலவ னாயிர மலரா
லேத்து வானொரு நீண்மலர் குறையப்
புகழி னாலவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன்
திகழு நின்றிருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் றிறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தே
னாவ டுதுறை யாதியெம் மானே. ௩

வீரத் தாலொரு வேடுவ னாகி
விசைத்தோர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தாலுன நாமங்கள் பரவி
வழிபட் டுன்றிற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை யடைந்தே
னாவ டுதுறை யாதியெம் மானே. ௪

ஒக்க முப்புர மோங்கெரி தூவ
வுன்னை யுன்னி யமூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னாலரு ளீந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதியா வாதி மூர்த்திநின் னரையில்
அக்க ணிந்தவெம் மானுனை யடைந்தே
னாவ டுதுறை யாதியெம் மானே. ௫

* * * * ௬

* * * * எ

* * * * அ

* * * * ௯

* * * * ௧0

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மாசிலாமணியீசுவரர்; இறைவி - ஒப்பிலாமுலையம்மை.

---

பதிக வரலாறு:

திருவரிசிற்கரைப் புத்தூரினின்றும் புறப்பட்டுப் பல திருப்பதிகளை வணங்கித் திருவாவடு துறையை யடைந்த மூனைப்பாடித் தலைவர் திருக்கோயிலை வலம் வந்து உருகு மன்புடன் உள்புகுந் தேத்துவார், இப்பதிகத்தை யெடுத்து அதில் வளவன் செங்கணன் குணங்கொள் பிறப்புஞ் சிறப்பித்துத் தமிழ்ச்சொன்மாலை சாத்தினர்.



## திருவலிவலம் பதிகம் ௬௭

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஊனங் கைத்துயிர்ப் பாயுல கெல்லா
மோங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் குமளப் பரிய
வள்ள லையடி யார்கடம் முள்ளத்
தேனங் கத்தமு தாகியுள் ளூறுந்
தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

௧௬அ

பல்லடி யார்பணிக் குப்பரி வானைப்
பாடியா டும்பத்தர்க் கன்புடை யானைச்
செல்லடி யேநெருக் கித்திறம் பாது
சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை
நல்லடி யார்மனத் தெய்ப்பினில் வைப்பை
நானுறு குறையறிந் தருள்புரி வானை
வல்லடி யார்மனத் திச்சையு ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. உ

ஆழிய னயகன் றேயுயர்ந் தானை
யாதியந் தம்பணி வார்க்கணி யானைக்
கூழைய ராகிப்பொய் யேகுடி யோம்பிக்
குழைந்து மெய்யடி யார்குழுப் பெய்யும்
வாழியர்க் கேவழு வாநெறி காட்டி
மறுபிறப் பென்னை மாசறுத் தானை
மாழையொண் கண்ணுமை யைமகிழ்ந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௯

நாத்தா னுன்றிற மேதிறம் பாது
நண்ணியண் ணித்தமு தம்பொதிந் தூறும்
ஆத்தா னையடி யேன்றனக் கென்று
மளவிறந் தபஃ றேவர்கள் போற்றும்
சோத்தா னைச்சுடர் மூன்றிலு மொன்றித்
துருவி மால்பிர மன்னறி யாத
மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ச

நல்லிசை ஞானசம் பந்தனு நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானைத்
தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்லி யன்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ரு

பாடுமா பாடிப் பணியுமா றறியேன்
பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன்
தேடுமா தேடித் திருத்துமா றறியேன்
செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்
கூடுமா றெங்ஙன மோவென்று கூறக்
குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை யாண்டு
வாடிநீ வாளா வருந்தலென் பானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. சு

பந்தித்தவ் வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்
சந்தித் தத்திற லாற்பணி பூட்டித்
தவத்தை யீட்டிய தம்மடி யார்க்குச்
சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. எ

எவ்வவர் தேவ ரிருடிகண் மன்ன
ரெண்ணிறந் தார்கண்மற் றெங்குநின் றேத்த
அவ்வவர் வேண்டிய தேபருள் செய்து
வடைந்தவர்க் கேமிட மாகிநின் றானை
இவ்வவர் கருணையெங் கற்பகக் கடலை
யெம்பெரு மானரு ளாயென்ற பின்னை
வவ்வியென் னாவி மனங்கலந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. அ

திரியு முப்புரஞ் செற்றதுங் குற்றத்
திறல ரக்கனைச் செறுத்தது மற்றைப்
பெரிய நஞ்சமு துண்டது முற்றும்
பின்னையாய் முன்ன மேமுளைத் தானை
அரிய நான்மறை யந்தண ரோவா
தடிப ணிந்தறி தற்கரி யானை
வரையின் பாவைம ணாளனெம் மானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

என்ற வந்தணன் றலையினை யறுத்து
நிறைக்க மாலுதி ரத்தினை யேற்றுத்
தோன்று தோண்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மாவிர தத்தகங் காளன்
சான்று காட்டுதற் கரியவ னெளியவன்
றன்னைத் தன்னி லாமனத் தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௰

கலிவ லங்கெட வாரழ லோம்புங்
கற்ற நான்மறை முற்றன லோம்பும்
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன்
மன்னு நாவலா ரூரன்வன் றொண்டன்
ஒலிகொ ளின்னிசைச் செந்தமிழ் பத்து
முள்ளத் தாலுகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவ ரேத்த
விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - மனத்துணைநாதர்; இறைவி - மாழையங்கண்ணியம்மை.

---

**பதிக வரலாறு :**

நம்பியாரூரர் திருநாட்டியத்தான் குடியிலிருந்து திருவலிவலத்தை யடைந்து இறைவனை வணங்கிப் பாடுகின்றவர், தாமெடுத்த 'ஊனங் கைத்துயிர்ப்பாய்' என்னுந் திருப்பதிகத்தில், ஐந்தாந் திருப்பாட்டில் நல்லிசை ஞானசம்பந்தனு நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லி யேத்துகப் பானை' என்று நன்று மகிழுஞ் சம்சந்தர் நாவுக்கரசர் பாட்டுவந்த செய்கையைச் சிறப்பித்தருளினார்.



திருநள்ளாறு பதிகம் ௬௮

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

செம்பொன் மேனிவெண் ணீறணி வானைக்
கரிய கண்டனை மாலயன் காணாச்
சம்பு வைத்தழ லங்கையி னானைச்
சாம வேதனைத் தன்னொப்பி லானைக்
கும்ப மாகரி யின்னுரி யானைக்
கோவின் மேல்வருங் கோவினை யெங்கள்
நம்ப னைநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. ௧

விரைசெய் மாமலர்க் கொன்றையி னானை
வேத கீதனை மிகச்சிறந் துருகிப்
பரசு வார்வினைப் பற்றறுப் பானைப்
பாடலொ டானஞ்சு மாடவல் லானைக்
குரைக டல்வரை யேழுல குடைய
கோனை ஞானக் கொழுந்தினைக் கொல்லை
நரைவிடை யுடைநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. ௨

பூவில்வா சத்தைப் பொன்னினை மணியைப்
புவியைக் காற்றினைப் புனலனல் வெளியைச்
சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவ தேவனைத் தித்திக்குந் தேனைக்
காவியங் கண்ணி பங்கனைக் கங்கைச்
சடைய னைக்கா மரத்திசை பாட
நாவி லூறுநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. ௩

தஞ்ச மென்றுதன் றாளது வடைந்த
பாலன்மேல் வந்த காலனை யுருள
நெஞ்சி லோருதை கொண்டபி ரானை
நினைப்ப வர்மன நீங்ககில் லானை
விஞ்சை வானவர் தானவர் கூடிக்
கடைந்த வேலையுண் மிக்கெழுந் தெரியும்
நஞ்ச முண்டநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ச

மங்கை பங்கனை மாசிலா மணியை
வான நாடனை யேனமோ டன்னம்
எங்கு நாடியுங் காண்பரி யானை
யேழை யேற்கெளி வந்தபி ரானை
அங்க நான்மறை யானிறை கின்ற
வந்த ணாள ரடியது போற்றும்
நங்கள் கோனைநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. ரு

கற்ப கத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
சொற்ப தப்பொரு ளிருளறுத் தருளுந்
தூய சோதியை வெண்ணெய்நல் லூரில்
அற்பு தப்பழ வாவணங் காட்டி
யடிய னாவென்னை யாளது கொண்ட
நற்ப தத்தைநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. சா

மறவ னாயன்று பன்றிப்பின் சென்ற
மாயனை நால்வர்க் காலின்கீ ழுரைத்த
அறவ னையம ரர்க்கரி யானை
யமரர் சேனைக்கு நாயக னானை
குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற
கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்கும்
நறை விரியுநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. எ

மாதி னுக்குடம் பிடங்கொடுத் தானை
மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும்
வேதனை வேத வேள்வியர் வணங்கும்
விமல னையடி யேற்கெளி வந்த
தூதனைத் தன்னைத் தோழமை யருளித்
தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும்
நாத னைநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. அ

இலங்கை வேந்தனெழிறிகழ் கயிலை
யெடுப்ப வாங்கிம வான்மக ளஞ்சத்
துலங்கு நீண்முடி யொருபதுந் தோள்க
ளிருப துங்நெரித் தின்னிசை கேட்டு
வலங்கை வாளொடு நாமமுங் கொடுத்த
வள்ளலைப் பிள்ளை மாமதிச் சடைமேல்
நலங்கொள் சோதிநள் ளாறனை யமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. கூ

செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெஞ்
சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை
மறந்து நான்மற்று நினைப்பதே தென்று
வனப்பகை யப்ப னூரன்வன் றொண்டன்
சிறந்த மாலைக ளஞ்சினோ டஞ்சுஞ்
சிந்தையுள் ளுருகிச் செப்ப வல்லார்க்
கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி
யின்ப வெள்ளத்து ளிருப்பர்க ளினிதே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - தர்ப்பாரணியேசுவரர்;
இறைவி - போகமார்த்தபூண்முலையம்மை.

## வட திருமுல்லைவாயில் பதிகம் ௬௧

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவுமெய்ப்பொருளுஞ் செல்வமுமெனக்குன்
சீருடைக்கழல்களென் றெண்ணி
ஒருவரைமதியா துறுமைகள்செய்து
மூடியுமுறைப்பனாய்த் திரிவேன்
முருகமர்சோலை சூழ்திருமுல்லை
வாயிலாய்வாயி லுன்னைப்
பரவிடுமடியேன் படுதுயர்களையாய்
பாசுபதா பரஞ்சுடரே. ௧

கூடியவிலயஞ் சதிபிழையாமைக்
கொடியிடையுமையவள் காண
ஆடியவழகா வருமறைப்பொருளே
யங்கணாவெங்குற்று யென்று
தேடியவானோர் சேர்திருமுல்லை
வாயிலாய்திருப்புகழ் விருப்பால்
பாடியவடியேன் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே. ௨

விண்பணிந்தேத்தும் வேதியாமாதர்
வெருவிடவேழமன் றுரித்தாய்
செண்பகச்சோலை சூழ்திருமுல்லை
வாயிலாய்தேவர்தம் மரசே
தண்பொழிலொற்றி மாநகருடையாய்
சங்கிலிக்காவென்கண் கொண்ட
பண்பநின்னடியேன் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே. ௩

பொன்னலங்கழனிப் புதுவிரைமருவிப்
பொறிவரிவண்டிசை பாட
அந்நலங்கமலத் தவிசின்மேலுறங்கு
மலவன்வந்துலவிட வள்ளல்
செந்நெலங்கழனி சூழ்திருமுல்லை
வாயிலாய்திருப்புகழ் விருப்பால்
பன்னலந்தமிழாற் பாடுவேற்கருளாய்
பாசுபதாபரஞ் சுடரே.

சந்தனவேருங் காரகிற்குறடுந்
தண்மயிற்பீலியுங் கரியின்
தந்தமுந்தரளக் குவைகளும்பவளக்
கொடிகளுஞ்சுமந்துகொண் டுந்தி
வந்திழிபாலி வடகரைமுல்லை
வாயிலாய்மாசிலா மணியே
பந்தனைகெடுத்தென் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே.

மற்றுநான்பெற்ற தார்பெறவல்லார்
வள்ளலேகள்ளமே பேசிக்
குற்றமேசெயினுங் குணமெனக்கொள்ளுங்
கொள்கையான்மிகைபல செய்தேன்
செற்றுமீதோடுந் திரிபுரமெரித்த
திருமுல்லைவாயிலா யடியேன்
பற்றிலேனுற்ற படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே.

மணிகெழுசெவ்வாய் வெண்ணகைக்கரிய
வார்குழன்மாமயிற் சாயல்
அணிகெழுகொங்கை யங்கயற்கண்ணா
ரருநடமாட லறாத
திணிபொழிறழுவு திருமுல்லைவாயிற்
செல்வனேயெல்லியும் பகலும்
பணியதுசெய்வேன் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே.

நம்பனேயன்று வெண்ணெய்நல்லூரி
னாயினேன்றன்னையாட் கொண்ட
சம்புவேயும்ப ரார்தொழுதேத்துந்
தடங்கடனஞ்சுண்ட கண்டா
செம்பொன்மாளிகைசூழ் திருமுல்லைவாயிற்
றேடியான்றிரிதர்வேன் கண்ட
பைம்பொனேயடியேன் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே. ௮

மட்டுலாமலர்கொண் டடியிணைவணங்கு
மாணிதன்மேன்மதி யாதே
கட்டுவான்வந்த காலனைமாளக்
காலினாலாருயிர் செகுத்த
சிட்டனேசெல்வத் திருமுல்லைவாயிற்
செல்வனேசெழுமறை பகர்ந்த
பட்டனேயடியேன் படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே. ௯

சொல்லரும்புகழான் றொண்டைமான்களிற்றைச்
சூழ்கொடிமுல்லையாற் கட்டிட்
டெல்லையிலின்ப மவன்பெறவெளிப்பட்
டருளியவிறைவனே யென்றும்
நல்லவர்பரவுந் திருமுல்லைவாயி
னாதனேநரைவிடை யேறீ
பல்கலைப்பொருளே படுதுயர்களையாய்
பாசுபதாபரஞ் சுடரே. ௰

விரைதருமலர்மே லயனொடுமாலும்
வெருவிடநீண்டவெம் மானைத்
திரைதருபுனல்சூழ் திருமுல்லைவாயிற்
செல்வனைநாவலா ரூரன்

உரைதருமாலையோ ரஞ்சினோடஞ்சு
முள்குளிர்ந்தேத்தவல் லார்கள்
நரைதிரைமூப்பு நடலையுமின்றி
நண்ணுவர்விண்ணவர்க்கரசே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது

இறைவன் - பாசுபதேசுவரர்; இறைவி - கொடியிடைநாயகியம்மை.

---

**பதிக வரலாறு:**

திருவொற்றியூரைக் கடந்து கண்கள் மறையப்பெற்ற வன்றொண்டர் திருமுல்லைவாயிலை யடைந்து இறைவனை வணங்கி இத்திருப்பதிக மெடுத்து அதில் சங்கிலிக்காகத் தம் கண்களை மறைத்ததையும், தொண்டைமானுக்கருளிய திறத்தையும் வைத்துத் தமது வெந்துயர் களையுமாறு பரவிக் குறித்த காதலோடு நெறிக்கொண்டு திருவெண்பாக்கத்தை யடைந்தார்.



## திருவாவடுதுறை பதிகம் ௭௰

பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கங்கைவார்சடை யாய்கணநாதா
காலகாலனே காமனுக்கனலே
பொங்குமாகடல் விடமிடற்றானே
பூதநாதனே புண்ணியாபுனிதா
செங்கண்மால்விடை யாய்தெளிதேனே
தீர்த்தனேதிரு வாவடுதுறையுள்
அங்கணாவெனை யஞ்சலென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே. ௧

மண்ணின்மேன்மயங் கிக்கிடப்பேனை
வலியவந்தெனை யாண்டுகொண்டானே
கண்ணிலேனுடம் பில்லடுநோயாற்
கருத்தழிந்துனக் கேபொறையானேன்
தெண்ணிலாவெறிக் குஞ்சடையானே
தேவனேதிரு வாவடுதுறையுள்
அண்ணலேயெனை யஞ்சலென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே. ௨

ஒப்பிலாமுலை யாளொருபாகா
வுத்தமாமத்த மார்தருசடையாய்
முப்புரங்களைத் தீவளைத்தங்கே
மூவருக்கருள் செய்யவல்லானே
செப்பவானிழற் கீழிருந்தருளுஞ்
செல்வனேதிரு வாவடுதுறையுள்
அப்பனேயெனை யஞ்சலென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே. ௩

கொதியினால்வரு காளிதன்கோபங்
குறையவாடிய கூத்துடையானே
மதியிலேனுடம் பில்லடுநோயான்
மயங்கினேன்மணி யேமணவாளா
விதியினாலிமை யோர்தொழுதேத்தும்
விகிர்தனேதிரு வாவடுதுறையுள்
அதிபனேயெனை யஞ்சலென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே. ௪

வந்தவாளரக் கன்வலிதொலைத்து
வாழுநாள்கொடுத் தாய்வழிமுதலே
வெந்தவெண்பொடிப் பூசவல்லானே
வேடனாய்விச யற்கருள்புரிந்த
இந்துசேகர னேயிமையோர்சீ
ரீசனேதிரு வாவடுதுறையுள்
அந்தணாவெனை யஞ்சலென்றருளா
யாரெனக்குற வமரர்களேறே. ௫

அங்கங்களு மறைநான்குடன் விரித்தானிட மறிந்தோம்
தெங்கங்களு நெடும்பெண்ணையும் பழம்வீழ்மணற் படப்பைச்
சங்கங்களு மிலங்கிப்பியும் வலம்புரிகளு மிடறி
வங்கங்களு முயர்கூம்பொடு வணங்கும்மறைக் காடே. ௩

நரைவிரவிய மயிர்தன்னொடு பஞ்சவ்வடி மார்பன்
உரைவிரவிய வுத்தமனிட முணரல்லுறு மனமே
குரைவிரவிய குலசேகரக் கொண்டற்றலை விண்ட
வரைபுரைவன திரைபொருதிழிந் தெற்றும்மறைக் காடே. ௪

சங்கைப்பட நினையாதெழு நெஞ்சேதொழு தேத்தக்
கங்கைச்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
அங்கக்கட லருமாமணி யுந்திக்கரைக் கேற்ற
வங்கத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. ௫

அடல்விடையினன் மழுவாளின னல்லாரணி கொன்றைப்
படருஞ்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவைக்
கடலிடையிடை கழியருகினிற் கடிநாறுதண் கைதை
மடலிடையிடை வெண்குருகெழு மணிநீர்மறைக் காடே. ௬

முளைவளரிள மதியுடையவன் முன்செய்தவல் வினைகள்
களைகளைந்தெனை யாளல்லுறு கண்டன்னிடஞ் செந்நெல்
வளைவிளைவயற் கயல்பாய்தரு குணவார்மணற் கடல்வாய்
வளைவளையொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே.

நலம்பெரியன சுரும்பார்ந்தன நங்கோனிட மறிந்தோம்
கலம்பெரியன சாருங்கடற் கரைபொருதிழி கங்கைச்
சலம்புரிசடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
வலம்புரியொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே.

குண்டாடியுஞ் சமணாடியுங் குற்றுடுக்கையர் தாமும்
கண்டார்கண்ட காரணம்மவை கருதாதுகை தொழுமின்
எண்டோளினன் முக்கண்ணின னேழிசையின னறுகால்
வண்டாடுதண் பொழில்சூழ்ந்தெழு மணிநீர்மறைக் காடே. ௯

பாரூர்பல புடைசூழ்வள வயலுவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-மறைக்காட்டீசுவரர், இறைவி - யாழைப்பழித்தநாயகி.



## திருவலம்புரம் பதிகம் எஉ

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்றமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்றன திடம்வலம் புரமே. க

புரமவை யெரிதர வளைந்தவில் லினனவன்
மரவுரி புலியத ளரைமிசை மருவினன்
அரவுரி யிரந்தய னிரந்துண விரும்பிநின்
றிரவெரி யாடித னிடம்வலம் புரமே. உ

நீறணி மேனிய னெருப்புமி ழரவினன்
கூறணி கொடுமழு வேந்தியோர் கையினன்
ஆறணி யவிர்சடை யழல்வளர் மழலைவெள்
ளேறணி யடிகட மிடம்வலம் புரமே. ங.

கொங்கணை சுரும்புண நெருங்கிய குளிரிளம்
தெங்கொடு பனைபழம் படுமிடந் தேவர்கள்
தங்கிடு மிடந்தடங் கடற்றிரை புடைதர
எங்கள தடிகள திடம்வலம் புரமே. ௪

கொடுமழு விரகினன் கொலைமலி சிலையினன்
நெடுமதிள் சிறுமையி னிரவவல் லவனிடம்
படுமணி முத்தமும் பவளமு மிகச்சுமந்
திடுமண லடைகரை யிடம்வலம் புரமே. ௫

கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்
நெருங்கிய நெடும்பெணை யடும்பொடு விரவிய
மருங்கொடு வலம்புரி சலஞ்சல மணம்புணர்ந்
திருங்கட லடைகரை யிடம்வலம் புரமே. ௬

நரிபுரி காடரங் காநட மாடுவர்
வரிபுரி பாடநின் றாடுமெம் மானிடம்
புரிசுரி வரிகுழ லரிவையொர் பான்மகிழ்ந்
தெரியெரி யாடித னிடம்வலம் புரமே. ௭

பாறணி முடைதலை கலனென மருவிய
நீறணி நிமிர்சடை முடியின னிலவிய
மாறணி வருதிரை வயலணி பொழிலது
ஏறுடை யடிகட னிடம்வலம் புரமே. ௮

சடசட விடுபெணை பழம்படு மிடவகை
படபட கத்தொடு பலிகலந் துலவிய
கடைகடை பலிதிரி கபாலித னிடமது
இடிகரை மணலடை யிடம்வலம் புரமே. ௯

குண்டிகைப் படப்பினில் விடக்கினை யொழித்தவர்
கண்டவர் கண்டடி வீழ்ந்தவர் கனைகழல்
தண்டுடைத் தண்டித னினமுடை யரவுடன்
எண்டிசைக் கொருசுட ரிடம்வலம் புரமே. ௰

வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமி ழூரன்வன் றொண்டன்சொல்
பெருங்குலத் தவரொடு பிதற்றுதல் பெருமையே. கக

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வலம்புரநாதர்; இறைவி - வடுவகிர்க்கண்ணம்மை.



## திருவாரூர் பதிகம் எ௪

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

கரையுங்கடலு மலையுங் காலையுமாலையு மெல்லாம்
உரையில்விரவி வருவா னொருவனுருத்திர லோகன்
வரையின்மடமகள் கேள்வன் வானவர்தானவர்க் கெல்லாம்
அரையனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். க

தனியனென்றெள்கி யறியேன் றம்மைப்பெரிது முகப்பன்
முனிபவர்தம்மை முனிவன் முகம்பலபேசி மொழியேன்
கனிகள்பலவுடைச் சோலைக் காய்க்குலையீன்ற கமுகின்
இனியனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். உ

சொல்லிற்குலாவன்றிச் சொல்லேன் றொடர்ந்தவர்க்குந்துணை யல்லேன்
கல்லில்வலிய மனத்தேன் கற்றபெரும்புல வாணர்
அல்லல்பெரிது மறுப்பா னருமறையாறங்க மோதும்
எல்லையிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். ௩

நெறியுமறிவுஞ் செறிவு நீதியுநான்மிகப் பொல்லேன்
மிறையுந்தறியு முகப்பன் வேண்டிற்றுச்செய்து திரிவன்
பிறையுமரவும் புனலும் பிறங்கியசெஞ்சடை வைத்த
இறைவனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். ௪

நீதியிலொன்றும் வழுவே னிட்கண்டகஞ்செய்து வாழ்வேன்
வேதியர்தம்மை வெருளேன் வெகுண்டவர்க்குந் துணை யாகேன்
சோதியிற்சோதியெம் மானைச் சுண்ணவெண்ணீ றணிந் திட்ட
ஆதியிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். ரு

அருத்தம்பெரிது முகப்ப னல்லலையேனலந் தார்கள்
ஒருத்தர்க்குதவியே னல்லே னுற்றவர்க்குந் துணை யல்லேன்
பொருத்தமேலொன்று மிலாதேன் புற்றெடுத்திட்டிடங் கொண்ட
அத்தனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். சா

சந்தம்பலவறுக் கில்லேன் சார்ந்தவர்தம்மடிச் சாரேன்
முந்திப்பொருவிடை யேறி மூவுலகுந்திரி வானை
கந்தங்கமழ்கொன்றை மாலைக் கண்ணியன்விண்ணவ ரேத்தும்
எந்தையிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். எ

நெண்டிக்கொண்டேயுங் கிலாய்ப்ப னிச்சயமேபிது திண்ணம்
மிண்டர்க்குமிண்டலாற் பேசேன் மெய்ப்பொருளன்றி யுணரேன்
பண்டங்கிலங்கையர் கோனைப் பருவரைக்கீழடர்த் திட்ட
அண்டனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். அ

நமர்பிறரென்ப தறியே னன்கண்டதேகண்டு வாழ்வேன்
தமரம்பெரிது முகப்பன் றக்கவாறொன்று மிலாதேன்
குமரன்றிருமால் பிரமன் கூடியதேவர் வணங்கும்
அமரனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். கூ

ஆசைபலவறுக் கில்லே னாரையுமன்றி யுரைப்பேன்
பேசிற்சழக்கலாற் பேசேன் பிழைப்புடையேன்மனந் தன்னால்
ஓசைபெரிது முகப்பா னொலிகடனஞ்சமு துண்ட
ஈசனிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ கேளீர். ய

எந்தையிருப்பது மாரூ ரவரெம்மையுமாள்வரோ வென்று
சிந்தைசெயுந்திறம் வல்லான் றிருமருவுந்திர டோளன்
மந்தமுழவ மியம்பும் வளவயனாவலா ரூரன்
சந்தமிசையொடும் வல்லார் தாம்புகழெய்துவர் தாமே. கக

திருச்சிற்றம்பலம்

*பதிக வரலாறு :*

*திருக்கோயிலினின்றும் புறப்பட்டுத் திருக்கழுமலம் திருக்கோலக்கா திருப்புன்கூர் திருமயிலாடுதுறை திருப்புகலூர் முதலான திருப்பதிகளை வணங்கிக்கொண்டு ஆளுடைய நம்பிகள் திருவாரூரை யடைந்தபோது, வீதிவிடங்கப் பெருமான் திருவாரூர் வாழ்வாருக்கு ஆராத காதலின் ஆரூரன் நாமழைக்க வாராநின்றான்; அவனை மகிழ்ந்தெதிர்கொள்வீரென்று பணித்தருளலும், அவர்கள் யாவரும் இறைவர்திருவருளிதுவானால் நம்பிரானாவா ரவ் வன்றொண்டரே யென்று மேலுலகம் கீழிழிந்ததென்னுமாறு நகரையணிசெய்வித்துப் பலவகையான மங்கலங்களோடு நகர்ப்புறத்தே வந்து அவரை எதிர்கொண்டார்கள். எதிர்கொண்டு ஒன்றுகூடி அளவளாவி ஒருவரையொருவர் வணங்கித் தெருவிலே செல்லுங்கால் வன்றொண்டர் அத்தொண்டரை நோக்கி 'எந்தையிருப்பது மாரூர் அவர் எம்மையுமாள்வரோ கேளீர்' என்று வைத்து இப்பதிகம்பாடித் திருக்கோயிலையடைந்து இறைவனை வணங்கினார்.*

## திருத்துருத்தியும்
## திருவேள்விக்குடியும் பதிகம் ௭௪

**பண் - காந்தாரம்**

*திருச்சிற்றம்பலம்*

மின்னுமாமேகங்கள் பொழிந்திழிந்தருவி
வெடிபடக்கரையொடுந் திரைகொணர்ந்தெற்றும்
அன்னமாங்காவிரி யகன்கரையுறைவா
ரடியிணைதொழுதெழு மன்பராமடியார்
சொன்னவாறறிவார் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனாயேன்
என்னைநான்மறக்குமா றெம்பெருமானை
யென்னுடம்படும்பிணி யிடர்கெடுத்தானை. ௧

கூடுமாறுள்ளன கூடியுங்கோத்துங்
கொய்புனவேனலோ டைவனஞ்சிதறி
மாடுமாகோங்கமே மருதமேபொருது
மலையெனக்குலைகளை மறிக்குமாறுந்தி
ஓடுமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனாயேன்
பாடுமாறறிகிலே னெம்பெருமானைப்
பழவினையுள்ளன பற்றறுத்தானை. ௨

கொல்லுமால்யானையின் கொம்பொடுவம்பார்
கொழுங்கனிச்செழும்பயன் கொண்டுகூட்டெய்திப்
புல்கியுந்தாழ்ந்தும் போந்துதவஞ்செய்யும்
போகரும்யோகரும் புலரிவாய்மூழ்கச்
செல்லுமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனாயேன்
சொல்லுமாறறிகிலே னெம்பெருமானைத்
தொடர்ந்தடுங்கடும்பிணித் தொடர்வறுத்தானை. ௩

பொறியுமாசந்தனத் துண்டமோடகிலும்
பொழிந்திழிந்தருவிகள் புன்புலங்கவரக்
கறியுமாமிளகொடு கதலியுமுந்திக்
கடலுறவிளைப்பதே கருதித்தன்கைபோய்
எறியுமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனாயேன்
அறியுமாறறிகிலே னெம்பெருமானை
யருவினையுள்ளன வாசறுத்தானை. ௪

பொழிந்திழிமும்மதக் களிற்றினமருப்பும்
பொன்மலர்வேங்கையி னன்மலருந்தி
இழிந்திழிந்தருவிகள் கடும்புனலீண்டி
யெண்டிசையோர்களு மாடவந்திங்கே
சுழிந்திழிகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனாயேன்
ஒழிந்திலேன்பிதற்றுமா றெம்பெருமானை
யுற்றநோயிற்றையே யுறவொழித்தானை. ௫

புகழுமாசந்தனத் துண்டமோடகிலும்
பொன்மணிவரன்றியு நன்மலருந்தி
அகழுமாவருங்கரை வளம்படப்பெருகி
யாடுவார்பாவந்தீர்த் தஞ்சனமலம்பித்
திகழுமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனுயேன்
இகழுமாறறிகிலே னெம்பெருமானை
யிழித்தநோயிம்மையே யொழிக்கவல்லானை. சு

வரையின்மாங்கனியொடு வாழையின்கனியும்
வருடியும்வணக்கியு மராமரம்பொருது
கரையுமாகருங்கடல் காண்பதேகருத்தாய்க்
காம்பீலிசுமந்தொளிர் நித்திலங்கைபோய்
விரையுமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனுயேன்
உரையுமாறறிகிலே னெம்பெருமானை
யுலகறிபழவினை யறவொழித்தானை. எ

ஊருமாதேசமே மனமுகந்துள்ளிப்
புள்ளினம்பலபடிந் தொண்கரையுகளக்
காருமாகருங்கடல் காண்பதேகருத்தாய்க்
கவரிமாமயிர்சுமந் தொண்பளிங்கிடறித்
தேருமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனுயேன்
ஆருமாறறிகிலே னெம்பெருமானை
யம்மைநோயிம்மையே யாசறுத்தானை. அ

புலங்களைவளம்படப் போக்கறப்பெருகிப்
பொன்களேசுமந்தெங்கும் பூசல்செய்தார்ப்ப
இலங்குமார்முத்தினே டினமணியிடறி
யிருகரைப்பெருமரம் பீழ்ந்துகொண்டெற்றிக்
கலங்குமாகாவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் செடியனேனுயேன்
விலங்குமாறறிகிலே னெம்பெருமானை
மேலைநோ யிம்மையே வீடுவித்தானை. கூ

மங்கையோர்கூறுகந் தேறுகந்தேறி
மாறலார்திரிபுர நீறெழச்செற்ற
அங்கையான்கழலடி யன்றிமற்றறியா
னடியவர்க்கடியவன் றொழுவனாரூரன்
கங்கையார்காவிரித் துருத்தியார்வேள்விக்
குடியுளாரடிகளைச் சேர்த்தியபாடல்
தங்கையாற்றொழுதுதந் நாவின்மேற்கொள்வார்
தவநெறிசென்றமர ருலகமாள்பவரே. ய

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

திருவாவடுதுறையில் வணங்கிய திருநாவலூரர் திருத்துருத்தியை யடைந்து இறைவரை விருப்பினுடன் சென்றிறைஞ்சி அடியேன்மே லுற்ற பிணிவருத்த மொழித்தருளவேண்டுமென வணங்க, இறைவர் 'வா மலர் வண்டறை தீர்த்த வடகுளத்துக் குளி'யென்று கட்டளையிட்டருளி னார். நம்பியாரூரரும் அவ்வாறே அதனையடைந்து மறைவடிவாயிருந்த துருத்திப் பெருமானைத் தொழுது மூழ்கிய வளவில் புதியதாகிய பிணி யொழிந்து மணியொளிசேர் திருமேனியராய்க் கண்டவர்கள் வியப்பக் கரையேறி உடைபுனைந்து பேரன்போடு கோயிலையடைந்து தொண் டர்களெதிரே இப்பதிகத்தை எண்டிசையுமறிந்துய்ய ஏழிசையாலெடுத் திசைத்தார்.

---

## திருவானைக்கா பதிகம் எரு

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மறைகளாயின நான்கு மற்றுளபொருள்களுமெல்லாம்
துறையுந்தோத்திரத் திறையுந் தொன்மையுநன்மையு மாய
அறையும்பூம்புன லானைக் காவுடையாதியை நாளும்
இறைவனென்றடி சேர்வா ரெம்மையுமாளுடை யாரே. க

வங்கமேவிய வேலை நஞ்செழவஞ்சர்கள் கூடித்
தங்கண்மேலட ராமை யுண்ணெனவுண்டருள் கண்டன்
அங்கமோதிய வானைக் காவுடையாதியை நாளும்
எங்களீசனென் பார்க ளெம்மையுமாளுடை யாரே. உ

நீலவண் டறை கொன்றை நேரிழைமங்கையொர் திங்கள்
சாலவாளர வங்க டங்கியசெஞ்சடை யெந்தை
ஆலநீழலு ளானைக் காவுடையாதியை நாளும்
ஏலுமாறுவல் லார்க ளெம்மையுமாளுடை யாரே. ௩

தந்தைதாயுல குக்கோர் தத்துவன்மெய்த்தவத் தோர்க்குப்
பந்தமாயின பெருமான் பரிசுடையவர்திரு வடிகள்
அந்தண்பூம்புன லானைக் காவுடையாதியை நாளும்
எந்தையென்றடி சேர்வா ரெம்மையுமாளுடை யாரே. ௪

கணைசெந்தீயர வந்நாண் கல்வளையுஞ்சிலை யாகத்
துணைசெய்மும்மதின் மூன்றுஞ் சுட்டவனேயுல குய்ய
அணையும்பூம்புன லானைக் காவுடையாதியை நாளும்
இணைகொள்சேவடி சேர்வா ரெம்மையுமாளுடை யாரே. ௫

விண்ணின்மாமதி சூடி விலையிலிகலனணி விமலன்
பண்ணினேர்மொழி மங்கை பங்கினன்பசுவுகந் தேறி
அண்ணலாகிய வானைக் காவுடையாதியை நாளும்
எண்ணுமாறுவல் லார்க ளெம்மையுமாளுடை யாரே. ௬

தாரமாகிய பொன்னித் தண்டுறையாடி விழுத்தும்
நீரினின்றடி போற்றி நின்மலாகொள்ளென வாங்கே
ஆரங்கொண்டவெம் மானைக் காவுடையாதியை நாளும்
ஈரமுள்ளவர் நாளு மெம்மையுமாளுடை யாரே. ௭

உரவமுள்ளதொ ருழையின் னுரிபுலியதளுடை யானை
விரைகொள்கொன்றையி னானை விரிசடைமேற்பிறை யானை
அரவம்வீக்கிய வானைக் காவுடையாதியை நாளும்
இரவுமெல்லியும்பகலு மேத்துவா ரெம்மையுமாளுடை யாரே.

வலங்கொள்வாரவர் தங்கள் வல்வினைதீர்க்கு மருந்து
கலங்கக்காலனைக் காலாற் காமனைக்கண்சிவப் பானை
அலங்கனீர்பொரு மானைக் காவுடையாதியை நாளும்
இலங்குசேவடி சேர்வா ரெம்மையுமாளுடை யாரே. ௯

ஆழியாற்கரு ளானைக் காவுடையாதிபொன் னடியின்
நீழலேசர ணாக நின்றருள்கூர நினைந்து
வாழவல்லவன் றொண்டன் வண்டமிழ்மாலைவல் லார்போய்
ஏழுமாபிறப் பற்று வெம்மையுமாளுடை யாரே. ம

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - சம்புகேசுவரர்; இறைவி - அகிலாண்டநாயகி.

---

**பதிக வரலாறு :**

திருமழபாடியினின்றும் காவிரியின்மேல்பாற்சென்று வழிபடும் தம்பிரான்றோழர் திருவானைக்காவினை யடைந்து, மெய்ம்மகிழ்ப்பக் கண்பொழி நீர் வெள்ளம் பரப்பி விம்முவாராய் 'மறைகளாயின நான்கும்' என்னும் பதிகம் பாடுகின்றவர், அதில் உறையூர்ச் சோழர் விலைமிக்குயர்ந்த மணிமாலையணிந்து காவிரியில் நீராடுங்கால் அது வழுவி வீழ்ந்துவிட, அவர் மிக்க துயருற்றுச் சிவபிரானை அதனைக் கொண்டருளுமாறு வேண்டியவண்ணம் இறைவன் அதனைத் திருமஞ்சனக் குடத்தில் தருவித்துத் திருமஞ்சனத்தில் அணிந்துகொண்டு அவன் துன்பம் நீக்கிய திறத்தை ஏழாந் திருப்பாட்டில் வைத்துச் சிறப்பித் தேத்தினர்.



## திருவாஞ்சியம் பதிகம் எசு

### பண் - பியந்தைக்காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொருவனார்புரி நூலர் புணர்முலையுமையவ ளோடு
மருவனார்மரு வார்பால் வருவதுமில்லைநம் மடிகள்
திருவனார்பணிந் தேத்துந் திகழ்திருவாஞ்சியத் துறையும்
ஒருவனாரடி யாரை யூழ்வினைநலியவொட் டாரே. க

தொறுவிலானிள வேறு துண்ணெனவிடிகுரல் வெருவிச்
செறுவில்வாளைக ளோடச் செங்கயல்பங்கயத் தொதுங்கக்
கறுவிலாமனத் தார்கள் காண்டகுவாஞ்சியத் தடிகள்
மறுவிலாதவெண் ணீறு பூசுதன்மன்னுமொன் றுடைத்தே. உ

## பியந்தைக் காந்தாரம்

தூர்த்தர்மூவெயி லெய்து சுடுநுனைப்பகழிய தொன்றால்
பார்த்தனார்திர டோண்மேற் பன்னுனைப்பகழிகள் பாய்ச்சித்
தீர்த்தமாமலர்ப் பொய்கைத் திகழ்திருவாஞ்சியத் தடிகள்
சாத்துமாமணிக் கச்சங் கொருதலைபலதலை யுடைத்தே. ௩

சள்ளைவெள்ளையங் குருகு தானதுவாமெனக் கருதி
வள்ளைவெண்மல ரஞ்சி மறுகியொர்வாளையின் வாயில்
துள்ளுதெள்ளுநீர்ப் பொய்கைத் துறைமல்குவாஞ்சியத் தடிகள்
வெள்ளைநுண்பொடிப் பூசும் விகிர்தமொன்றொழிகிலர் தாமே. ௪

மைகொள்கண்டரெண் டோளர் மலைமகளுட னுறை வாழ்க்கைக்
கொய்தகூவிள மாலை குலவியசடைமுடிக் குழகர்
கைதைநெய்தலங் கழனி கமழ்புகழ்வாஞ்சியத் தடிகள்
பைதல்வெண்பிறை யோடு பாம்புடன்வைப்பது பரிசே. ௫

கரந்தைகூவிள மாலை கடிமலர்க்கொன்றையுஞ் சூடிப்
பரந்தபாரிடஞ் சூழ வருவர்நம்பரமர்தம் பரிசால்
திருந்துமாடங்க ணீடு திகழ்திருவாஞ்சியத் துறையும்
மருந்தனாரடி யாரை வல்வினைநலியவொட் டாரே. ௬

அருவிபாய்தரு கழனி யலர்தருகுவளையங் கண்ணார்
குருவியாய்கிளி சேர்ப்பக் குருகினமிரிதரு கிடங்கில்
பருவரால்குதி கொள்ளும் பைம்பொழில்வாஞ்சியத் துறையும்
இருவராலறி யொண்ணா விறைவனதறைகழல் சரணே. ௭

களங்களார்தரு கழனி யளிதரக்களிதரு வண்டு
உளங்களார்கலிப் பாட லும்பரிலொலித்திடுங் காட்சி
குளங்களானிழற் கீழ்நற் குயில்பயில்வாஞ்சியத் தடிகள்
விளங்குதாமரைப் பாத நினைப்பவர்வினைநலி விலரே. ௮

வாழையின்கனி தானா மதுவிம்முவருக்கையின் சுளையும்
கூழைவானரந் தம்மிற் கூறிதுசிறிதெனக் குழறித்
தாழைவாழையந் தண்டாற் செருச்செய்துதருக்குவாஞ் சியத்துள்
ஏழைபாகனை யல்லா லிறையெனக்கருதுத லிலமே. ௯

கூடியடியா ரிருந்தாலுங் குணமொன்றில்லீர் குறிப்பிலீர்
ஊடியிருந்து முணர்கிலே னும்மைத்தொண்ட னாரனேன்
தேடியெங்குங் காண்கிலேன் றிருவாரூரே சிந்திப்பன்
ஆடுந்திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய வடிகளோ. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - செம்பொற்சோதி ; இறைவி - அறம்வளர்த்தநாயகி.

---

பதிக வரலாறு :

மகோதையினின் றெழுந்தருளித் திருவாரூரை யடைந்து நம்பி யாரூரரை வணங்கி அளவளாவி அவரோடுடனிருந்த சேரமான் பெருமா ணாயனார் அவரைப் பலகாலும் வேண்டித் தமது நாட்டுக் கெழுந்தரு ளும்படி இசைவு பெற்றுப் பயணத்திற்குரிய அடியார்களுக்கும் உண விடுவித்தார். பிறகு ஒருநாள் இருநாயன்மார்களும் இறைவனை வணங் கிப் புறப்பட்டு மேல்பாற் செல்கின்றவர்கள் காவிரியின் றென் கரையில் பல திருப்பதிகளையும் வணங்கித் திருக்கண்டியூரை அணைந்து வணங்கி னார்கள். வணங்கியவர்கள் வடகரையிற் றிருவையாறு தோன்றக் கண்டு கைகூப்பி வணங்கிக் காவிரி கடல் பரந்ததுபோல் பெருகுவ தைக் கடந்து தொழுதற்கு நினைந்து சேரர்பெருமான் நம்பியாரூரரை நோக்கித் திருவையாறிறைஞ்ச நெஞ்சம் உருகி நையாநின்றது. 'ஆற் றைக் கடந்து பணிவோம்' என்றுகூற ஆறு பெருகி வேறு நாவா யோடங்கள் மீது செல்லாவகை மிகைப்ப அன்பின் வழியே வழியாகச் செல்ல உரியவன்றொண்டர் இறைவர் திருவடி பணிந்து ஆற்றுறுதலைத் தப் 'பரவும் பரிசொன்' றென்றெடுத்துத் திருப்பாட்டின் முடிவில் அரவம் புனைவாரை 'ஐயாறுடைய வடிகளோ' என்று வைத்துப் பாடி யருளலும் மன்றினிறைந்தாடவல்ல மாதேவன் காவிரியாறனது இடை யிலே விலகி வழி காட்டத் தாம் கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்குங் கற்றாப்போல் ஒன்று முணர்ச்சியாற் 'சராசரங்க ளெல்லாங் கேட்க 'ஓம்' என்று ஒரு மொழியைத் திருவையாற்றி னின்று மருளிச் செய்தார். உடனே காவிரியாறனது மேல்பால் வெள்ளம் பளிங்கு மலைபோல் தடையுண்டு நிற்கக் கீழ்பால் நீர் வடிந்து டவே நல்ல வழி பண்ணி மணல் பரப்பக்கண்டு தொண்டர் இருவரும் கண்களில் இன்பவருவி சொரிய மயிர்ப்புளகங் கலக்கக் கை குவித்து வணங்கி ஆறு கடந்து சென்று திருவையாற்றை யடைந்து செம்பொற்

சோதி நாதரைப் பணிந்து பரவி விடைபெற்று மீண்டும் முன் வந்த வழியே காவிரியைக் கடந்து கரை யேறியவுடனே ஆறானது முன் போற் பெருகத் தொடங்கியது. இச்செயலின் வியப்பை இருவருங் கண்டு திருவருளைப் போற்றிப் பிறபதிகளையும் வணங்கிக் கொங்கு நாட்டை யடைந்தார்கள்.



## திருக்கேதாரம்

பதிகம் எஅ

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின்றடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே. க

பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளு நாளாலற முளவே
அறிவானிலு மறிவானல நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே. உ

கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்னமை யாள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. ந

உழக்கேயுண்டு படைத்தீட்டிவைத் திழப்பார்களுஞ் சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கேயென்பர் மதிமாந்திய மாந்தர்
சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமெ னீரே. ச

வாளோடிய தடங்கண்ணியர் வலையிலழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுன நணுகி
ஆளாயுய்ம்மி னடிகட்கிட மதுவேயெனி லிதுவே
கீளோடர வசைத்தானிடங் கேதாரமெ னீரே. ரு

தளிசாலைக டவமாவது தம்மைப்பெறி லன்றே
குளியீருளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளியீருளஞ் சீபர்ப்பதந் தெற்குவடக் காகக்
கிளிவாழையொண் கனிகீறியுண் கேதாரமெ னீரே. சு

பண்ணின்றமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கண் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. எ

முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை யிறுத்துத்
துளைக்கைக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயின்மான்பிணை நிலத்தைக்
கிளைக்கமணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. அ

பொதியேசுமந் துழல்வீர்பொதி யவமாவது மறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கதிசூழ்கட லிலங்கைக்கிறை மலங்கவ்வரை யடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. கூ

நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்றிருக் கேதாரத்தை யூரன்னுரை செய்த
பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - கேதாரநாதர்; இறைவி - கேதாரகௌரி.



## திருப்பருப்பதம் — பதிகம் எகூ

பண் - நட்டபாடை

*திருச்சிற்றம்பலம்*

மானும்மரை யினமும்மயி லினமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமாமர முரிஞ்சிப்பொழி லூடேசென்று புக்குத்
தேமாம்பொழி னீழற்றுயில் சீபர்ப்பத மலையே. க

மலைச்சாரலும் பொழிற்சாரலும் புறமேவரு மினங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட மலங்கித்தன களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை யலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தன் பிடித்தேடிடுஞ் சீபர்ப்பத மலையே. உ

மன்னிப்புனங் காவன்மட மொழியாள்புனங் காக்கக்
கன்னிக்கிளி வந்துகவைக் கோலிக்கதிர் கொய்ய
என்னைக்கிளி மதியாதென்று வெடுத்துக்கவ ணொலிப்பத்
தென்னற்கிளி திரிந்தேறிய சீபர்ப்பத மலையே. ங

மையார்தடங் கண்ணண்மட மொழியாள்புனங் காக்கச்
செவ்வேதிரிந் தாயோவெனப் போகாவிட விளிந்து
கைபாவிய கவணான்மணி யெறியவிரிந் தோடிச்
செவ்வாயன கிளிபாடிடுஞ் சீபர்ப்பத மலையே. ச

ஆனைக்குல மிரிந்தோடித்தன் பிடிசூழலிற் றிரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட வதற்குமிக விரங்கி
மானக்குற வடல்வேடர்க ளிலையாற்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ் சீபர்ப்பத மலையே. ரு

மாற்றுக்களி றடைந்தாயென்று மதவேழங்கை யெடுத்து
மூற்றித்தழ லுமிழ்ந்தும்மதம் பொழிந்தும்முகஞ் சுழியத்
*தூற்றத்தரிக் கில்லேனென்று சொல்லியய லறியத்
தேற்றிச்சென்று பிடிசூழறுஞ் சீபர்ப்பத மலையே. சு

---

* தூற்றித்திரிகில்லே

அப்போதுவந் துண்டீர்களுக் கழையாதுமுன் னிருந்தேன்
எப்போதும்வந் துண்டாலெமை யெமர்கள்சுழி யாரோ
இப்போதுமக் கிதுவேதொழி லென்றோடியக் கிளியைச்
செப்பேந்திள முலையாளெறி சீபர்ப்பத மலையே. எ

திரியும்புர நீறாக்கிய செல்வன்றன கழலை
அரியதிரு மாலோடயன் றானும்மவ ரறியார்
கரியின்னின மோடும்பிடி தேனுண்டவை களித்துத்
திரிதந்தவை திகழ்வாற்பொலி சீபர்ப்பத மலையே. அ

ஏனத்திரள் கிளைக்கவெரி போலமணி சிதறத்
தீயென்றவை மலைச்சாரலிற் றிரியுங்கர டீயும்
மானும்மரை யினமும்மயின் மற்றும்பல வெல்லாம்
தேனுண்பொழிற் சோலைமிகு சீபர்ப்பத மலையே. கூ

நல்லாரவர் பலர்வாழ்தரு வயனாவல வூரன்
செல்லலுற வரியசிவன் சீபர்ப்பத மலையை
அல்லலவை தீரச்சொன தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லைசெல வுயர்வானக மாண்டங்கிருப் பாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது வடநாட்டி லுள்ளது.

இறைவன் - பருப்பதநாதர்; இறைவி - பருப்பதநாயகி.



## திருக்கேதீச்சரம் பதிகம் அ௰

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

நத்தார்புடை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமழு வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சரத் தானே. க

சுடுவார்பொடி நீறுந்நல துண்டப்பிறைக் கீளும்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாவுறை கின்றான்றிருக் கேதீச்சரத் தானே. உ

அங்கம்மொழி யன்னாரவ ரமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்றிருக் கேதீச்சரத் தானே. ௩

கரியகறைக் கண்டன்னல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்டியாழ்செயு மாதோட்டநன் னகருள்
பரியதிரை யெறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியும்மறை வல்லான்றிருக் கேதீச்சரத் தானே. ௪

அங்கத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே. ௫

வெய்யவினை யாயவ்வடி யார்மேலொழித் தருளி
வையம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பையேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்றிருக் கேதீச்சரத் தானே. ௬

ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடன் மாதோட்டநன் னகரில்
பானத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான்றிருக் கேதீச்சரத் தானே. ௭

அட்டன்னழ காகவ்வரை தன்மேலர வார்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழின் மாதோட்டநன் னகரில்
பட்டவ்வரி நுதலாளொடு பாலாவியின் கரைமேல்
சிட்டன்னமை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே. ௮

மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்னெனை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே. ௯

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே. ௰

திருச்சிற்றம்பலம்

இது ஈழநாட்டிலுள்ளது.

இறைவன் - கேதீசுவரர், இறைவி - கௌரியம்மை.



## திருக்கழுக்குன்றம் பதிகம் ௮௧

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

கொன்றுசெய்த கொடுமையாற்பல சொல்லவே
நின்றபாவ வினைகடாம்பல நீங்கவே
சென்றுசென்று தொழுமின்றேவர் பிரானிடம்
கன்றினோடு பிடிசூழ்தண்கழுக் குன்றமே. ௧

இறங்கிச்சென்று தொழுமினின்னிசை பாடியே
பிறங்குகொன்றைச் சடையனெங்கள் பிரானிடம்
நிறங்கள்செய்த மணிகணித்திலங் கொண்டிழி
கறங்குவெள்ளை யருவித்தண்கழுக் குன்றமே. ௨

நீணின்று தொழுமினித்தனு நீதியால்
ஆளுநம் வினைகளல்கி யழிந்திடத்
தோளுமெட்டு முடையமாமணிச் சோதியான்
காளகண்ட னுறையுந்தண்கழுக் குன்றமே. ௩

வெளிறுதீரத் தொழுமின்வெண் பொடியாடியை
முளிறிலங்கு மழுவாளன் முந்தி யுறைவிடம்
பிளிறுதீரப் பெருங்கைப்பெய்ம்மத மூன்றுடைக்
களிறினோடு பிடிசூழ்தண் கழுக்குன்றமே. ௪

புலைகடீரத் தொழுமின்புன் சடைப் புண்ணியன்
இலைகொள்சூலப் படையனெந்தை பிரானிடம்
முலைகளுண்டு தழுவிக்குட்டி யொடுமுசுக்
கலைகள்பாயும் புறவிற்றண் கழுக்குன்றமே. ௫

மடமுடைய வடியார்தம் மனத்தே யுற
விடமுடைய மிடறன்விண் ணவர் மேலவன்
படமுடைய வரவன்றான் பயி லும்மிடம்
கடமுடைய புறவிற்றண் கழுக்குன்றமே. ௬

ஊனமில்லா வடியார்தம் மனத்தே யுற
ஞானமூர்த்தி நட்டமாடி நவி லும்மிடம்
தேனும்வண்டும் மதுவுண்டின்னிசை பாடியே
கானமஞ்ஞை யுறையுந்தண் கழுக்குன்றமே. ௭

அந்தமில்லா வடியார்தம் மனத்தே யுற
வந்துநாளும் வணங்கிமாலொடு நான்முகன்
சிந்தைசெய்த மலர்கணித்தலுஞ் சேரவே
கந்தநாறும் புறவிற்றண் கழுக்குன்றமே. ௮

பிழைகடீரத் தொழுமின்பின் சடைப் பிஞ்ஞகன்
குழைகொள்காதன் குழகன்றா னுறை யும்மிடம்
மழைகள்சாலக் கலித்துநீடுயர் வேயவை
குழைகொண்முத்தஞ் சொரியுந்தண் கழுக்குன்றமே. ௯

பல்லில்வெள்ளைத் தலையன்றான் பயி லும்மிடம்
கல்லில்வெள்ளை யருவித்தண் கழுக்குன்றினை
மல்லின்மல்கு திரடோணரன் வனப்பினால்
சொல்லல்சொல்லித் தொழுவாரைத்தொழு மின்களே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

**இறைவன்** - வேதகிரியீசுவரர்; இறைவி - பெண்ணினல்லாளம்மை.

## திருச்சுழியல் பதிகம் அ௨

பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

ஊனாயுயிர் புகலாயக விடமாய்முகில் பொழியும்
வானாயதன் மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
தேனாதரித் திசைவண்டின மிழற்றுந்திருச் சுழியல்
நானாவித நினைவார்தமை நலியார்நமன் றமரே. க

தண்டேர்மழுப் படையான்மழ விடையானெழு கடனஞ்
சுண்டேபுர மெரியச்சிலை வளைத்தானிமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவ னுறையுந்திருச் சுழியற்
றொண்டேசெய வல்லாரவர் நல்லார்துய ரிலரே. ௨

கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச் சுழியற்
றெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவாரடி தொழுவார்
அவ்வத்திசைக் கரசாகுவ ரலராள்பிரி யாளே. ௩

மலையான்மகள் மடமாதிட மாகத்தவண் மற்றுக்
கொலையானையி னுரிபோர்த்தவெம் பெருமான்றிருச் சுழியல்
அலையார்சடை யுடையானடி தொழுவார்பழு துள்ளம்
நிலையார்திகழ் புகழானெடு வானத்துயர் வாரே. ௪

உற்றானமக் குயரும்மதிச் சடையான்புல னைந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றானினி துறையத்திறம் பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட்செல்வ ரேத்தும்மது கடனே. ௫

மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியானமர்ந் திடமாந்திருச் சுழியல்
நிலந்தாங்கிய மலராற்கொழும் புகையானினைந் தேத்தும்
தலந்தாங்கிய புகழாமிகு தவமாஞ்சது ராமே. ௬

சைவத்தசெவ் வுருவன்றிரு நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையாலரண் மூன்றும்மெரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்றிருச் சுழியல்
மெய்வைத்தடி நினைவார்வினை தீர்தல்லெளி தன்றே. எ

பூவேந்திய பீடத்தவன் றானும்மட லரியும்
கோவேந்திய வினயத்தொடு குறுகப்புக லறியார்
சேவேந்திய கொடியானவ னுறையுந்திருச் சுழியல்
மாவேந்திய கரத்தானெம சிரத்தான்றன தடியே. அ

கொண்டாடுதல் புரியாவரு தக்கன்பெரு வேள்வி
செண்டாடுதல் புரிந்தான்றிருச் சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமணாதர்கள் குடைச்சாக்கிய ரறியா
மிண்டாடிய வதுசெய்தது வானால்வரு விதியே. கூ

நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே
தேரூர்தரு மரக்கன்சிர நெரித்தான்றிருச் சுழியல்
பேரூரென வுறைவானடி பெயர்நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - திருமேனிநாதர்; இறைவி - துணைமாலைநாயகி.



## திருவாரூர் — பதிகம் அரு

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

அந்தியு நண்பகலு மஞ்சுப தஞ்சொல்லி
முந்தி யெழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை யென்றுகொ லெய்துவதே. க

நின்ற வினைக்கொடுமை நீங்க விருபொழுதும்
துன்று மலரிட்டுச் சூழும் வலஞ்செய்து
தென்றன் மணங்கமழுந் தென்றிரு வாரூர்புக்
கென்றன் மனங்குளிர வென்றுகொ லெய்துவதே. ௨

முன்னை முதற்பிறவி மூதறி யாமையினால்
பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்
செந்நெல் வயற்கழனித் தென்றிரு வாரூர்புக்
கென்னுயிர்க் கின்னமுதை யென்றுகொ லெய்துவதே. ௩

நல்ல நினைப்பொழிய நாள்களி லாருயிரைக்
கொல்ல நினைப்பனவுங் குற்றமு மற்றொழியச்
செல்வ வயற்கழனித் தென்றிரு வாரூர்புக்
கெல்லை மிதித்தடியே னென்றுகொ லெய்துவதே. ௪

கடுவரி மாக்கடலுட் காய்ந்தவன் றாதையைமுன்
சுடுபொடி மெய்க்கணிந்த சோதியை வன்றலைவாய்
அடுபுலி யாடையனை யாதியை யாரூர்புக்
கிடுபலி கொள்ளியைநா னென்றுகொ லெய்துவதே. ௫

சூழொளி நீர்நிலந்தீத் தாழ்வளி யாகாசம்
வானுயர் வெங்கதிரோன் வண்டமிழ் வல்லவர்கள்
ஏழிசை யேழ்நரம்பி னோசையை யாரூர்புக்
கேழுல காளியைநா னென்றுகொ லெய்துவதே. ௬

கொம்பன நுண்ணிடையாள் கூறனை நீறணிந்த
வம்பனை யெவ்வுயிர்க்கும் வைப்பினை யொப்பமராச்
செம்பொனை நன்மணியைத் தென்றிரு வாரூர்புக்
கென்பொனை யென்மணியை யென்றுகொ லெய்துவதே. ௭

ஆறணி நீள்முடிமே லாடர வஞ்சூடிப்
பாறணி வெண்டலையிற் பிச்சைகொ ளச்சரவன்
சேறணி தண்கழனித் தென்றிரு வாரூர்புக்
கேறணி யெம்மிறையை யென்றுகொ லெய்துவதே. ௮

மண்ணினை யுண்டுமிழ்ந்த மாயனு மாமலர்மேல்
அண்ணலு நண்ணரிய வாதியை மாதினொடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்றிரு வாரூர்புக்
கெண்ணிய கண்குளிர வென்றுகொ லெய்துவதே.

மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய வாரூரை
நன்னெடுங் காதன்மையா னாவலர் கோனூரன்
பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலக நண்ணுவர் புண்ணியரே. ௰

திருச்சிற்றம்பலம்

---

**பதிக வரலாறு :**

திருக்கச்சித் திருவேகம்பத்திற் பணிந்து புறப்பட்டு அந்நகரத்தைக் கடப்பாராய நம்பியாரூரர் திருவாரூரை நினைந்து, அதனைச் சுட்டி 'அந்தியும் நண்பகலும்' என்றெடுத்து எந்தைபிரான் றிருவாரூர் என்று கொலெய்துவதென்று சந்தவிசையாற் பாடி யடியாரோடு வழிக் கொள்வாராயினர்.



## திருக்கானப்பேர் பதிகம் அசு

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

தொண்ட ரடித்தொழலுஞ் சோதி யிளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்ட ரிகப்பரிசா மேனியும் வானவர்கள்
பூச விடக்கடனஞ் சுண்ட கருத்தமரும்
கொண்ட லெனத்திகழுங் கண்டமு மெண்டோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

உ௱௯

கூத லிடுஞ்சடையுங் கோளர வும்விரவுங்
கொக்கிற குங்குளிர்மா மத்தமு மொத்துனதாள்
ஓத லுணர்ந்தடியா ருன்பெரு மைக்குநினைந்
துள்ளுரு காவிரசும் மோசையைப் பாடலுநீ
ஆத லுணர்ந்தவரோ டன்பு பெருத்தடியே
னங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௨

நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்
தேனிடை யின்னமுதை மற்றத னிற்றெளியைத்
தேவர்க ளுயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்மனலும் மண்டல மும்மாய
கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௩

செற்றவர் முப்புரமன் றட்ட சிலைத்தொழிலார்
சேவக முந்நினைவார் பாவக முந்நெறியும்
குற்றமில் தன்னடியார் கூறு மிசைப்பரிசுங்
கோசிக மும்மரையிற் கோவண மும்மதளும்
மற்றிகழ் திண்புயமு மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழக்
கற்றன வும்பரவிக் கைதொழ லென்று கொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

கொல்லை விடைக்கழகுங் கோல நறுஞ்சடையிற்
கொத்தல ரும்மிதழித் தொத்து மதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபான்
மோக மிகுத்திலங்குங் கூறுசெ யெப்பரிசும்
தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்
திண்மழு வுங்கைமிசைக் கூரெரி யும்மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

பண்ணுத லைப்பயனார் பாடலு நீடுதலும்
　　பங்கய மாதனையார் பத்தியு முத்தியளித்
தெண்ணுத லைப்பெருமா னென்றெழு வாரவர்தம்
　　மேசற வும்பிறையா மெந்தையை யும்விரவி
நண்ணுத லைப்படுமா றெங்ஙன மென்றயலே
　　நைகிற வென்னைமதித் துய்யும்வ ணம்மருளுங்
கண்ணுத லைக்கனியைக் காண்பது மென்றுகொலோ
　　கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௬

மாவை யுரித்ததள்கொண் டங்க மணிந்தவனை
　　வஞ்சர் மனத்திறையு நெஞ்சணு காதவனை
மூவ ருருத்தனதா மூல முதற்கருவை
　　மூசிடு மால்விடையின் பாகனை யாகமுறப்
பாவக மின்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்
　　பானறு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவ லெனக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ
　　கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௭

தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
　　தூய மறைப்பொருளா நீதியை வார்கடனஞ்
சுண்ட தனுக்கிறவா தென்று மிருந்தவனை
　　யூழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா
அண்டனை யண்டர்தமக் காகம நான்மொழியும்
　　மாதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்
கண்டனை யன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ
　　கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௮

நாதனை நாதமிகுத் தோசைய தானவனை
　　ஞான விளக்கொளியா மூனுயி ரைப்பபிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
　　பற்றுவி டாதவனைக் குற்றமில் கொள்கையனைத்

தூதனை யென்றனை யாளோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையுந் தோடு மணிந்ததிருக்
காதனை நாயடியே னெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. ௬

கன்னலை யின்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையொண் சீருறை தண்டமிழால்
உன்னி மனத்தயரா வுள்ளுரு கிப்பரவு
மொண்பொழி லூவலர்கோ னாகிய வாரூரன்
பன்னு மிசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினரா யெத்திசை யும்புகழ
மன்னி யிருப்பவர்கள் வானி னிழிந்திடினு
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது பாண்டிநாட்டிலுள்ளது.

இறைவன் - காளையப்பர்; இறைவி - மகமாயி.

---

*பதிக வரலாறு :*

திருவிராமேச்சரத்தை வழிபட்டு ஈழநாட்டுத் திருக்கேதீச்சரத்தைச் சொன்மலர் மாலைகள் சாத்தித் தொலைவிலேயே தொழுதமர்ந்த நம்பியாரூரரும் சேரர் பெருமானும் திருச்சுழியலை யடைந்து, கருச்சுழியில் வீழாமற் காக்குங் கடவுளை நம்பியாரூரர் திருப்பதிகம் பாடிப் போற்ற, இருவரும் அங்குறைந்தார்கள். பணிந்துறையும் ஆரூரருக்கு அவ்வூரில் அன்றிரவிற் கனவினிடத்துக் காளையாம் திருவடிவத்தோடு செங்கையிற் பொற்செண்டும் திருமுடியிற் சுழியமும் உடையராய், இறைவன் எங்குமிலாத் திருக்கோலத்தை என்புருகும்படி காட்டி யாமிருப்பது கானப்பேர் என்று சொல்லி மறைந்தருளினாராக, 'ஞானப்' பேராளராகிய நம்பியாரூரர் தாங் கண்டதைச் சேரர் பெருமானுக்கு மொழிந்தருளிச் சுழியற் புனிதன் கழல் வணங்கிப் புறப்பட்டுத் திருக்கானப் பேற்றை யடைவார், இப்பதிகத்தை யெடுத்து ஈற்றில் 'காளையார்தமைத் தொழப் பெறுவதென்'றென்று வைத்துப் பாடிச் சென்று வணங்கி வழிபட்டார்.



## திருக்கூடலையாற்றூர் பதிகம் அ௬

பண் - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுவேந்தி மதகரியுரி போர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடும்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே. ௧

வையக முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையர விளவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரில்
ஐயனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. ௨

ஊர்தொறும் வெண்டலைகொண் டுண்பலி யிடுமென்று
வார்தரு மென்முலையாண் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரில்
ஆர்வனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. ௩

சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த வதிசய மறியேனே. ௪

வேதியர் விண்ணவரும் மண்ணவ ரும்தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழ லுமையோடும்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரில்
ஆதியிவ் வழிபோந்த வதிசய மறியேனே. ௫

வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்தன வெண்முறுவல் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அத்தனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. ௬

மழைநுழை மதியமொடு வாளர வஞ்சடைமேல்
இழைநுழை துகிலல்குலேந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரில்
அழகனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. எ

மறைமுதல் வானவரும் மாலய னிந்திரனும்
பிறைநுதன் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறள்படை யதனோடுங் கூடலை யாற்றூரில்
அறவனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. அ

வேலையி னஞ்சுண்டு விடையது தானேறிப்
பாலன மென்மொழியாள் பாவையொ டும்முடனே
கோலமு துருவாகிக் கூடலை யாற்றூரில்
ஆலனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. கூ

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆடலு கந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழா ளுவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. ൧0

திருச்சிற்றம்பலம்

இது நடுநாட்டிலுள்ளது.

இறைவன் - நெறிகாட்டுநாயகர்; இறைவி - புரிகுழனுயகி.

---

*பதிக வரலாறு:*

திருவின்னம்பர், திருப்புறம்பயம் என்னுந் திருப்பதிகளை வணங்கிய நம்பியாரூரர் திருக்கூட்டத்தினருடன் மற்றும் திருப்பதிகளை வணங்கச் செல்லும்போது திருக்கூடலை யாற்றூரை யடைந்தவர், அங்குச் செல்லாது திருமுதுகுன்றத்தை நோக்கிச் செல்வாராயினர். அப்படிச் செல்லும் வழியில் உமைமணவாளர் பூணூலணிந்த மறையவராய் முன் வந்து நிற்ப, நாயனர் அவரைப் பார்த்துத் திருமுதுகுன்றத்துக்கு வழியாதென்று கேட்டபோது இறைவர் இவ்வழி கூடலையாற்றூரை யுடையதாய்த் திருமுதுகுன்றத்துக்குச் செல்வதெனச் சொல்லியுடன் சென்றார். சிறிது தொலைவு சென்று அவரைக் காணுத வன்றொண்டர் வியந்து இப்பதிகமெடுத்துப் பாடிக் கூடலையாற்றூரை யடைந்து வழிபட்டுத் திருமுதுகுன்றஞ் சென்றார்.

## திருவன்பார்த்தான்பனங்காட்டூர் பதிகம் அகூ

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையிலன் புடையானை யாவர்க்கு மறிவொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்பென்னே. க

அறையும்பைங் கழலார்ப்ப வரவாட வனலேந்திப்
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானார்
பறையுஞ்சங் கொலியோவாப் படிறன்றன் பனங்காட்டூர்
உறையுமெங்கள் பிரானுரை யுணராதா ருணர்வென்னே. உ

தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாண் மலர்கொண்டங் கிசைந்தேத்து மடியார்கள்
பண்ணார் பாடலறாத படிறன்றன் பனங்காட்டூர்
பெண்ணாணா யபிரானைப் பேசாதார் பேச்சென்னே. ங

நெற்றிக்கண் ணுடையானை நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக் கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. ச

உரமென்னும் பொருளானை யுருகிலுள் ளுறைவானைச்
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை
வரமுன்ன மருள்செய்வான் வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பரமனெங்கள் பிரானைப் பரவாதார் பரவென்னே. ரு

எயிலார்பொக் கமெரித்த வெண்டோண்முக் கணிறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ யெனநின்றான்
மயிலார்சோ லைகள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. சா

மெய்யன்வெண் பொடிபூசும் விகிர்தன்வே தமுதல்வன்
கையின்மான் மழுவேந்திக் காலன்கா லமறுத்தான்
பைகொள்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்
ஐயனெங்கள் பிரானை யறியாதா ரறிவென்னே. எ

வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங்கள் பிரானை நினையாதார் நினைவென்னே. அ

மழையானுந் திகழ்கின்ற மலரோனென் றிருவர்தாம்
உழையாநின் றவருள்க வுயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. கூ

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் னடித்தொண்டன் னடியன்சொல் லடிநாய்சொல்
ஊரூரன் னுரைசெய்வா ருயர்வானத் துயர்வாரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் – பனங்காட்டுநாதர்; இறைவி - அமிர்தவல்லி.



## திருப்பனையூர் பதிகம் அஎ

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வள ரும்வளர்பொழில்
பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்த்
தோடுபெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்க ளெள்ளிப்பாடநின்
றாடு மாறுவல்லா ரவரே யழகியரே. க

நாறுசெங்கழு நீர்மலர்நல்ல மல்லிகை சண்பகத்தொடு
சேறுசெய் கழனிப் பழனத் திருப்பனையூர்
நீறுபூசிநெய் யாடிதன்னை நினைப்பவர்தம் மனத்தனாகிநின்
றாறு சூடவல்லா ரவரே யழகியரே. உ

செங்கண்மேதிகள் சேடெறிந்து தடம்படிதலிற் சேலினத்தொடு
பைங்கண் வாளைகள்பாய் பழனத் திருப்பனையூர்த்
திங்கள்சூடிய செல்வனாரடி யார்தம்மேல்வினை தீர்ப்பராய்விடில்
அங்கிருந் துறைவா ரவரே யழகியரே. ங

வாளைபாய மலங்கிளங்கயல் வரிவராலுக ளுங்கழனியுள்
பாளையொண் கமுகம் புடைசூழ் திருப்பனையூர்த்
தோளுமாகமுந் தோன்றநட்டமிட் டாடுவாரடித் தொண்டர்தங்களை
ஆளு மாறுவல்லா ரவரே யழகியரே. ச

கொங்கையார்பல ருங்குடைந்தாட நீர்க்குவளை மலர்தரப்
பங்கயம் மலரும் பழனத் திருப்பனையூர்
மங்கைபாகமு மாலொர்பாகமுந் தாமுடையவர் மான்மழுவினொ
டங்கைத் தீயுகப்பா ரவரே யழகியரே. ரு

காவிரிபுடை சூழ்சோணாட்டவர் தாம்பரவிய கருணையங்கடலப்
பாவிரி புலவர் பயிலுந் திருப்பனையூர்
மாவிரிமட நோக்கியஞ்ச மதகரியுரி போர்த்துகந்தவர்
ஆவிலைந் துகப்பா ரவரே யழகியரே. சா

மரங்கள்மேன்மயி லாலமண்டப மாடமாளிகை கோபுரத்தின்மேல்
திரங்கல்வன் முகவன் புகப்பாய் திருப்பனையூர்த்
துரங்கன்வாய்பிளந் தானுந்தூமலர்த் தோன்றலுமறி யாமற்றோன்றிநின்
றரங்கி லாடவல்லா ரவரே யழகியரே. எ

மண்ணெலாமுழ வம்மதிர்தர மாடமாளிகை கோபுரத்தின்மேல்
பண்ணி யாழ்முரலும் பழனத் திருப்பனையூர்
வெண்ணிலாச்சடை மேவியவிண் ணவரொடுமண் ணவர்தொழ
அண்ண லாகிநின்றா ரவரே யழகியரே. அ

குரக்கினங்குதி கொள்ளத்தேனுகக் குண்டுதண்வயற் கெண்டை பாய்
பரக்குந் தண்கழனிப் பழனத் திருப்பனையூர் [தரப்
இரக்கமில்லவ ரைந்தொடைந்தலை தோளிருபது தாணெரிதர
அரக்கனை யடர்த்தா ரவரே யழகியரே. கூ

வஞ்சி நுண்ணிடை மங்கைபங்கினர் மாதவர்வள ரும்வளர்பொழில்
பஞ்சின் மெல்லடியார் பயிலுந் திருப்பனையூர்
வஞ்சியும்வளர் நாவலூரன் வனப்பகையவ ளப்பன்வன்றொண்டன்
செஞ்சொற் கேட்டுகப்பா ரவரே யழகியரே. க0

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-சௌந்தரநாதர், இறைவி-பெரியநாயகி.

---

பதிக வரலாறு:

திருப்புகலூரினின்றும் எழுந்தருளிய சுந்தரமூர்த்தி நாயனர் திருப்பனையூர்ப் புறத்தை யடைந்தபொழுது சிவபெருமான் எதிரே வந்து திருக்கூத்தொடுங் காட்சி கொடுத்தருள, நாயனர் விருப்போடு விழுந்திறைஞ்சி, 'மாடமாளிகை கோபுரத்தொடு' என்னுமித்திருப்பதி கத்தை யெடுத்து அதிற்றிருப்பாட்டிறுதிதோறும் 'ஆடுமாறுவல்லா ரவரே யழகியரே' என்று பாடி வழிபட்டுத் தாம் திருப்புகலூரிற் பெற்ற பொற்குவையோடு திருவாரூரை யடைந்தார்.



## திருவீழிமிழலை பதிகம் அஅ

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

நம்பினார்க்கருள் செய்யுமந்தணர் நான்மறைக்கிட மாயவேள்வியுள்
செம்பொனேர் மடவா ரணிபெற்ற திருமிழலை
உம்பரார்தொழு தேத்தமாமலை யாளொடும்முட னேயுறைவிடம்
அம்பொன் வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. க

விடங்கொண் மாமிடற் றீர்வெள்ளைச்சுருளொன் றிட்டுவிட்ட காதினீ
திடங்கொள் சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை [ரென்று
மடங்கல்பூண்ட விமானமண்மிசை வந்திழிச்சிய வானநாட்டையும்
அடங்கல் வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௨

ஊனையுற் றுயி ராயினீரொளி மூன்றுமாய்த்தெளி நீரோடானஞ்சின்
தேனையாட் டுகந்தீர் செழுமாடத் திருமிழலை
மானைமேவிய கையினீர்மழு வேந்தினீர்மங்கை பாகத்தீர்விண்ணில்
ஆன வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௩

பந்தம்வீடிவை பண்ணினீர்படி றீர்மதிப்பிதிர்க் கண்ணியீரென்று
சிந்தைசெய் திருக்குஞ் செங்கையாளர் திருமிழலை
வந்துநாடகம் வானநாடிய ராடமாலய னேத்தநாடொறும்
அந்தண் வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௪

புரிசைமூன்றையும் பொன்றக்குன்றவி லேந்திவேதப்புரவித்தேர்மிசைத்
திரிசெய் நான்மறையோர் சிறந்தேத்துந் திருமிழலைப்
பரிசினாலடி போற்றும் பத்தர்கள் பாடியாடப் பரிந்துநல்கினீர்
அரிய வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௫

எறிந்தசண்டி யிடந்தகண்ணப்ப னேத்துபத்தர்கட் கேற்றநல்கினீர்
செறிந்த பூம்பொழிற் றேன்றுளிவீசுந் திருமிழலை
நிறைந்தவந்தணர் நித்தநாடொறு நேசத்தாலுமைப் பூசிக்குமிடம்
அறிந்து வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௬

பணிந்தபார்த்தன் பகீரதன்பல பத்தர்சித்தர்க்குப் பண்டுநல்கினீர்
திணிந்த மாடந்தொறுஞ் செல்வமல்கு திருமிழலைத்
தணிந்தவந்தணர் சந்திநாடொறு மந்திவானிடு பூச்சிறப்பவை
அணிந்து வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௭

பரந்தபாரிட மூரிடைப்பலி பற்றிப்பார்த்துணுஞ் சுற்றமாயினீர்
தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்துநீர்தமி ழோடிசைகேட்கு மிச்சையாற்காசு நித்தநல்கினீர்
அருந்தண் வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. ௮

தூயநீரமு தாயவாறது சொல்லுகென்றுமைக் கேட்கச்சொல்லினீர்
தீயராக் குலையாளர் செழுமாடத் திருமிழலை [பொருள்
மேயநீர்பலி யேற்றதென்னென்று விண்ணப்பஞ்செய் பவர்க்குமெய்ப்
ஆய வீழிகொண்டீ ரடியேற்கு மருளுதிரே. கூ

வேதவேதியர் வேதநீதிய ரோதுவார்விரி நீர்மிழலையுள்
ஆதி வீழிகொண்டீ ரடியேற்கு மருளுகென்று
நாதகீதம்வண் டோதுவார்பொழி லாவலூரன்வன் றொண்டனற்றமிழ்
பாத மோதவல்லார் பரனோடு கூடுவரே. ய

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - வீழியழகர் ; இறைவி - சுந்தரகுசாம்பிகையம்மை.



## திருவெண்பாக்கம் பதிகம் ஙகூ

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
உழையுடையா னுள்ளிருந்து வுளோம்போகீ ரென்றானே. க

இடையறியேன் றலையறியே னெம்பெருமான் சரணமென்பேன்
நடையுடைய னம்மடியா னென்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்றோல்
உடையுடையா னெனையுடையா னுளோம்போகீ ரென்றானே.

செய்வினையொன் றறியாதேன் றிருவடியே சரணென்று
பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ வேண்டாவோ
பையரவா விங்கிருந்தா யோவென்னப் பரிந்தென்னை
உய்யவருள் செய்யவல்லா னுளோம்போகீ ரென்றானே. ந

கம்பமருங் கரியுரியன் கறைமிடற்றன் காபாலி
செம்பவளத் திருவுருவன் சேயிழையோ டுடனாகி
நம்பியிங்கே யிருந்தீரே யென்றுநான் கேட்டலுமே
உம்பர்தனித் துணையெனக்கு வுளோம்போகீ ரென்றானே. ச

பொன்னிலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க
மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா வெருதேறி
துன்னியிரு பாலடியார் தொழுதேத்த வடியேனும்
உன்னமதாய்க் கேட்டலுமே யுளோம்போகீ ரென்றானே. ரு

கண்ணுதலார் காமனையுங் காய்ந்ததிறற் கங்கைமலர்
தெண்ணிலவு செஞ்சடைமேற் றிமலர்ந்த கொன்றையினான்
கண்மணியை மறைப்பித்தா யிங்கிருந்தா யோவென்ன
ஒண்ணுதலி பெருமானு ருளோம்போகீ ரென்றானே. சூ

பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்யத்
தார்நிலவு நறுங்கொன்றைச் சடையனார் தாங்கரிய
கார்நிலவு மணிமிடற்றீ ரிங்கிருந்தீ ரேயென்ன
ஊரரவ மரைக்கசைத்தா னுளோம்போகீ ரென்றானே. எ

வாரிடங்கொள் வனமுலையா டன்னோடு மயானத்துப்
பாரிடங்கள் பலசூழப் பயின்றாடும் பரமேட்டி
காரிடங்கொள் கண்டத்தன் கருதுமிடந் திருவொற்றி
ஊரிடங்கொண் டிருந்தபிரா னுளோம்போகீ ரென்றானே. அ

பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீ ழிருவென்று
சொன்னவெனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே யிங்கிருந்தா யோவென்ன
ஒன்னலரைக் கண்டார்போ லுளோம்போகீ ரென்றானே. கூ

மான்றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றவருள் செய்தளித்தா யென்றுரைக்க வுலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயி லிங்கிருந்தா யோவென்ன
ஊன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே. ய

ஏராரும் பொழிலிலவு வெண்பாக்க மிடங்கொண்ட
காராரு மிடற்றானைக் காதலித்திட் டன்பினொடும்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் றமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே. கக

திருச்சிற்றம்பலம்

இது தொண்டைநாட்டிலுள்ளது.

இறைவன் - வெண்பாக்கநாதர்; இறைவி - கனிவாய்மொழி.

---

பதிக வரலாறு:

திருவாரூரை யடைய விரும்பித் திருவொற்றியூரினின்றும் புறப் பட்டுக் கண்கள் மறையப் பெற்றுத் திருமுல்லைவாயிலை யடைந்து பாடிய நம்பியாரூரர், திருவெண்பாக்கத்துத் தொண்டர்கள் எதிர் கொள்ள வதனை யடைந்து திருக்கோயிலிற் சென்று வலம் வந்து திருமுன்னின்று தலையின்மேற் கை குவித்து வணங்கிப் 'பிழையுளன பொறுத்திடுவர்' என்றெடுத்துக் கோயிலுளீரே யென்றபோது ஊன்று கோலொன்றருளி 'உளோம் போகீர்' ரென்றருளியதை மற்றொரு பாட்டின் வைத்துப் பாடி என்னுடைய பிரானரு ளித்தனைகொலா மென்று தொண்டருடன் வழிக் கொள்வாராயினர்.



கோயில் பதிகம் கூ௰

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

மடித்தாடு மடிமைக்க ணன்றியே
மனனேநீ வாழுநாளுந்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு
மெரியகலுங் கரியபாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. க

பேராது காமத்திற் சென்றூற்போ
லன்றியே பிரியாதுள்கிச்
சேரார்ந்த வன்பராய்ச் சென்றுமுன்
னடிவீழுந் திருவினரை
ஓராது தருமனர் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. உ

நரியார்தங் கள்ளத்தாற் பக்கான
பரிசொழிந்து நாளுமுள்கிப்
பிரியாத வன்பராய்ச் சென்றுமுன்
னடிவீழுஞ் சிந்தையாரைத்
தரியாது தருமனர் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. ௩

கருமையாற் றருமனர் தமர்நம்மைக்
கட்டியகட் டறுப்பிப்பானை
அருமையாந் தன்னுலகந் தருவானை
மண்ணுலகங் காவல்பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குந் திறைகொடா
மன்னவரை மறுக்கஞ்செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. ௪

கருமானி னுரியாடைச் செஞ்சடைமேல்
வெண்மதியக் கண்ணியானை
உருமன்ன கூற்றத்தை யுருண்டோட
வுதைத்துகந்து வுலவாவின்பந்
தருவானைத் தருமனர் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
பெருமானர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. ௫

உய்த்தாட்டித் திரியாதே யுள்ளமே
யொழிகண்டா யூன்கணோட்டம்
எத்தாலுங் குறைவில்லை யென்பர்கா
ணெஞ்சமே நம்மைநாளும்
பைத்தாடு மரவினன் படர்சடையன்
பரஞ்சோதி பாவந்தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. சு

முட்டாத முச்சந்தி மூவா
யிரவர்க்கு மூர்த்தியென்னப்
பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார்
பாவமும் வினையும்போக
விட்டானை மலையெடுத்த விராவணனைத்
தலைபத்து நெரியக்காலாற்
றொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. எ

கற்றானுங் குழையுமா றன்றியே
கருதுமா கருதுகிற்றார்க்
கெற்றாலுங் குறைவில்லை யென்பர்கா
ணுள்ளமே நம்மைநாளுஞ்
செற்றாட்டித் தருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
பெற்றேறிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. அ

நாடுடைய நாதன்பா லன்றென்றுஞ்
செய்மனமே நம்மைநாளுந்
தாடுடைய தருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
மோடுடைய சமணர்க்கு முடையுடைய
சாக்கியர்க்கு மூடம்வைத்த
பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றாமன்றே. கூ

பாரூரு மரவல்கு லுமைநங்கை
யவள்பங்கன் பைங்கணேற்றன்
ஊரூரன் றருமனார் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட்கொள்வான்
ஆரூரன் றம்பிரா னாரூரன்
மீகொங்கி லணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்
றம்பலத்தே பெற்றாமன்றே. கo

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

திருமுதுகுன்றத்திற் பெற்ற பொற்குவையைத் திருவாரூர்க் குளத்தி லெடுக்கும்படி மணிமுத்தாற்றி லிட்டு வருகின்ற வன்றொண்டப் பெருமான் வழிக்கொண்டு திருத்தில்லையையடைந்து திருவாயிலிற் சென்று திருத்தெருவிற்சார்ந்து வணங்கித்'தூலலிங்கத்தைப்'பணிந்து உள்ளேபுக்குத் திருமாளிகையை வலம்வந்து, தலையிற்குவித்த கைகளை உடையராய்த் திருவணுக்கன் றிருவாயிலைக்கடந்து பொன்னம்பலத்தை யடைந்து ஐந்தொழி லருட்கூத்தினைச் செய்யுந் திருவடிகளைக் கண்களில் இன்பவருவி சொரியவும் எத்தும்வாய் குளற எட்டுறுப்பானும் வணங்கும் வேட்கைகூர வணங்கிப்பரவி, இத்திருப்பதிகத்தை யெடுத்துத் திருப்பேரூரிற் றாம்கண்ட நிலையைச் சிறப்பித்துத் 'தனிக்கூத்தென்றும் நடிப்பானை நாம் மனமே பெற்றவாறு' என்று பாடியருளினார்.



## திருவொற்றியூர்                                                    பதிகம் கஉ

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைக ளீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஓட்டுந் திரைவா யொற்றி யூரே. க

பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் மடிக ளிறைவர்க் கிடம்போல்
உந்துந் திரைவா யொற்றி யூரே. உ

பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றி னுரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளுந் திரைவா யொற்றி யூரே. ௩

என்ன தெழிலு நிறையுங் கவர்வான்
புன்னை மலரும் புறவிற் றிகழும்
தன்னை முன்ன நினைக்கத் தருவான்
உன்னப் படுவா னொற்றி யூரே. ௪

பணங்கொ ளரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபால மேந்தி
வணங்கு மிடைமென் மடவா ரிட்ட
உணங்கல் கவர்வா னொற்றி யூரே. ௫

படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைக ளறுப்பா னென்னை
உடையா னுறையு மொற்றி யூரே. ௬

சென்ற புரங்க ளெயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட
நன்று நல்ல நாதன் னரையே
றென்றை யுடையா னொற்றி யூரே. எ

கலவ மயில்போல் வளைக்கை நல்லார்
பலரும் பரவும் பவளப் படியான்
உலகி னுள்ளார் வினைக ளெர்ப்பான்
உலவுந் திரைவா யொற்றி யூரே. அ

பற்றி வரையை யெடுத்த வரக்கன்
இற்று முரிய விரலா லடர்த்தார்
எற்றும் வினைக டீர்ப்பா ரோதம்
ஒற்றுந் திரைவா யொற்றி யூரே. ௯

ஒற்றி யூரு மரவும் பிறையும்
பற்றி யூரும் பவளச் சடையான்
ஒற்றி யூர்மே லூர னுரைத்த
கற்றுப் பாடக் கழியும் வினையே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருப்புக்கொளியூர் அவிநாசி                                பதிகம் ௯௨

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின் றேனுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே. ௧

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாணிநீ
ஒழிவ தழகோ சொல்லா யருளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணி யென்னைக்கிறி செய்ததே. ௨

எங்கேனும் போகினு மெம்பெரு மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பாரிலை
பொங்கா டரவா புக்கொளி யூரவி நாசியே
எங்கோ னேயுனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே. ௩

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவிநாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. ௪

அரங்காவ தெல்லா மாயிடு காடது வன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கோட வெய்தாய் புக்கொளி யூரவி நாசியே
குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே. ௫

நாத்தானு முனைப்பாட லன்றி நவிலா தெனாச்
சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே
கூத்தா வுனக்குநா னாட்பட்ட குற்றமுங் குற்றமே. ௬

மந்தி கடுவனுக் குண்பழ நாடி மலைப்புறம்
சந்திக டோறுஞ் சலபுட்ப மிட்டு வழிபடப்
புந்தி யுறைவாய் புக்கொளி யூரவி நாசியே
நந்தி யுனைவேண்டிக் கொள்வே னரகம் புகாமையே. ௭

பேணா தொழிந்தே னுன்னை யலாற்பிற தேவரைக்
காணா தொழிந்தேன் காட்டுதி யேலின்னங் காண்பனான்
பூணா ணரவா புக்கொளி யூரவி நாசியே
காணாத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. ௮

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாயெங்க ளம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் றோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே. ௯

நீரேற வேறு நிமிர்புன்சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டனா ரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. ௰

திருச்சிற்றம்பலம்

இது கொங்குநாட்டிலுள்ளது.

இறைவன் - அவிநாசியப்பர்; இறைவி - பெருங்கருணைநாயகி.



முதலைவாய்ப் பிள்ளை யழைத்தது.

T85·00+01/ 282/2 (1913).



பதிக வரலாறு:

நம்பியாரூரர் சேரமான்பெருமா ணயனாரை நினைத்துத் திருவாரூரி னின்றும் புறப்பட்டு அவர்பாற் செல்கின்றவர் கொங்கு நாட்டை யடைந்து திருப்புக் கொளியூர் வழியாகச் செல்வாராயினர்; அப்போது அவ்வூர் மறையவர் தெருவொன்றில் ஒரு வீட்டில் அழுகை யொலியும், அதற்கெதிரான மற்றொரு வீட்டில் மங்கல ஒலியும் எழுதலை நாயனார் கண்டு வியந்து அருகிருந்தாரை என்னென்று வினவினர்; அவர், 'ஐந் தாண்டு நிரம்பிய இவ்விரண்டு வீட்டுப் பிள்ளைகளும் ஒருகால் அருகுள்ள குளத்துக்குச் சென்று நீராடினாராக, அவருள் ஒருவனை முதலை விழுங் கிற்று; மற்றவன் வீடு சேர்ந்தான்; வீடு சேர்ந்தவனுக்கு இன்று பூணூற் திருமணம்; ஆதலால் அவ்வீட்டில் மங்கல வொலியும் அதுகண்டு எதிர் வீட்டில் முதலை விழுங்கிய தம்மகனையெண்ணி ஆற்றாராய்ப் பெற்றோர் செய்யும் அழுகை யொலியும் ஒரே காலத்தில் எழுகின்றன' வென்றார் கள். நாயனார் கேட்டு மிக இரங்கினர். இதற்குள் நாயனார் வரவு கேட்ட அவ்வழுகையொலிப் பெற்றோர் அவர் வரவுக்கு மகிழ்ந்து எதிர் வந்து வணங்கினர். நம்பியாரூரர் பின்னும் இரக்கம் மிக்கவராய்த் 'திருவரு ளால் இவர்கள் குழந்தையை முதலைவாயினின்றும் மீட்டுத் தந்து அவி நாசிப் பெருமானை வணங்குவே'னென்று உறுதி செய்துகொண்டு, குளத்தை யணுகி 'எற்றான் மறக்கே'னென்னுமித் திருப்பதிகமெடுத்துக் 'கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே' என்று கூறுதலும், அம்முதலை சென்ற ஆண்டுகளும் நிரம்பிய அம்மகனைக் கரையிற் கொணர்ந்து உமிழ்ந்தது. உடனே பெற்றோர் முதலிய எல்லோரும் உளங்கரை வியப்பும் மகிழ்ச்சியும் மிக்கவராய், ஆரூரரை யும் அவிநாசியப்பனையும் வணங்கி ஏத்தினர்; அப்பால் நாயனார் அக் குழந்தைக்கும் எதிர்வீட்டுக் குழந்தையோடொப்ப அப்போதே பூணூற் திருமணஞ் செய்வித்து அவ்வீட்டில் மங்கல ஒலியை ஒப்ப எழுவித்து அவிநாசி யப்பரை உளங்கரைந்து தொழுது உடனே மலை நாட்டுக்குப் புறப்பட்டருளினர்.



## திருநறையூர்ச்சித்தீச்சரம் பதிகம் கஙு

பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீரும் மலரு நிலவுஞ் சடைமேல்
ஊரும் மரவ முடையா னிடமாம்
வாரும் மருவி மணிபொன் கொழித்துச்
சேருந் நறையூர்ச் சித்தீச் சரமே. க

அலைப்பை யரவே ரிடையா ளஞ்சத்
துளைக்கைக் கரித்தோ லுரித்தா னிடமாம்
வளைக்கைம் மடவார் மடுவிற் றடநீர்த்
திளைக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. உ

இகழுந் தகையோ ரெயின்மூன் றெரித்த
பகழி யொடுவில் லுடையோன் பதிதான்
முகிழ்மென் முலையார் முகமே கமலம்
திகழுந் நறையூர்ச் சித்தீச் சரமே. ௩

மறக்கொ ளரக்கன் வரைதோள் வரையால்
இறக்கொள் விரற்கோ னிருக்கு மிடமாம்
நறக்கொள் கமலந் நனிபள்ளி யெழத்
திறக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. ச

முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர் மைகொள்வா னமரும் மிடமாம்
கழுநீர் கமழக் கயல்சே லுகளும்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. ரு

ஊனா ருடைவெண் டலையுண் பலிகொண்
டானா ரடலே றமர்வா னிடமாம்
வானார் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனார் நறையூர்ச் சித்தீச் சரமே. சா

காரூர் கடலில் விடமுண் டருள்செய்
நீரூர் சடையன் னிலவும் மிடமாம்
வாரூர் முலையார் மருவும் மறுகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே. ௭

கரியின் னுரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் முடையா னிடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. ௮

பேணா முனிவன் பெருவேள் வியெலாம்
மாணா மைசெய்தான் மருவும் மிடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. ௯

குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த
எறியும் மழுவாட் படையா னிடமாம்
நெறியில் வழுவா நியமத் தவர்கள்
செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. ௰

போரார் புரமெய் புனித னமரும்
சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை
ஆரூ ரன்சொல் லிவைவல் லவர்கள்
ஏரா ரிமையோ ருலகெய் துவரே. ௧௧

திருச்சிற்றம்பலம்



## திருச்சோற்றுத்துறை பதிகம் ௯௪

பண் - கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அழனீ ரொழுகி யனைய சடையும்
உழையீ ருரியு முடையா னிடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழனீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. ௧

பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வ னமல னிடமாம்
இண்டை கொண்டன் பிடைய றாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. ௨

கோல வரவுங் கொக்கி னிறகும்
மாலை மதியும் வைத்தா னிடமாம்
ஆலும் மயிலு மாட லளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. ௩

பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போனூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் மாத்தி யல்லான் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. ௪

உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்த னிடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. ௫

ஓதக் கடனஞ் சினையுண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. ௬

இறந்தா ரென்பு மெருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. ௭

காமன் பொடியாக் கண்ணொன் றிமைத்த
ஓமக் கடலா ருகந்த விடமாம்
தேமென் குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. ௮

இலையா லன்பா லேத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்
தலையாற் றாழுந் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. ௯

சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றா ரடியா ரடிநா வூரன்
சொற்றா னிவைகற் றார்துன் பிலரே. ௰

திருச்சிற்றம்பலம்



## திருவாரூர் பதிகம் ௯௬

### பண் - செந்துருத்தி

திருச்சிற்றம்பலம்

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. க

விற்றுக் கொள்வீ ரொற்றி யல்லேன் விரும்பி யாட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகே ளென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்டான் றாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. உ

அன்றின் முட்டா தடையுஞ் சோலை யாரூ ரகத்தீரே
கன்று முட்டி யுண்ணச் சுரந்த காலி யவைபோல
என்று முட்டாப் பாடு மடியார் தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் விழுந்தால் வாழ்ந்து போதீரே. ௩

துருத்தி யுறைவீர் பழனம் பதியாச் சோற்றுத் துறையாள்வீர்
இருக்கை திருவா ரூரே யுடையீர் மனமே யெனவேண்டா
அருத்தி யுடைய வடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமைப் பணித்தால் வாழ்ந்து போதீரே. ௪

செந்தண் பவளந் திகழுஞ் சோலை யிதுவோ திருவாரூர்
எந்த மடிகே ளிதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடு மடியார் தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ வென்றால் வாழ்ந்துபோதீரே. ௫

தினைத்தா ளன்ன செங்கா ணாரை சேருந் திருவாரூர்ப்
புனைத்தார் கொன்றைப் பொன்போன் மாலைப் புரிபுன் சடையீர்
தனத்தா லின்றித் தாந்தா மெலிந்து தங்கண் காணாது
மனத்தால் வாடி யடியா ரிருந்தால் வாழ்ந்து போதீரே. ௬

ஆயம் பேடை யடையுஞ் சோலை யாரூ ரகத்தீரே
ஏயெம் பெருமா னிதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. ௭

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோ மும்மை யிகழா தேத்துவோம்
பழிதா னாவ தறியீ ரடிகேள் பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந் திருந்தால் வாழ்ந்து போதீரே. ௮

பேயோ டேனும் பிரிவொன் றின்னா தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டிற் கனிதா னன்றோ கருதிக் கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்து முமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் றிறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. ௯

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை யிதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே யிடமாக் கொண்டீரே
இருந்து நின்றுங் கிடந்து மும்மை யிகழா தேத்துவோம்
வருந்தி வந்து முமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே. ௰

காரூர் கண்டத் தெண்டோண் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய வென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. கக

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

திருக்கச்சியேகம்பத்தில் இடக்கண் கொடுத்தருளப் பெற்றுத் திருவாரூரை யடைந்த நம்பியாரூரர் வன்மீக நாதரைக் காண்டற்கு அவ்வொரு கண் போதாமையால் மிக வருந்தி மற்றொரு கண்ணையும் அளித்தருளல் வேண்டுமென்று வேண்டுங் குறிப்பினராய், அப்பெருமானோடு ஊடி 'மீளாவடிமை' யென்னும் இத்திருப்பதிகத்தைப் பாடுதலும் இறைவன் திருவுளமிரங்கி அவர்க்கவரது வலக்கண்ணையுங் கொடுத்தருளினர். நாயனர் தம் இரண்டு கண்களாலும் இறைவனைக் காணப் பெற்றுப் பேரின்பத்திற் படிந்து நின்றார்.



திருவாரூர்ப்பரவையுண்மண்டளி பதிகம் கசுஎ

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டாரைவர் காக்கினும்
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே. க

பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னானே செக்கர் வானத் திளஞாயி
றன்னானே பரவையுண் மண்டளி யம்மானே. உ

நாமாறா துன்னையே நல்லன சொல்லுவார்
போமாறென் புண்ணியா புண்ணிய மானானே
பேய்மாறாப் பிணமிடு காடுகந் தாடுவாய்க்
காமாறென் பரவையுண் மண்டளி யம்மானே. ௩

நோக்குவே னுன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றார் கண்டுகொண் டாரைவர் காக்கினும்
வாக்கென்னு மாலைகொண் டுன்னை யென்மனத்
தார்க்கின்றேன் பரவையுண் மண்டளி யம்மானே. ௪

பஞ்சேரு மெல்லடி யாளையோர் பாகமாய்
நஞ்சேரு நன்மணி கண்ட முடையானே
நெஞ்சேர நின்னையே யுள்கி நினைவாரை
அஞ்சேலென் பரவையுண் மண்டளி யம்மானே. ரு

அம்மானே யாகம சீலர்க் கருணல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி யம்மானே. சா

விண்டானே மேலையார் மேலையார் மேலாய
எண்டானே யெழுத்தொடு சொற்பொரு ளெல்லாமுன்
கண்டானே கண்டனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி யம்மானே. எ

காற்றானே கார்முகில் போல்வதொர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளையோர் பாகமாய்
நீற்றானே நீள்சடை மேனிறை யுள்ளதோர்
ஆற்றானே பரவையுண் மண்டளி யம்மானே. அ

செடியேனன் செய்வினை நல்லன செய்யாத
கடியேனன் கண்டதே கண்டதே காமுறும்
கொடியேனன் கூறுமா றுன்பணி கூறாத
அடியேனன் பரவையுண் மண்டளி யம்மானே. கூ

கரந்தையும் வன்னியு மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி யம்மானை
நிரம்பிய வூர னுரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே. ய)

திருச்சிற்றம்பலம்

## திருநனிபள்ளி　　பதிகம் ௬௭

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஆதிய னாதிரையன் னயன்மா லறிதற்கரிய
சோதியன் சொற்பொருளாய்ச் சுருங்காமறை நான்கினையும்
ஓதிய னும்பர்தங்கோ னுலகத்தினு ளெவ்வுயிர்க்கும்
நாதிய னம்பெருமா னண்ணுமூர்நனி பள்ளியதே. ௧

உறவிலி யூனமிலி யுணரார்புர மூன்றெரியச்
செறுவிலி தன்னினைவார் வினையாயின தேய்ந்தழிய
அறவில கும்மருளான் மருளார்மொழி வண்டறையும்
நறவிரி கொன்றையினா னண்ணுமூர்நனி பள்ளியதே. ௨

வானுடை யான்பெரியான் மனத்தாலு நினைப்பரியான்
ஆனிடை யைந்தமர்ந்தா னணுவாகியொர் தீயுருக்கொண்
டூனுடை யிவ்வுடல மொடுங்கிப்புகுந் தான்பரந்தான்
நானுடை மாடெம்பிரா னண்ணுமூர்நனி பள்ளியதே. ௩

ஓடுடை யன்கலனா வுடைகோவண வன்னுமையோர்
பாடுடை யன்பலிதேர்ந் துணும்பண்புடை யன்பயிலக்
காடுடை யன்னிடமா மலையேழுங் கருங்கடல்சூழ்
நாடுடை நம்பெருமா னண்ணுமூர் நனிபள்ளியதே. ௪

பண்ணற் கரியதொரு படையாழிதனைப் படைத்துக்
கண்ணற் கருள்புரிந்தான் கருதாதவர் வேள்வியவி
உண்ணற் கிமையவரை யுருண்டோட வுதைத்துகந்து
நண்ணற் கரியபிரா னண்ணுமூர்நனி பள்ளியதே. ௫

மல்கிய செஞ்சடைமேன் மதியும்மர வும்முடனே
புல்கிய வாரணனெம் புனிதன்புரி நூல்விகிர்தன்
மெல்கிய விற்றொழிலான் விருப்பன்பெரும் பார்த்தனுக்கு
நல்கிய நம்பெருமா னண்ணுமூர் நனிபள்ளியதே. ௬

அங்கமோ ராறவையும் மருமாமறை வேள்விகளும்
எங்கு மிருந்தந்தண ரெரிமூன்றவை யோம்புமிடம்
பங்கய மாமுகத்தா ளுமைபங்க னுறைகோயில்
செங்கயல் பாயும்வயற் றிருவூர்நனி பள்ளியதே. ௭

திங்கட் குறுந்தெரியற் றிகழ்கண்ணிய னுண்ணியனாய்
நங்கட் பிணிகளைவா னருமாமருந் தேழ்பிறப்பும்
மங்கத் திருவிரலா லடர்த்தான்வல் லரக்கனையும்
நங்கட் கருளும்பிரா னண்ணூர்நனி பள்ளியதே. ௮

ஏன மருப்பினொடு மெழிலாமையும் பூண்டுகந்து
வான மதிளரண மலையேசிலை யாவளைத்தான்
ஊனமில் காழிதன்னு ளுயர்ஞானசம் பந்தர்க்கன்று
ஞான மருள்புரிந்தா னண்ணூர்நனி பள்ளியதே. ௯

காலமு நாழிகையு நனிபள்ளி மனத்தினுள்கிக்
கோலம தாயவனைக் குளிர்நாவல வூரன்சொன்ன
மாலை மதித்துரைப்பார் மண்மறந்துவா னோருலகில்
சாலநல் லின்பமெய்தித் தவலோகத் திருப்பவரே. ௰

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன் - நற்றுணையப்பர் ; இறைவி - பர்வதராசபுத்திரி.



## திருநன்னிலத்துப்பெருங்கோயில் பதிகம் ௯௮

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தண்ணியல் வெம்மையினான் றலையிற்கடை தோறும்பலி
பண்ணியன் மென்மொழியா ரிடக்கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ௧

வலங்கிளர் மாதவஞ்செய் மலேமங்கையொர் பங்கினனுய்ச்
சலங்கிளர் கங்கைதங்கச் சடையொன்றிடை யேதரித்தான்
பலங்கிளர் பைம்பொழிறண் பனிவெண்மதி யைத்தடவ
நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. உ

கச்சிய னின்கருப்பூர் விருப்பன்கரு திக்கசிவார்
உச்சியன் பிச்சையுண்ணி யுலகங்களெல் லாமுடையான்
நொச்சியம் பச்சிலேயா னுரைதீர்புன லாற்றொழுவார்
நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ந

பாடிய நான்மறையான் படுபல்பிணக் காடரங்கா
ஆடிய மாநடத்தா னடிபோற்றியென் றன்பினராய்ச்
சூடிய செங்கையினர் பலதோத்திரம் வாய்த்தசொல்லி
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ச

பிலந்தரு வாயினெடு பெரிதும்வலி மிக்குடைய
சலந்தர னுகமிரு பிளவாக்கிய சக்கரமுன்
நிலந்தரு மாமகள்கோ னெடுமாற்கருள் செய்தபிரான்
நலந்தரு நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ரு

வெண்பொடி மேனியினன் கருநீல மணிமிடற்றன்
பெண்படி செஞ்சடையான் பிரமன்சிரம் பீடழித்தான்
பண்புடை நான்மறையோர் பயின்றேத்திப்பல் கால்வணங்கும்
நண்புடை நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. சா

தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடையன்சுடர் வெண்மழு
படைமலி கையன்மெய்யிற் பகட்டீருரிப் போர்வையினன் [வாட்
மடைமலி வண்கமலம் மலர்மேன்மட வன்னமன்னி
நடைமலி நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. எ

குளிர்தரு திங்கள்கங்கை குரவோடரக் கூவிளமும்
மிளிர்தரு புன்சடைமே லுடையான்விடை யான்விரைசேர்
தளிர்தரு கோங்குவேங்கை தடமாதவி சண்பகமும்
நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. அ

கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவனாய்
அமர்பயில் வெய்தியருச் சுனனுக்கருள் செய்தபிரான்
தமர்பயி றண்விழவிற் றகுசைவர் தவத்தின்மிக்க
நமர்பயி னன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ௰

கருவரை போலரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிர லாலடர்த்தின் னருள்செய்த வுமாபதிதான்
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்றிகழ் செம்பியர்கோன்
நரபதி நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனே. ௯

கோடுயர் வெங்களிற்றுத் திகழ்கோச்செங்க ணான்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயி னயந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடையன்றிரு வாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துளே. ௧௧

திருச்சிற்றம்பலம்



திருநாகேச்சரம் பதிகம் ௯௯

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பிறையணி வாணுதலா ளுமையாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீலமால்விட முண்டதென்னே
குறையணி குல்லைமுல்லை யளைந்துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே. ௧

அருந்தவ மாமுனிவர்க் கருளாகியொ ராலதன்கீழ்
இருந்தற மேபுரிதற் கியல்பாகிய தென்னைகொலாம்
குருந்தய லேகுரவம் மரவின்னெயி றேற்றரும்பச்
செருந்திசெம் பொன்மலருந் திருநாகேச் சரத்தானே. ௨

பாலன தாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித்துக் கருத்தாக்கிய தென்னைகொலாம்
கோல மலர்க்குவளைக் கழுநீர்வயல் சூழ்கிடங்கில்
சேலொடு வாளைகள்பாய் திருநாகேச் சரத்தானே. ௩

குன்ற மலைக்குமரி கொடியேரிடை யாள்வெருவ
வென்றி மதகரியின் னுரிபோர்த்தது மென்னைகொலாம்
முன்றி லிளங்கமுகின் முதுபாளை மதுவளைந்து
தென்றல் புகுந்துலவுந் திருநாகேச் சரத்தானே. ௪

அரைவிரி கோவணத்தோ டரவார்த்தொரு நான்மறைநூல்
உரைபெரு கவ்வுரைத்தன் றுகந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணியும் வரைச்சந்தகி லோடுமுந்தித்
திரைபொரு தண்பழனத் திருநாகேச் சரத்தானே. ௫

தங்கிய மாதவத்தின் றழல்வேள்வியி னின்றெழுந்த
சிங்கமு நீள்புலியுஞ் செழுமால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே
செங்கயல் பாய்கழனித் திருநாகேச் சரத்தானே. ௬

நின்றவிம் மாதவத்தை யொழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேன் மதுவுண்டுவண் டேன்முரலச்
செங்கயல் பாய்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. ௭

வரியர நாணதாக மாமேரு வில்லதாக
அரியன முப்புரங்கள் ளவையாரழ லூட்டலென்னே
விரிதரு மல்லிகையும் மலர்ச்சண்பக மும்மளைந்து
திரிதரு வண்டுபண்செய் திருநாகேச் சரத்தானே. ௮

அங்கியல் யோகுதனை யழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேன் மதுவுண்டுபண் வண்டறையச்
செங்கய லின்றுகளுந் திருநாகேச் சரத்தானே. ௯

குண்டரைக் கூறையின்றித் திரியுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன்மை விரவாகிய தென்னைகொலோ
தொண்டிரைத் துவணங்கித் தொழில்பூண்டடி யார்பரவும்
தெண்டிரைத் தண்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. ௰

கொங்கணை வண்டரற்றக் குயிலும்மயி லும்பயிலும்
தெங்கணை பூம்பொழில்சூழ் திருநாகேச் சரத்தானை
வங்க மலிகடல்சூழ் வயனாவலா ரூரன்சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

இறைவன்-சண்பகாரணியேசுவரர்: இறைவி-குன்றமுலையம்மை.



## திருநொடித்தான்மலை பதிகம் ௱

பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனைவந் தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௧

ஆனை யுரித்தபகை யடியேனொடு மீளக்கொலோ
ஊனை யுயிர்வெருட்டி யொள்ளியானை நினைந்திருந்தேன்
வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை யேறவைக்க
ஆனை யருள்புரிந்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௨

மந்திர மொன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களாற் றுரிசேசெயுந் தொண்டனெனை
அந்தர மால்விசும்பி லழகானை யருள்புரிந்த
துந்தர மோநெஞ்சமே நொடித்தான்மலை யுத்தமனே. ௩

வாழ்வை யுகந்தநெஞ்சே மடவார்தங்கள் வல்வினைப்பட்
டாழ முகந்தவென்னை யதுமாற்றி யமரரெல்லாம்
சூழ வருள்புரிந்து தொண்டனேன் பரமல்லதொரு
வேழ மருள்புரிந்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௪

மண்ணுல கிற்பிறந்து நும்மைவாழ்த்தும் வழியடியார்
பொன்னுல கம்பெறுத றொண்டனேனின்று கண்டொழிந்தேன்
விண்ணுல கத்தவர்கள் விரும்பவெள்ளை யானையின்மேல்
என்னுடல் காட்டுவித்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௫

அஞ்சினை யொன்றிநின்று வலர்கொண்டடி சேர்வறியா
வஞ்சனை யென்மனமே வைகிவானநன் னாடர்முன்னே
துஞ்சுதன் மாற்றுவித்துத் தொண்டனேன்பர மல்லதொரு
வெஞ்சின வானைதந்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௬

நிலைகெட விண்ணதிர நிலமெங்கு மதிர்ந்தசைய
மலையிடை யானையேறி வழியேவரு வேனெதிரே
அலைகட லால்லரையன் னலர்கொண்டுமுன் வந்திறைஞ்ச
உலையணை யாதவண்ண நொடித்தான்மலை யுத்தமனே. ௭

அரவொலி யாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழிதந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தா னொடித்தான்மலை யுத்தமனே. ௮

இந்திரன் மால்பிரமன் னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ ரிவனாரென வெம்பெருமான்
நந்தம ரூரனென்று னொடித்தான்மலை யுத்தமனே. ௯

## சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்

ஊழிதொ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா வஞ்சையப்பர்க் கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம்



சுந்தரமூர்த்தி சுவாமிக ளருளிச்செய்த
தேவாரப்பதிகங்கள்

முற்றும்.



# அருஞ்சொற் பொருளகரவரிசை

# அருஞ்சொற் பொருளகராவரிசை

ஒல்லை - விரைவில், ௨௱ - ௰
ஒறுவாய் - ஒடிந்தவாய், ௯௮ - ௬
ஒன்று - ஒருபாம்பு, ௬ - ௩
ஒன்னலர் - பகைவர், ௨௧௯ - ௯

ஓ

ஓட்டந்து - ஓடி, ௧௩ - ௨
ஓதம் - கடல், ௧௧௮ - ௭
ஓப்பி - ஒடிந்து, ௧௯௪ - ௩
ஓயும - இறக்கும், ௧௩௭ - ௮
ஓரி - நரி, ௨௭ - ௨
ஓரீர் - நாடமாட்டீர்கள், ௧௬ - ௫
ஓவா - நீங்காத, ௩௪ - ௬

க

கங்காளம் - முழுவெலும்பு,
கட்டங்கம் - மழு, ௩௭ - ௭
கட்டி - வெல்லக்கட்டி, ௧௧௨ - ௫
கட்டு - மலக்கட்டு, ௨௮ - ௭
கட்டுவாங்கம் - கைத்தண்டு, ௧௩௭ - ௭
கடம் - மதம், ௱௧ - ௭
கடி - மணம், ௨௪ - ௪
கடிதாய் - கொடுமையாய், ௭௪ - ௧
கடுக - விரைவாக, ௧௪ - ௮
கடுத்து - விசைகொண்டு, ௨௨௰ - ௧
கடுவன் - ஆண்குரங்கு, ௱௩ - ௮
கடுவிருள் - மிக்க இருள், ௬௮ - ௩
கண் - களைகண்; களைகணாகு மிடம், ௰ - ௩
கண்டல் - தாழை, ௩௨ - ௨
கண்ணறையன் - குருடன், ௱௰ - ௯
கண்படுக்கும் - தூங்கும், ௭௧ - ௭
கதி - மேல் நிலை, ௧௫௮ - ௰
கந்து - கந்தம்; மணம், ௬௪ - ௫
கமர் - வெடிப்பு, ௨௩௮ - ௯
கமை - பொறுமை, ௬௨ - ௨
கரந்தை - கரந்தைப்பூ, ௭௬ - ௨
கருக்கம் - கருமை ௭௪ - ௭
கருகல் - கருமை, ௧௧௨ - ௫
கல் - மலை, ௯ - ௧
கல் - கன்மழை, ௰ - ௫
கல்லவடம் - ஒருவகை இசைக் கருவி, ௨௱௮ - ௫
கல்வி - அரித்து, ௩ - ௰
கலம் - மரக்கலம், ௮௨ - ௮
கலி - புகழ், ௨௭ - ௧; வினை, ௪௩ - ௪; ஒலி, ௧௧௩ - ௯; துன்பம், ௨௧௭ - ௨
கலிக்க - ஒலிக்க, ௯௭ - ௨
கலியேன் - வறுமையேன், ௪௧ - ௮
கலை - வஞ்சகம், ௧௬ - ௮
கவ்வை - ஒலி, ௨௱௪ - ௩
கவடு - கிளை, ௧௨௧ - ௬
கவை - வேலை; ௧௯௯ - ௩
கழித்தலைப்பட்ட - இழிந்த, ௧௨௯ - ௫
கழை - மூங்கில், ௨௫ - ௯
கள்ளி - களவாடி, ௮௨ - ௫
களா - களாச்செடி, ௮௨ - ௭
கறி - மிளகு, ௰ - ௨; கறித்தல், ௪௪ - ௬
கறை - இருட்டு, ௬௪ - ௨
கன்னி - கரந்தையென்னும் பூடு, ௮௨ - ௭
கனன்று - தீய்ந்து, ௨௩௧ - ௧

கா

காணம் - காசு, ௧௬ - ௧
காணி - நிலம், ௭௮ - ௩
காம்பு - கைப்பிடிக்கோல், ௱௮ - ௨
காமரம் - இசை, காமரப்பண்ணுமாம், ௪௫ - ௧௧
கார்ஊர் - கருமை ஏறிய, ௩ - ௰
காரகில் - கரிய அகிற்கட்டை, ௩௪ - ௩
காலி - ஆநிரை, ௨௩௧ - ௩
காளம் - நஞ்சு, ௨௱௨ - ௩
காறு - கலப்பையிற் பொருத்தும் இரும்பு, ௬௬ - ௮

கி

கிளரும் - விளங்கும், ௫௫ - ௪
கிளை - தோழன், ௬௯ - ௰
கிறி - பொய், ௱௮ - ௧

கீ

கீழை - கீழ்மை, ௩௨ - ௭
கீள் - அரைஞாண், ௫௮ - ௨

கு

குடகத்திலையம் - ஒருவகைக் கூத்தின் திரிபு, ௨௭ - ௨

# அருஞ்சொற் பொருளகரவரிசை

குடப்பாச்சில் - மேற்குப் பக்கத்தில், ௪௰ - ௬
குடி - அடிமை. ௯ - ௧௧
குண்டாடுதல் - கோட்சொல்லித் திரிதல், ௧௮௨ - ௯
குண்டிகை - குடுவை, ௧௮௪ - ௰
குண்டு - குளம், ௨௧௬ - ௯
குமணமாமலை, ௭௭ - ௯
குமைத்தான் - நசுங்கும்படி உதைத்தான், ௧௩௬ - ௩
குரிசில் - தலைவன், ௬௨ - ௰
குரும்பை - தென்னம்பிஞ்சு, ௪௨ - ௧
குல்லை - துளசி, ௨௩௮ - ௧
குலம் - உயர்வகுப்பு, ௪௯ - ௰
குலவன் - குலமுடையவன், ௭௯ - ௬
குழகர் - இளைஞர், ௭௬ - ௧
குழை - செழுமை, ௨௱௩ - ௯
குழைக்கும் - தழைக்கும், ௧௩ - ௪
குழைவு - உருக்கம், ௨௧௪ - ௯
குற்றி - வருத்தி, ௮௨ - ௪
குறடு - கட்டை, ௧௭௬ - ௫
குறள் - குட்டைவடிவம், ௨௫ - ௮
குறை - குறுகிய, ௨௩௮ - ௧
குறைந்து - தாழ்ந்து, ௪௩ - ௫
குனிவு - வளைவு, ௯௬ - ௯

கூ

கூசல் - நாணுதல், ௨௰ - ௭
கூதல் - குளிர்ச்சி, ௨௱௮ - ௨
கூரை - வீடு, ௨௨ - ௪
கூவிளம் - வில்வம், ௧௯௩ - ௫
கூழை - மெதுவு; இங்கு அமைந்த நடை, ௩௧ - ௧; உறுதியின்மை; ௧௫௧ - ௯; குள்ளம், ௧௮௧ - ௧
கூறு - அருவருப்புத்தன்மை, ௨௭ - ௨
கூறை - உடை, ௭௭ - ௯

கெ

கெதி - கதி, ௧௯௮ - ௯

கே

கேழல் - பன்றி, ௪௬ - ௮

கை

கைதை - தாழை, ௧௯௩ - ௫
கைப்பர் - வெறுப்பர், ௧௪௯ - ௧
கைம்மை - அழகு, ௩௨ - ௬

கொ

கொங்கு - தேன், ௨௮ - ௪
கொட்டு - இசைக்கருவியின் ஒலிகள், ௩௪ - ௬
கொட்டும் - ஒலிக்கும், ௭ - ௬
கொடிறன் - உறுதியுடையவன், ௪௧ - ௰
கொடுகொட்டி - சிவபிரான் கைகொட்டியாடுங் கூத்து, ௭௭ - ௫
கொடும்பாடன் - கொடுமைசெய்வோன், ௱௰ - ௯
கொத்தை - உள்ளீடில்லாதது; பழுது; அறிவிலான், ௨௩௧ - ௨
கொதி - சினக்கொதிப்பு, ௧௭௯ - ௪
கொந்து - கொத்து, ௬௧ - ௭
கொல்லி - கொல்லுபவன், சிவன், ௨௯ - ௮
கொல்லை - காடு, இங்குச் சுடுகாடு, ௬ - ௧; கொலை, ௧௩௬ - ௩

கோ

கோ - மிகவும், ௪௰ - ௬; ஆன், ௧௭௨ - ௧
கோசிகம் - பட்டுத்துணி, ௨௱௮ - ௪
கோட்டம் - கோயில், ௪௬ - ௬
கோடு - மரக்கிளை, ௰ - ௪; கொம்பு ௭. - ௧௧; கரை, ௧௧௫ - ௮; வளைவு, ௧௫௮ - ௰
கோது - குற்றம், ௫௧ - ௩
கோல் - அம்பு, ௨௪ - ௪; கோலம், அழகு, ௭௰ - ௨
கோவை - ஒழுங்கு, இங்கு ஒழுக்கம், ௩௩ - ௯
கோள் - கொலை, ௮ - ௯; வலிவு, ௯௬ - ௮; ஒருவகைக் கொடிய பாம்பு, ௧௨௭ - ௫

ச

சகளி - உருவம், ௧௬௫ - ௫
சங்கை - ஐயம், ௨௯ - ௯
சண்ணித்த - பூசிய, ௮௮ - ௬
சதி - அழிவு, ௧௭௫ - ௨
சந்து - அழகு, ௫௯ - ௭
சரங்கோல் - அம்பு, ௨௨௬ - ௫
சரிக்கும் - அலையும், ௨௪ - ௩

சலச்சலம் - சினமிகுதி, ௬அ - அ
சலம் - வினை, ௫௪ - ௧
சழக்கு - பொய், ௧அ௬ - ௰

சா

சாடி - அடித்து, ௩௪ - ௪
சாத்து - உதை, ௧௨௰ - ௨
சார்வு - துணை, ௫௧ - ௩; புகல், ௭அ - ௧
சால - மிகவும், ௨௩௬ - ௰

சி

சிகரம்முகம் - மலையுச்சி, ௧௧ - ௭
சிட்டு - சிறிது, சிக்கனம், ௫௰ - அ
சிந்துரம் - சிவப்பு, ௪அ - ௧
சில் - தேரின் உருள், ௬ - ௧
சில்பலி - சிறிய பிச்சை, ௨௩ - ௧
சில்லை-இளம்பருவத்துடுக்கு, ௱௪-௨
சில - சிறிது, ௫௧ - ௬
சிலம்பும் - ஒலிக்கும், ௩௬ - ௪
சிலைக்கும் - ஆரவாரிக்கும், ௨௩ - ௧
சிம்புளித்து - அலைத்து, ௬௧ - ௧
சிம்மாந்து-செம்மாந்து, இறுமாந்து, ௬௧ - ௧
சிறுவன் - புதல்வன், ௪௫ - ௧௧

சு

சுரிகை - உடைவாள், ௱௰ - ௰
சுவண்டு - சுவடு, கபடம், ௱௧ - ௪

சூ

சூதம் - மாமரம், ௨௩௰ - ௬
சூது - சொக்கட்டான் ஆடுங் காய், ௨௱௭ - ௧
சூழல் - உத்தி, ௧ - ௧; சுற்றுப்புறம், ௧௫ - ௪
சூழறும் - சூழ்தலறும், பிரியும், ௧௧௧ - ௬
சூளறவு - ஆணை, ௨௧௧ - ௧
சூளிகை - உப்பரிக்கை, ௪௩ - ௩
சூளறும் - ஆணையிடும், ௧௨௰ - ௧
சூறைப்பங்கியர்-சுருண்டமயிரினர், ௧௧௭ - ௪

செ

செக்கர் - சிவப்பு, ௨ - அ
செட்டி - சிக்கனக்காரி, ௱௩ - ௧
செடி - தீமை, ௨௭ - ௩, குற்றம், ௩௬ - ௬
செடிச்சிகள் - தீயபெண்டிர், ௱௩-௭
செய் - கழனி, ௩௩ - ௰
செரு - போர், ௪௩ - ௨
செருக்கு - மதர்ப்பு, ௧௫ - ௫
செலவு - செல்லுதல், ௨௩ - ௧
செற்றது - அழித்தது, ௧௧ - அ
செறிவு - அடக்கம், ௧௨௨ - ௩
செறு - வயல், ௧௧௨ - ௨
செறுத்தீர் - சினந்தீர், ௨௩ - ௨

சே

சே - காளைமாடு, ௪௬ - ௪
சேகரம் - தலை, சடைமுடிப்பு, ௧௭௧ - ௫
சேடன் - பெருமையுடையவன், ௧௧௪ - ௬
சேடு - பெருமை, ௪௧ - ௰; அழகு, உயர்வுமாம், ௫௩ - ௨; சேறு, ௧௪௧ - ௧
சேத்தவர் - சேதித்தவர், அழித்தவர், ௫௰ - ௬
சேத்திட்டு - சிவந்து, அதாவது சினந்து, ௬ - ௧
சேந்தர் - முருகர், ௧௬௩ - ௬
சேயார் - தொலைவிலுள்ளவர், ௫௰ - ௰

சொ

சொல்லல் - பாடல், ௨௱௩ - ௰

சோ

சோத்திட்டு - வணங்கி, ௬ - ௧

ஞா

ஞானன் - அறிவுடையவன், ௨௱ - ௧

த

தகரம் - தகரமரம், ௧அ௧ - ௨
தட்டு - தடை, ௱௪ - ௩
தண்டலை - சோலை, ௪௧ - ௧
தரிக்கும் - தாங்கும், ௨௪ - ௩
தவ்வை - தாய்; ௨௧ - ௧
தழலும் - எரியும், ௩௩ - ௧
தளவு - மல்லிகை, ௨௧ - ௧
தளி - கோயில், ௧௧அ - ௬
தறி - வெடிப்புத்தனம், ௧அ௫ - ௪
தறை - தரை, ௧௨௧ - அ

தா

தாடு - ஒறுத்தல், ௨௨௨ - ௧

## அருஞ்சொற்பொருளகரவரிசை

தாரம் - முத்து முதலிய அரும் பண்டங்கள், ககூக - எ
தாரை - வழி, உ௩ய - ச
தாழ - தொங்க, கஅ - ௩

தி

திணைகொள் செந்தமிழ், கசாச - உ
திப்பிய - ஒளிவடிவான, ௩கூ - உ
திமில் - மரக்கலம், உஉ௩ - க
திரங்கல் - தோல்திரைந்த, உகரு, எ
திரு - அழிவிலாச்செல்வம், பேரின்பம், உஎ - ௩

தீ

தீற்றி - பூசி, ௱அ - உ

து

துச்சேன் - கீழ்மையேன், ௩கூ - உ.
துணிவண்ணம் - தெளிந்த மேனி, அ - அ
துதைந்த - படிந்த, ருய - எ
துயக்கு - சோர்வு, தொடக்குமாம், அ௩ - ய
துற்றரை - உண்பாரை, ருசா - கூ
துற்று - உணவு- ருசா - கூ
துறு - துறுத்தகல், உஉ- ௩
துன்ன - நெருங்கிய, ருசா - கூ; தைக்கப்பட்ட, அ௩ - ௩
துனிவு - பிணக்கு, கூசா - கூ

தூ

தூங்கும் - ஒழுகும், ருஎ - ச
தூர்த்தர் - கொடியர், ககூ௩ - ௩
தூறு - செடிக்காடு, ௱ச - உ

தெ

தெழித்திட்டு - அதட்டி, உரு - எ
தெழிப்பாய் - ஓட்டுவாய், ருஎ - ரு
தெற்றி - திண்ணை, கசாச - க
தெற்றும் - படரும், சச - சா
தென் - அழகு, ககூகூ - ௩

தே

தேற்றாதன - தெளியப்படாதன, உ - அ
தேறல் - தெளிதல், இங்குத் தெளிவையுணர்த்தும், க௩ - ௩
தேன் - வண்டு, உஎ - க

தொ

தொக்காய் - சேர்ந்தாய், கஉய - ௩
தொட்டவன் - வளைத்தவன், சாய - ய
தொட்டாய் - பற்றினாய், உ - அ
தொண்டை கொவ்வைக் கனி, கூசா - கூ
தொறுவில் - மந்தையில், ககஉ - உ

தோ

தோடு - இதழ், சா - ௩
தோற்றம் - பிறப்பு, உய - உ

ந

நச்சு-விருப்பம்,அடைவுமாம்,௩ரு-க
நசை - விருப்பம், உஉ - ரு
நத்தார் - பகைவர், உ௱ - க
நத்தும் - விரும்பும், உ௱க - எ
நலத்தமிழ், சகூ - ய
நலனே - இன்பமே, கச - எ
நவின்றோர் - கற்றோர், சிவன், ௩ய - ௩
நள் - நடு, ௩ய - ௩

நா

நாட்டம் - நோக்கம், சசா - சா
நாண் - அரைஞாண், ௩கூ - க
நார் - அன்பு, கக - கூ
நார்நுதல் - நெஞ்சைஅள்ளும் அன்பியல்பு வாய்ந்த நுதல், கக - கூ
நாளார் - கூற்றுவனார், ருகூ - சா
நாறிய - விளங்கிய, கககூ - க
நானிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், கூ - க

நி

நித்தல் - நாடோறும், கசா - க
நிலவும் - விளங்கும், ய - ரு
நிவவு - ஒரு சிற்றாறு, கூ - க

நீ

நீர் - நீர்மை, இங்கு நிறம், உ - அ
நீர்கள் - நீங்கள், எசா - ௩
நீள்நீள் - மிகவும் நீண்ட, கக - கூ

நு

நுங்கி - விழுங்கி, கஉ௩ - கக

நூ

நூறினார் - அழித்தார், ௱ச - க

நெ

நெடுங்காற்று - ஓடுங்காற்று, அ-ம
நெண்டிக்கொண்டு - நெளிந்து கொண்டு, கஅசு - அ
நெதி - செல்வம்; 'நிதி' யென்னுஞ் சொல் திரிந்தது, கங - ரு
நெய் - தேன், உஎ - க
நெல்வால் - நெல்லின் நுனி, கக-சு
நெறி - நெளி, ம - உ

நே

நேடி - தேடி, கக - கூ

நொ

நொடிக்கும் அளவு, கசு - கூ
நொந்தா - அவியாத, ருங - க
நொய்யேன் - சிறியேன், கஉங-கக

நோ

நோந்தனை - நோகுமளவும், சுஅ-எ

ப

பக்கு - பிளவு, உஉக - ங
பகடு - ஆண்யானை, ருஎ - எ
பகழி - அம்பின் முனை, கஉஉ-சு
பகுவாய் - பிளந்தவாய், உஎ - உ
பஞ்சவடி - பூணூல், கஉஎ - சு
பட்டன் - சிவன், கசஅ - ம
பட்டிகை - இடுப்பிற் கச்சுபோற் கட்டப்படுந் துண்டு, ளம - ம
பட்டிப்பெருமான் - கள்ளப்பெருமான், ககஉ - ச
பட்டியேறு - இளைய ஏறு, அடங்காத ஏறுமாம், எகூ - உ
படப்பு - இடம், கஅச - ம
படப்பை - தோட்டம், கஅஉ - ங
படம் - போர்வை, ருஎ - எ
படம்பக்கம் - இஃதொரு வகைப் பறை, எ - சு
படி - முறை, எஎ - ம
படியவன் - உருவினன், ருரு - சு
படுகாடு - சுடுகாடு, எ - சு
படுவிப்பாய் - அகப்படுவிப்பாய், சுஅ - கூ
பண்டங்கள் - பாண்டரங்கள், ருரு-உ
பண்டம்-பொருள், இங்குப் பேரின்பம், உ - ரு
பணம் - பாம்பின் படம், ஙஎ - அ
பணி - படத்தையுடையது; அது பாம்பு, ஙஎ - ம
பணை - வயல், உஉ - சு
பயிக்கம் - பிச்சை, ககஎ - ங
பயில்வு - பழக்கம், உகங - சு
பயின்று - பழகி, ஙங - உ
பரசு - மழு, சுக - அ
பரவு - வழிபாடு, உகங - ரு
பராமரியா - ஆராய்ந்து, உளரு - க
பரியவன் - அன்பன், ருகூ - அ
பரிவு - அன்பு, ஙம - க
பலம்-பழம், சச-எ, பயன், கசஉ-கஉ
பறி - கொள்ளை, ககூஎ-க, உடம்பு, ககூஎ - உ; பொன், ககூஎ - ச
பறிய - தேய்ந்தொழிய, உஙம-உ
பறையும் - நீங்கும், ககூ - கக
பறையேன் - சொல்லேன், சம-சு
பன் - சொல்லல், எ - சு
பன்னகம் - பாம்பு, ககூரு - சு
பனுவி - சொல்லி, கஎம - சு

பா

பாங்கு - நன்மை, ஙஉ - ச; அழகு, ககஉ - சு
பாடு - பக்கம், ஙச-ரு; ஒலி, ககச-சு
பாணி - இசைப்பாட்டு, கசு - ரு
பாயின - பரந்த, ஙஅ - கஉ
பாழி - ஊர், சஅ - ஓ
பாறு - பருந்து, சுங - அ

பி

பிண்டம் - பிச்சை; இங்குப் பிச்சைப்பாண்டம், சு - உ; உடம்பு, உஅ - சு
பில்கும் - சிந்தும், சக - அ
பிலம் - குகை, உஙஎ - ரு
பிறங்கும் - விளங்கும், கங - உ

பீ

பீடு - பெருமை, உகூ - ம
பீழ்ந்த - ஒடித்த, கசக - அ
பீறல் - கிழிச்சல், ககஎ - ச
பீறி - கிழித்து, கஅ - சு

பு

புகர் - அழகு, கங - உ
புண்ணியன் - வினையில்லாதவன், ஙம - உ

புரிந்து - விரும்பி, உள - க
புரிவு - செயல், ௯ய - க
புரை - உயர்வு, எக - ௪
புல்கும் - தழுவும், கஅ - ௫
புல்லி - பொருந்துவோன், அவன் சிவன், உக - அ
புள்ளுவர் - பொய்யர், ௯ய - ௯
புற்கு - புகர்நிறம், கஉய - ௪
புறவு - முல்லைக்காடு, கக - அ
புன்சடை - புற்கென்னு நிறமமைந்த சடை, ௯எ - எ

பூ

பூச்ச - நெருங்கிய உடனுறைவு, நட்பு, எ - ௫; பகட்டு, ௯௬ - ௪
பூணி - எருது, எஅ - ௯
பூதி - நீறு, க௪க - ய
பூழை - சந்து, கஅக - க

பெ

பெட்டன் - அவாவுடையவன், கஉஅ - உ
பெண்ணை - பனை, கஅஉ - ௯
பெற்றம் - ஆன், உ - ௪
பெற்றிமை - நன்மைத் தன்மை, ௪௪ - ௬

பே

பேதுறவு - மதிமயக்கு, உ௭௬ - ௯
பேழ் - பெரிய, கஉ௫ - அ
பேழ்கணிக்க - அஞ்ச, உ௯அ - க
பேழை - பெருமை, கஉஎ - க

பை

பைத்த - பசுமையான, உஅ - ௫
பைதல் - இளைய, கக௯ - ௫

பொ

பொக்கம் - பொய், கக௯ - ௬
பொத்தின - மூடிய, கஉஉ - க
பொத்து - குற்றம், உய - ௬; பொந்து, அய - க.
பொலி - விளக்கம், கக௯ - க
பொள்ளல் - பொத்தல், க௪எ - ௬
பொறி - புள்ளி, ஒளியுமாம், உ௫ - அ

போ

போதா - அறிவுடையவனே, கக௯ - க

ம

மகம் - இன்பம், க௯ய - க
மகரக்குழை - மகரமென்னும் மீன் வடிவாய்ச் செய்யப்பட்ட காதணி, கக - எ
மஞ்சு - அழகு, எ - ௪
மட்டு - தேன், உஅ - எ
மடங்கலான் - சிங்கவுருவினன், கஅ - க
மடம் - இளமை, ௪ய - ௬
மடை - அணை, ௬எ - உ
மண்ட - அமுங்க, ௪௯ - உ
மணி - செம்மணி, அ - அ; அழகு, க௯௯ - அ
மத்தம் - களிப்பு, ௯௯ - உ; ஊமத்தை, கஎக - ௯
மந்தி - பெண் குரங்கு, ௱௯ - அ
மயக்கம் - மலத்தின் மயக்கவறிவு, உஅ - எ
மராமரம் - வெண்கடப்ப மரம், அஅ - ௫
மருது - மருதமரம், உக - ய
மருப்பு - கொம்பு, உ௯ - க
மலக்கு - கலக்கம், உஉ - அ; மலங்குதல், ௬அ - அ
மலி - நிறைந்த, கக - ௬
மலைத்த - நிறைந்த, க௯க - க
மழலை - இளமை, ௯உ - ௫
மழை - மேகம், க௯ - ௪; குளிர்ச்சி, உ௫ - க
மறித்தல் - மடக்குதல், உக - உ
மனைவாழ்க்கை - இல்வாழ்க்கை க௪ - அ

மா

மா - கருமை, ய - உ
மாடு - செல்வம், ௯௪ - ௫
மாடுவன் - செய்வன்; அருளிச்செய்வன், ௱எ - க
மாணி - திருமணமாகாதவன், க௬௬ - க
மாத்தான் - பெருமையுடையவன், க௬க - ௪
மாதிமை - அழகு, ௱ய - ய
மாந்திய - மந்தமான, ககஎ - ௪
மாயணி - மாணிக்கம், ௬ - ௯
மால் - மயக்கம், ௫௪ - ௫; மிகுந்த, கஎக - ய

மாழை - அழகு, மாவடுவெனவு
மாம், கஉ௫ - ௰
மான்மறி - மான்குட்டி, ௫௰ - ௪
மான்று - மயங்கி, கஎக - ௰

மி

மிடுக்கு - வலி, ௪எ - ௰
மிண்டு - பிடிவாதம், உ௱௫ - க
மிறை - குற்றம், க௮௫ - ௪

மீ

மீ - மேல், க௬ - ௮
மீவான் - மேலிடமாகிய வானம்,
க௬ - ௮

மு

முகப்பு - இடம், ௬௰ - க
முசுக்கள் - ஒருவகை முரட்டுக்
குரங்குகள், ககள - ௫
முஞ்சி - நாணற்புல், ௱உ - க
முட்டாமே - தடைபடாமல்,
எ௰ - ௫
முட்டைமனம் - அறியாமை நெஞ்
சம், உ௰ - ௮
முடுகு - வலி, கக௬ - க
முடை - புலால் நாற்றம், ௬ - ௫
முண்டம்-தலை, இங்குத் தலைமாலை,
௬ - உ
முண்டல் - முட்செடிகள், ௫உ - உ
முதல் - முதற்பொருள், ௫௫ - க
முரல - இசைக்க, ௪௪ - ௮
முரிக்கும் - ஒடிக்கும், உ௪ - ௫
முழை - புற்று, உ௫ - க; குகை,
௱௫ - ௬
முளிறு - கூர்மை, உ௱௫ - ௪
முளை - இளமை, ௱௫ - ௪

மூ

மூக்கப்பாம்பு - கொடிய பாம்பு;
மூக்க - மூர்க்கமான; மூத்தல்
முரடாதலாதலின், அஃதவ்வழி
வந்ததென்க, ௬ - உ
மூசெனும் - மூசும், ௮௫ - உ
மூரி - வலி, ௫௫ - ௬
மூவேன் - மூப்படையேன், உ - ௪

மே

மேதி - எருமை, ௪௫ - உ
மேதை - பேரறிவு, ௪௫ - உ
மேலையார் - மேலோர், உ௫௪

மை

மை - கருநிறம், உ௫ - எ
மைந்து - அழகு, ௫க - எ

மோ

மொட்டு - அரும்பு, ௫௪ - ௬
மோடு - அறியாமை, உஉஉ - க
மோந்தை - ஒருவகை இசைப்
பறை, கக௮ - க
மோழைமை - பேதைமை,
உ௰ - ௮
மோழுந்து - செல்வச்செருக்குக்
கொண்டு, மறந்துமாம், ௫௫-௫

வ

வங்கம் - மரக்கலம், கஉ௫ -கக
வசவு - வைதலுரை, திட்டுப்பேச்சு,
௱௫ - க
வஞ்சி - ஒருவகைக் கொடி,௱உ - ௰
வடம் - கழுத்திற் கட்டுங் கயிறு,
௪எ - க
வடி-கூர்மை, மாவடுவுமாம், உ௰-௫
வண்ணம் - உவமஉருபு, மேனி,
நிறம், வடிவு, ௮ - ௮
வம்பு - மணம், ௬௰ - உ
வரி - நீட்சி, உ௰ - ௫
வரிந்த - கட்டமைந்த, ௫௬ - ௫
வரியான் - உயர்ந்தவன், க௪எ - எ
வரைக்கிழவன் - மலைக்கடவுள்,
௫உ - ௫
வலையம்-வலை; அம் சாரியை,க௬-௮
வற்கென்றிருத்தல் - சும்மாவிருத்
தல், கஉ௰ - ௪

வா

வாசிகை - தொடுத்த பூமாலை,
கக௫ - உ
வாணுர்நுதல் - வாள் நார் நுதல்,
கக -க
வாயில் செய்தார் - வழக்க முண்
டாக்கினர், இங்கு வாழ்க்கை
செய்தாரென்பது, க - க
வாயன - வாய்ப்பாயின, பொருந்
துவன, ௭௪ - ௰
வார் - கச்சு (Body)
வாரம் - அன்பு, கஎ - க
வாரும் - ஒழுகும், உஉ௮ - க
வால் - நுனி, கக - ௬

# அருஞ்சொற்பொரு ளகரவரிசை

வாள் - ஒளி, ௧௧ - ௯
வாளாங்கு - சும்மா, ௨௩௧ - ௧
வாளி - அம்பு, ௪௪ - ௯

### வி

விகிர்தர் - மெய்யர், ௩௭ - ௭
விடக்கு - ஊன்; ௧௪௭ - ௯
விடங்கம் - அழகு, ௱௯ - ௪
விடங்கராகி - அழகராகி, ௧௮ - ௬
விரகு - உணர்வு, ௭ - ௫
விரிநூல் - மறைநூல்; ௪௯ - ௪
விரை - மணம், ௫௪ - ௮
வில்லி - வில்லையுடையவன், சிவன், ௨௯ - ௮
விலங்கலான் - மலையையுடையவன், ௩௧ - ௧
விழுத்தும்-விழச்செய்யும், ௧௯௧-௭
விளாகம் - இடம், ௨௨ - ௬
வினைக்கட்டு - மலப்பிணிப்பு, ௪௭ - ௧௧

### வீ

வீ - மகரந்தப்பொடி, ௯௭ - ௧
வீடின் - இறப்பின், ௧௩ - ௫

### வெ

வெட்டென - கடுமையாக, ௱௪ - ௩
வெருவ - அஞ்ச, ௬௯ - ௧
வெள்ளிடை - வெட்டவெளி; ௮-௰
வெளிறு - அறியாமை, ௨௱௨ - ௪
வெறி - மணம், ௭௯ - ௬

### வே

வேட்டம் - விருப்பம், ௪௬ - ௬
வேடித்தொண்டர் - மறவர், ௭௫-௪
வேலை - கடல், ௫௭ - ௩
வேள் - வேட்கை, ௮ - ௯

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி

# பாட்டு முதற்குறிப் பகராதி





# தொடர்புரை

மூன்றாண்டு குழந்தையாய்ச் செந்தமிழ் பாடிச் சமணிடர் தீர்த்துச் சைவங் காத்த ஞானசம்பந்தப் பெருமான் தேவாரத் திருப்பதிகங்களும், எண்பது ஆண்டுகாறுந் தமிழுலகில் நிலவித் தொண்டிநெறி விளக்கிய நாவுக்கரசர் நற்றமிழ்ப் பதிகங்களும், இறைவனால் தடுத்தாட்கொள்ளப் பெற்றுக் காதலன்பின் அடிப்படையி லமர்ந்து அருட்பார்வை யுடையராய் வாழ்க்கைநெறி தெளிவித்த நம்பியாரூரரின் இவ் வேழாந் திருமுறைத் திருப்பதிகங்களும் ஓதியுருகிய மெய்யன்பர்கள் இனி ஓதுதற்குரியன, இறைவனே குருவடிவில் எழுந்தருளித் தம்மையாட்கொள்ளும் பெறற்கரும் பேறு பெற்றுப் புத்தம் வென்ற மாணிக்கவாசகப்பெருமானருளிய திருவாசகந் திருக்கோவையாரான எட்டாந் திருமுறையும், திருமாளிகைத் தேவர் சேந்தனார் முதலான பேரருட் சான்றோ ரருளிச்செய்த திருவிசைப்பாத் திருப்பல்லாண்டுகளான ஒன்பதாந் திருமுறையுமாகும்.

அவ்விரண்டு திருமுறைகள்தாமும் இப்பொழுது ஒரே நூலாய் அச்சிடப்பட்டு வருதலின், அவற்றையும் அன்பர்கள் வாங்கியோதிச் சிவத்திருவருள் பெறுவாராக!